# வேலையை இழந்தது என்னுடைய தவறு என்றார்கள்!

நானாகத்தான் வேலையைப
போக்கிக் கொண்டேன்
என்றார்கள் வீட்டில் எல்லோரும்
எனக்கு உடலில் சோர்வு,
மனத்தில் தெம்பில்லை என்றால்
என் குற்றமா என்ன!












போஷாக்குக் குறைவி
னால் ஏற்படும் அசதி
யைப் போக்க ஹார்லிக்ஸ்
அருந்தும்படி
டாக்டர்கள் சிபார்சு
செய்கிறார்கள். ஆகட்
சத்து மிகுந்த பாலுடன்
கோதுமை மாவு,
மால்ட் பார்லி இவற்
றின் போஷாக்குச்
சத்துக்களும் கொண்டது
தான் சக்தியளிக்கும்
ஹார்லிக்ஸ். ஹார்லிக்ஸ்
பருகுவதற்கு சுவையா
னது—அது தவறாமல்
பலனளிக்கிறது!

## ஹார்லிக்ஸ்

அதிக சக்தி யளிக்கிறது!

# கல்கி

## பொருளடக்கம்

பராபவ சித்திரை 4 • ஏப்ரல் 17



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே

### புத்தாண்டு மலர்



புத்தாண்டு பிறக்கிறது என்றால் கலியுகம் இன்னும் ஒரு வருடம் முற்றுகிறது என்றே அர்த்தம். இச்சமயத்தில் கலியின் போக்கைத் தடுத்து சத்திய யுகத்தை நினைப்பூட்டும் மகனீயர்களை நினைந்து வணங்குவதே நமக்குத் தென்பூட்டும் ஔஷதம். புனிதரைத் தொழுது புத்தாண்டைத் தொடங்குகிறோம்.





மலர் 25 ● இதழ் 38

# பராபவம் வெற்றியாகட்டும்!

புத்தாண்டை வரவேற்பதும் அதில் புது நலன்களும் பலன்களும் பொலிய வேண்டுமென்று வாழ்த்துவதும் ஒரு சம்பிரதாயம்.

இது வெறும் சம்பிரதாயமாக மட்டும் இருந்து விடாமல் உண்மையாகவே பொருள் பெறுகிற வாய்ப்பை அளிக்கவேண்டிய வருஷம் 'பராபவ'.

அறுபது வருடங்களுக்கும் பெயரிட்டிருக்கும் முறையை நோக்கும்போது உலக வாழ்வில் இன்பத்தைப் போலவே துன்பத்துக்கும் நிச்சயமாக இடமுண்டு என்ற உணர்வு ஏற்படும். சர்வஜித், நந்தன முதலிய மங்கலமான பெயர்களைப் போலவே விரோதி, குரோதி முதலிய அமங்கலமான பெயர்களும் வருடங்களுக்குச் சூட்டப் பட்டிருக்கின்றன. 'பராபவ' என்ற பெயரும் எடுத்த எடுப்பில் அமங்கலமாகத்தான் தோன்றும். 'பராபவ' என்றால் 'தோல்வி' என்று பொருள்.

ஆழ்ந்து யோசித்தாலோ இதுவே மங்கலத்தைக் குறிப்பதாகத் தெரியும். ஏனெனில் ஒருவருக்கு வெற்றி கிட்ட வேண்டுமாயின் வேறு ஒருவர் தோல்வியடையத்தானே வேண்டும்? இது அச்சொல்லிலேயே உட்கிடையாக உள்ளது. ராவணனும் சூரபன்மனும் தோல்வியடைந்ததால்தான் ராமபிரானும், கந்தவேளும் வெற்றி காண முடிந்தது. தருமம் ஜயம் பெற வேண்டுமாயின் அதருமம் தோல்வி கண்டேயாக வேண்டும். இன்று நடைமுறையில் ஓங்கியுள்ள தீய சக்திகளுக்குத் தோல்வி ஏற்படப் போவதைத்தான் 'பராபவ' குறிக்கிறது எனில் அதில் நாம் மகிழ்ச்சியே கொள்ள வேண்டும். ஏனெனில் எல்லாத் துறைகளிலும் இப்போது அதரும சக்திகள் தான் தலையெடுத்து நிற்கின்றன.

அரசியல் துறையில் இது தனிப்பட்ட முக்கியத்துவம் பெறுகிறது. ஏனெனில் இந்தப் 'பராபவ' ஆண்டில் தான் பொதுத் தேர்தல் நிகழ விருக்கிறது. இன்று ராவண - சூரபன்ம தர்பார் நடத்தும் அதரும சக்திகள் தேர்தலில் தோல்வியடையுமாயின் 'பராபவ'மே ஜனநாயகத் தத்துவத்தின் வெற்றியாக, சத்தியத்தின் வெற்றியாக, தருமத்தின் வெற்றியாக, பாரதப் பண்பின் வெற்றியாக அமையும். அவ்வாறு பராபவம் என்பது தீய சக்திகளைச் சார்ந்திருக்கும்படி செய்ய வேண்டிய பொறுப்பு மக்களுடையது.

'மாயை விலக வேண்டும்' என்று வேதாந்தத்தில் சொல்வார்கள். இன்று அரசியலில் அதையேதான் கூறவேண்டியிருக்கிறது. சோஷலிஸம் என்பது ஒரு பெரிய மாயையாக மக்களைக் குழப்பி வருகிறது. மக்களுக்கு இம் மாயை தெளிந்தாலே விமோசனம் அடைவோம். தனி முதலாளிக்குப் பதில் சர்க்காரே தொழில்களை எடுத்துக் கொண்டால்தான் அனைவருக்கும் உரிய வசதிகள் கிடைக்கும் என்ற சோஷலிஸ நம்பிக்கை பல நாடுகளிலும் பொய்த்தே வருகிறது. மக்களுக்குத் தேவைப்பட்ட பண்டங்கள் உற்பத்தியாகவும், அவை போட்டி முறையில் விற்பனையாகி மக்களுக்கு உரிய விலையில் கைக்குக் கிட்டுவதற்கும் பொருளாதார சுதந்திரமே வழி என்பதை சோஷலிஸ நாடுகள் பல ஒப்புக் கொண்டு விட்டன. எனவே நாமும் நமது மாயப் பிரமைக்கும், பொறாமை, துவேஷம் முதலியவற்றுக்கும் பராபவம் தேடி, 'பாரத சமூகம் அறிவுடைய சமூகத்தினர்' என்ற தொன்று தொட்ட கீர்த்தியைக் காத்துக் கொள்வோமாக!

பொருளாதார சுதந்திரத்தை இழந்தால் அதன் விளைவாக ஆன்ம சுதந்திரத்தையே இழப்போம். முனிபுங்கவர்களும், கலை வித்தகர்களும் தோன்றிய இந்நாட்டில் இத்தகைய விபரீதம் நேராமல் இறைவன் காக்க வேண்டும் என்பதே நமது புத்தாண்டுப் பிரார்த்தனை: அதுவே மக்களுக்கு நாம் அளிக்கும் புது வருட வாழ்த்துமாகும்.









பாக் ஜலசந்தியை ஸென் கடந்து விட்டார். நிதி மந்திரியும் இந்த வெள்ளத்தைக் கடப்பாரா?



# ராஜாஜியின் கருத்துக்கள்

- "ராஜாஜி ஆட்சியில் பட்டினிச்சாவு"
- கம்யூனிஸ்ட்டுகளின் உறவு

இந்த ஆண்டில் நேர்ந்த பட்டினிச் சாவு பற்றித் தில்லித் தலைவர்கள் விசாரப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் திரு காமராஜ் அவர்களோ 1952ல் நேர்ந்த பட்டினிச் சாவுகளைப் பற்றி இப்போது விசாரப்படுகிறார். '1952ல் ராஜாஜியின் ஆட்சியில் பட்டினிச் சாவுகள் நேரிட்டன ; அதுபோல் இப்போது நிகழவிட மாட்டோம்' என்கிறார். 1966ல் பட்டினியால் சாவு ஏற்படுவதற்கு 1952ம் வருஷத்திய விவகாரத்தின் மூலம் அவர் விளக்கம் தருவது ஏனெனில், அவருக்கென்றே ஒரு பிரத்தியேகமான தர்க்கவாதம் இருக்கிறது. அன்று நான் சென்னையின் அரசாட்சித் தலைமையில் இருந்தேன் என்பதையும், இன்று சர்க்காரை எதிர்க்கிறேன் என்பதையும், மையமாக வைத்து 1952-ஐ 1966உடன் இணைத்துத் தர்க்கசூத்திரம் செய்திருக்கிறார். அப்போது தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவராயிருந்த திரு காமராஜ் அவர்களின் விடாத கோரிக்கையின் மீதுதான் நான் 1952ல் சென்னையின் முதன்மந்திரி பதவியை ஏற்றேன் என்பதை மக்கள் மறந்திருக்கலாம். அச்சமயத்தில் நான் மிகவும் சுகவீனமுற்றிருந்தேன். என்னுடைய வேண்டுகோளுக்கு மாறாக என்னை இருமுறை தில்லி அரசாங்கத்திலேயே வைத்துக் கொண்ட நேரு அவர்களே எனக்கு விடுதலை தந்ததன் பேரில், 'நான் பதவிகளிலிருந்து இறுதியான நிலையான விடைபெறுகிறேன்' என்று அவரிடம் கூறிச் சென்னைக்கு வந்தேன். திரு காமராஜ் அவர்களும், அப்போது முதன்மந்திரி பதவியிலிருந்து விலகிய திரு குமாரசாமி ராஜா அவர்களும் நேருஜியிடம் சென்று நான் ராஜ்ய முதல்வர் பதவி ஏற்க அவர் உதவ வேண்டுமெனக் கேட்டுக் கொண்டபோது நேரு அவர்கள் என்னை வற்புறுத்துவதற்குத் தாம் உடன்பட முடியாது என்று கூறி விட்டார். அப்போதிருந்த சென்னை சட்டசபையில் ஐம்பது சதவிகித ஸ்தானங்கள் எதிர்க் கட்சிகளுடையது. தீவிர கம்யூனிஸ்டுகளும், ஆந்திரப் பிரிவினை கோரும் தீவிரவாதிகளும், இன்றுபோலன்றித் தீவிரக் கொள்கைகளைப் பின்பற்றிய தி.மு.க.வும் அடங்கியது இந்த எதிர்ப்பு. இவர்களைச் சமாளித்துச் சர்க்கார் நடத்தும் பொறுப்பு முதன்மந்திரிக்கு ஏற்பட்டிருந்தது. இது காரணமாகவேதான் காமராஜ் அவர்கள் அப்பதவியை நான் ஏற்க வேண்டுமென விரும்பினார். கடைசியில் நானும் இணங்கினேன். பிற்பாடு எனக்கு எதிராக ஒரு கூட்டம் உருவானதை அறிந்தபோது நேரு அவர்கள் மிகவும் சலிப்படைந்தார். யாரை உத்தேசித்து நான் இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டேனோ அவர்கள் நன்றி மறந்து விட்டனர் என்றே கருதினார் நேருஜி.

நான் பதவி வகித்தபோது ராஜ்யத்தில் பயங்கரமான பஞ்சம் ஏற்பட்டது. அப்போது சென்னை ராஜ்யத்தில் கேரளம், மைசூர் இவற்றின் பகுதிகளும், இன்றைய ஆந்திர ராஜ்யத்தின் பெரும் பாகமும் அடங்கியிருந்தன என்பதை நினைவில் கொள்ள வேண்டும். பஞ்சம் ஏற்பட்டவுடன், சட்டசபையில் பாதி ஸ்தானங்களைப் பிடித்துக் கொண்டிருந்த எதிர்க் கட்சிகள் பட்டினிச் சாவுகள் நடக்கின்றனவா என்று மிகவும் கவனமாகப் பார்த்து வந்தன. நான் உணவு ரேஷனை எடுத்து, அதை ஒரு சவாலாகக் கருதியதால் என்னை 'மாட்டி'விட வேண்டுமென்றே எதிர்க்கட்சியினர் பட்டினிச் சாவுகளுக்காகத் தோண்டித் துருவிப் பார்த்தனர். இன்று யூனியன் உணவு மந்திரியாக உள்ள திரு சி. சுப்பிரமணியம் அவர்கள்தான் அன்று என் உணவு மந்திரி. நிர்வாகத்தில் ஒரு மாணிக்கமாக இருந்த ரபீ அஹமத் கித்வாய் அவர்கள் அப்போது மத்திய உணவு மந்திரியாக இருந்தார். அவரும் ரேஷனை எடுப்பதிலேயே முனைந்திருந்தார். இந்தச் சமயத்தில் எதிர்க் கட்சிகள் எங்கேனும் ஓரிடத்திலாவது பட்டினிச் சாவு நடந்துவிட்டது என்று குற்றம் சாட்டாத நாளே கிடையாது. இந்தக் குற்றச்சாட்டுகள் யாவும் தீர விசாரிக்கப்பட்டன. ஒரு பட்டினிச் சாவேனும் நிகழ்ந்ததாக நிரூபணமாகியிருப்பின், அன்று கண்குத்திப் பாம்பாகச் சட்டசபையில் கவனம் செலுத்தி வந்த எதிர்க் கட்சியினர் என் தலையை வெட்டித் தாம்பாளத்தில் வைத்து அவர்களிடம் தர வேண்டும் என்று வற்புறுத்தியிருப்பார்கள். அக்காலத்திய சட்டசபை நடப்புக்களைப் படித்துப் பார்த்தால், பட்டினிச்சாவு பற்றிய குற்றச்சாட்டுகளில் ஒன்றுகூட நிரூபணமாகவில்லை என்று தெரியும். திரு காமராஜ் அவர்கள் இன்று கூறும் கதை உண்மையல்ல என்பது தெரியும்.

பதினறு வருடங்களுக்குமுன் நடந்த பழங்கதைக்கும், இன்று காங்கிரஸின் தவறான நிலக் கொள்கையால் ஏற்பட்டுள்ள பஞ்ச நிலைமைக்கும் சம்பந்தமில்லை. எனினும்

எதைக் கூறினாலும் மக்கள் நம்பி விடுவார்கள் என்பதில் காமராஜ் பலத்த நம்பிக்கை வைத்திருப்பதால் இப்படிக் கூறுகிறார். 'நிலக் கொள்கை பற்றி ராஜாஜி கூறுவதைப் பொருட்படுத்த வேண்டியதில்லை; ஏனெனில், அவர் முதன்மந்திரியாக இருந்த போது பஞ்சம் ஏற்பட்டவுடன் தம் கொள்கைப்படி ரேஷனை எடுத்ததால் இந்த ராஜ்யத்தில் பலர் பட்டினியால் இறந்திருக்கிறார்கள்' என்று அவர்களுக்குச் சொல்ல விரும்புகிறார்.

இதை எழுதும்போதே அபத்தமாக இருக்கிறது. எழுதப் படிக்கத் தெரியாத மக்களாயினும்கூட இப்படிப்பட்ட அபத்தத்தை ஏற்றுக் கொள்வர் என்று அவர் எதிர்பார்ப்பது ஆச்சரியமாக இருக்கிறது. ஆயினும் இன்று செய்யத் தகாத பல காரியங்கள் செய்யப்பட்டுத்தான் வருகின்றன; மற்றவர்களுக்கு அசாத்தியமான பல விஷயங்கள் ஆளும் கட்சிக்காரர்களுக்கு மட்டும் சாத்தியமாக இருக்கின்றன!

காங்கிரஸைத் தேர்தலில் தோல்வியுறச் செய்வதற்கு வலுவான எதிர்ப்பு முன்னணியை உருவாக்கிக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் காரணமாக நாம் கம்யூனிஸ்டுகளுடன் — வலது சாரி, இடதுசாரி இரண்டையுமே குறிப்பிடுகிறேன் — கூட்டுச் சேரும் சபலத்துக்கு ஆளாகிவிடக் கூடாது. வலதுசாரிக் கம்யூனிஸ்டுகள் காங்கிரஸின் பிரதிதான். காங்கிரஸைப் பதவியிலிருந்து இறக்க வேண்டும் என்பதில் இவர்களைவிட இடதுசாரிக் கம்யூனிஸ்டுகளே மனப்பூர்வமாக உதவிபுரிவார்கள் எனலாம். எனினும், இவ்விதம் கம்யூனிஸ்டுகளின் ஆதரவைப் பெறுவதில் தற்கொலைக்குச் சமமான விளைவு ஒன்று உள்ளடங்கியிருக்கிறது என்பதை முன் கூட்டியே சுதந்திரக் கட்சி, ஜனசங்கம் முதலியவற்றுக்குச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

காங்கிரஸ் தன் ஆட்சியை நீடிப்பதற்காகப் பல சட்டவிரோதமான அநுகூலங்களைப் பெற்றிருப்பினும், மத்தியதர மக்களைப் பொறுத்த வரையில் அவர்களுக்கு லஞ்சம் கொடுத்தோ பயம் காட்டியோ வோட் பெறும் வாய்ப்பு காங்கிரஸுக்கு அதிகம் இல்லை. அவ்வாறெனில் இம்மக்களைக் காங்கிரசுக்குச் சாதகமாகத் திருப்புவது எது? ஆட்சியிலிருந்து காங்கிரஸ் விலக்கப்பட்டால் அதனிடத்தைக் கம்யூனிஸ்ட்டுகள் பிடித்துக் கொண்டு விடுவார்களோ என்ற அச்சம்தான். அசல் கம்யூனிஸ ஆட்சி வந்துவிடக் கூடாதே என்பதால்தான் மத்தியதர மக்கள் காங்கிரஸுக்கு வோட் செய்து விடுகின்றனர். எனவே, மற்ற எதிர்க்கட்சிகள் கம்யூனிஸ ஆதரவைப் பெறத் தேர்தல் ஏற்பாடுகள் செய்து கொண்டால், கம்யூனிஸ ஆட்சி ஏற்பட வழி பிறக்கக் கூடும் என்ற பயம் மத்தியதர மக்களிடம் அதிகரித்து விடும்; அவர்கள் கண்ணை மூடிக் கொண்டு ஒருமொத்தமாகக் காங்கிரஸுக்கே வாக்களிக்க முற்படுவார்கள். இந்தப் பயத்துக்கு நன்றாகத் தூபம் போடக் காங்கிரஸ் பிரசாரகர்களும் தவற மாட்டார்கள். கம்யூனிஸ ஆட்சியை விட, இப்போதுள்ள 'தெரிந்த பிசாசாகிய' காங்கிரஸ் ஆட்சியையே மக்கள் தேர்ந்தெடுக்கும் விளைவு கம்யூனிஸக் கூட்டில் உள்ளடங்கியிருப்பதை நான் உணருவதாலேயே இவ்வாறு கூறுகிறேன்.

இடதுசாரி கம்யூனிஸ்ட்டுகள் ஒரு மகத்தான தியாகம் செய்தால் காங்கிரஸை ஆட்சியிலிருந்து விலக்கும் பொது இலட்சியத்துக்குப் பலம் காணலாம். இந்த மகத்தான தியாகத்தைப் புரியும் சக்தி அவர்களுக்கு உண்டு எனவும் நம்புகிறேன். அதாவது, அவர்கள் தமது அபேட்சகர் எவரையுமே தேர்தலுக்கு நிறுத்தி வைக்காமல் மற்ற எதிர்க்கட்சிகளுக்கு உதவி புரிய வேண்டும். இதற்கு அவர்கள் ஒப்பந்தம் செய்து கொள்வார்களா என்று பார்க்க வேண்டும். 'உங்கள் அபேட்சகரை நிறுத்தி வைத்தால் நாங்கள் உதவ இயலாது. ஆனால் நீங்கள் அபேட்சகரை நிறுத்தாமல் எங்களுக்கு உதவினால் நன்றியுடன் ஏற்போம்' என்று கூறி அதற்கு ஆதரவு எதிர்பார்ப்பது அறிவல்ல, அழகல்ல என்று தோன்றக் கூடும். ஆயினும் மற்ற எதிர்க்கட்சிகள் கம்யூனிஸ்ட்டுகளுடன் கூட்டுச் சேருவதால் காங்கிரஸின் வெற்றி முன்னிலும் நிச்சயமாகிவிடும் என்பதைக் கம்யூனிஸ்ட் தலைவர்கள் புரிந்து கொண்டால், அவர்கள் தங்களுக்குப் பிரதி எதுவும் கோராமல் எதிர்ப்பு முன்னணிக்கு உதவுவதாகத் தீர்மானிக்க முடியும். நாம் அறிந்த கம்யூனிஸத்தில் இத்தகைய தயாளத்துக்கு இடமில்லையே என்று சிலர் எண்ணலாம். எனினும், எனக்கு அக்கட்சித் தலைவர்களில் சிலரை நன்கு தெரியுமாதலால் நான் இந்த யோசனையைப் பகிரங்கமாக வெளியிட முற்படுகிறேன். இது வெறும் சாகஸக் கற்பனையாகுமாயின், கம்யூனிஸ உதவி இன்றியேதான் எதிர்ப்பு முன்னணி பணியாற்ற வேண்டும். கம்யூனிஸ்ட்டுகளையும் சேர்த்துக் கொள்வது காங்கிரஸின் வெற்றி வாய்ப்பை இருமடங்காக்கும் என்பது வெட்டவெளிச்சம்.

உதவியவர்களையும் பழி வாங்கும் என்று பயப்படுவதற்கு ஆதாரமில்லை. பெரிய அளவில் ஒத்துழையாமை நடைபெற்றும் அதற்கு எதிராகச் சர்க்காரால் பழி வாங்கும் நடவடிக்கைகள் எடுக்க முடியாது. இத்தகைய அவமானகரமான நடவடிக்கையை மேற்கொள்ள ஆள்கிற கட்சி துணிச்சல் பெற்றிராது. எனவே தொழில் துறையினர் காங்கிரஸுக்கு நிதி உதவ மாட்டோமென்று தைரியமாக மறு தலிக்க வேண்டும். அடிமை நாடாகி விட்ட போதிலும் இங்கு இன்னமும் ஓரளவுக்குப் பத்திரிகை சுதந்திரம் இருக்கிறது. பொது மக்களின் கருத்துச் சுதந்திரமும் இருக்கிறது. இவற்றுக்கு ஆள்கிற கட்சி முகம் கொடுத் தாக வேண்டும்.

# என்ன சேதி?

## இந்து சமயப் பேரவை

## வாழ்க வள்ளுவர்!

## ஐயப்பனுக்கு ஆலயம்

இந்து மதத்தினர் நல்ல சமய உணர்வு பெறுவதற்காகவும், தமது மதத்தை விட்டு நீங்காதிருப்பதற்காகவும் சமீப காலமாக மடாதிபதிகள் பலரும் சீரிய முயற்சிகள் செய்து வருகின்றனர். இவற்றுக்கு ஒரு சிகரம் போல் இம்மாதம் 13ந் தேதியன்று சென்னையில் மடாதிபதிகள் மகாநாடு ஒன்று நடக்கவிருக்கிறது. அன்று மாலை மயிலை பி. எஸ். ஹைஸ்கூலில் சமய சரித்திரத்தில் முக்கியத்துவம் பெறப் போகும் ஒரு சம்பவம் நிகழவிருக்கிறது. ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகளும் சைவ - வைஷ்ணவ - மத்வ மடாதிபதிகள் பலரும் ஒரே மேடையில் தோன்றி மக்களுக்கு நல்லுரை வழங்கப் போகிறார்கள். தமிழக முதலமைச்சர் ஸ்ரீ பக்தவத்சலம் அவர்களும் இந்த 'இந்து சமயப் பேரவை'யில் பங்கு கொள்கிறார். ஒரே இலட்சியத்தை அடைய உதவும் பல துறைகளைச் சேர்ந்த துறவிகளை ஒரே சமயத்தில் தரிசித்து, அவர்களது உபதேசத்தைப் பெறும் இம்மகத்தான வாய்ப்பை மக்கள் பூரணமாகப் பயன்படுத்திக் கொள்வார்களாக!

ஃ ஃ ஃ

'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ் நாடு' என்ற பெருமை இந்நாடு முழுவதற்கும் உண்டு எனில், அதனிலும் ஒரு பாகமான மயிலை இப் பெருமைக்கு மேலும் அதிகமாக உரிமை பெற்றுள்ளது. தமிழகத்தின் மாமுனிவர் மயிலையில்தான் வாழ்ந்து தெய்வத் திருக்குறளைப் படைத்தார் என்று கருதப்படுகிறது. இவ்விடத்தில் பொய்யாமொழிப் புலவருக்கு ஒரு திரு உருவச் சிலை அமைவது பொருத்தமன்றோ? இந்த நல்ல காரியத்தைச் சென்னை மாநகராட்சி செய்ய முன்வந்திருப்பதைப் பாராட்டுகிறோம்.

பாரத ராஷ்டிரபதி என்ற முறையிலும், தத்துவ ஞானி என்ற முறையிலும் சிலையைத் திறந்து வைக்கப் பூரணத் தகுதி பெற்ற டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் தமது ஆசிவந்த கரங்களால் இச்சிலையை இம் மாதம் இரண்டாந் தேதி திறந்து வைக்கிறார். இந்த நன்னாளிலிருந்து உலகமெல்லாம் பரவியுள்ள திருக்குறளின் உபதேசத்தை நம் உள்ளத்தில் உறைவித்துச் செயலில் பிரதிபலித்துப் பெருமை கொள்வோமாக! வள்ளுவரின் சிலை நாளையொட்டி வெளியாகும் இவ்விதழின் மேலட்டையில் தமிழகம் தந்த தலை சிறந்த பெருமகனையும், கற்புக்கரசியான அவரது இல்லாள் வாசுகியையும் வெளியிட்டு வணங்குகிறோம்.

ஃ ஃ ஃ

சிவபெருமானின் மூத்த குமாரனாகிய விநாயகப் பெருமானுக்குத் தமிழ் நாட்டில் வீதிதோறும் ஆலயம் உண்டு; இரண்டாவது குமாரனாகிய குமரப் பெருமானையோ தமிழ்த் தெய்வம் என்றே வழிபட்டு வருகிறோம். சில காலமாகச் சிவனாரின் மூன்றாவது மைந்தனாகிய ஐயப்ப சுவாமியும் தமிழ் நாட்டில் தமது சக்தியைப் பரப்பிப் பக்தியைப் பெருக்கி வருகிறார். சென்னை சபரிமலை சாஸ்தா பூஜா சமாஜத்தினர் ஐயப்பன் புகழ் பரப்புவதில் நல்ல தொண்டு ஆற்றி வருகிறார்கள். இவர்களின் நன்முயற்சிகளுக்கு உருவமாக, சிந்தாதிரிப்பேட்டை ஆதிபுரீசுவரர் தேவாலயத்தில் ஐயப்பனுக்கென ஒரு தனி ஆலயமும் எழும்பியுள்ளது. ஈசனுக்கும் மோகினியாக வந்த திருமாலுக்கும் உதித்த ஐயப்பனின் ஆலயம் ஆதிபுரீசுவரர் கோயிலுக்கும் ஆதிகேசவப் பெருமாள் கோயிலுக்கும் இடையே அமைவதும் ஒரு விசேஷப் பொருத்தமாகும். இந்த ஆலய கும்பாபிஷேகமும், இதனில் ஸ்ரீ ஐயப்ப சாஸ்தாவின் விக்கிரகப் பிரதிஷ்டையும் இம்மாதம் ஐந்தாம் தேதி காலை ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளின் முன்னிலையில் நடைபெறுகிறது. மெய்யன்பர்கள் விழாவில் பங்கு கொள்வதோடு கீழ்க்கண்ட விலாசத்துக்குப் பொருளுதவி அனுப்பி வைத்து இந்தக் கைங்கரியம் சிறப்புற நிறைவேற உதவ வேண்டும்: ஸ்ரீ சபரிமலை சாஸ்தா பூஜா சமாஜம், 17, மகமது அப்துல்லா சாகிப் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை—5.



# உங்கள் கேசம் பளபளப்புடன் திகழ்வதன் ரகசியம்...

முட்டையின் சத்து அடங்கிய

## பொன்னிற TIARA டியாரா ஷாம்பூ

உங்கள் கூந்தலைத் துப்புரவாகச் சுத்தம் செய்து மேலும் பட்டுப்போன்ற மென்மையுடனும், மிருதுவாகவும், சுலபமாகப் படியும் நிலையிலும் வைத்திருக்கிறது. முட்டையின் சத்து அடங்கிய டியாரா ஷாம்பூவின் உபயோகத்தினால், உங்கள் கேசம் கட்டுக்கடங்கும் விதத்தைக் கண்டு புளகாங்கிதம் அடைவீர்கள்.

உங்கள் கேசம் புத்துயிர் பெற்று, பளபளப்புடனும், சிறந்த பட்டுபோன்ற மென்மையுடனும் திகழ உதவுவது டியாராதான். கேசத்தை தடவிப் பார்த்தால், அதன் மழமழப்பும், படியும் விதமும் உங்களை மகிழ்விக்கச் செய்யும். ஒரு முறை டியாரா ஷாம்பூவை உபயோகித்துப்பாருங்கள், என்றென்றும் உபயோகிக்கத் தோன்றும்.



**J.K. Helene Curtis**

இந்தியாவில் ஏகபோக வினியோகஸ்தர்கள்:
ஸ்பென்சர் அண்ட் கோ. லிட்.,
சென்னை 2 • பம்பாய் 26
டெல்லி 6, • கல்கத்தா 23



# சிவனருட் செல்வர்

திருமுருக கிருபானந்தவாரியார்

## 1. வரலாறு பிறந்த வரலாறு

தெய்வப் புலவர் இருவர். ஒருவர் திருவள்ளுவர்; மற்றவர் சேக்கிழார். அருண்மொழித் தேவர் என்னும் சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தின் ஆசிரியராவார். அந்தப் பெரிய புராணம்தான் இங்கு 'சிவனருட் செல்வர்' என்ற பெயரில் விரிகிறது.

தமிழ் மொழியில் உள்ள எல்லாப் புராணங்களும் இதிகாசங்களும் கிட்டத்தட்ட ஆதியில் வடமொழியில் இயற்றப் பெற்றவை. இராமாயணத்தை ஆதியில் வான்மீக முனிவர் வடமொழியில் பாடினார். மகாபாரதமும், கந்தபுராணமும் மூலத்தில் வியாச முனிவரால் வடமொழியில் பாடப் பெற்றவை. ஆனால் பெரிய புராணம் அப்படிப்பட்டதன்று. அதற்கு மூலம் தமிழ் மொழி. தமிழ் மொழியில் உள்ள இதனை 'உபமன்னியுபக்த விலாசம்' என்று வடமொழியில் பிற்பாடு மொழிபெயர்த்திருக்கிறார்கள். ஆக, தென்மொழியிலிருந்து வடமொழிக்குச் சென்ற ஒரே நூல் பெரிய புராணம்.

பெரிய புராணத்தை அறியுமுன் அதனை இயற்றிய சேக்கிழார் நாயனார் பெருமானின் வரலாற்றை அறிந்து கொள்ளுவோம்:

தூக்கு சீர்திருத் தொண்டத்
 தொகைவிரி
வாக்கி னாற்சொல வல்ல
 பிரானெங்கள்
பாக்கி யப்பய னாப்பதி
 குன்றைவாழ்
சேக்கி ழானடி சென்னி
 இருத்துவாம்

—காஞ்சிப்புராணம்

சான்றோர் பலர் வாழும் சால்பு உடையது தொண்டை நன்னாடு. அதனால்தான் அந்தநாட்டைச் 'சான்றோருடைத்து' என

ஆன்றோர் வியந்து ஓதினர். பல்வளமும் பெருகிப் பெருமை பெற்றிருந்த அந்நாடு இருபத்துநான்கு கோட்டங்களைக் கொண்டிருந்தது. அவற்றுட் சிறந்தது புலியூர்க் கோட்டம். புலியூர்க் கோட்டத்தைச் சேர்ந்த குன்றை வள நாட்டில் பெருமையுடன் விளங்குவது குன்றத்தூர் என்னும் நற்றவப்பதி. அந்த நகரில் வழி வழிச் சைவ மரபினர் வாழ்ந்து வந்தனர். அவர்களுள் சேக்கிழார் என்னும் திருமரபு சிறந்திருந்தது. அத்திரு மரபிலே அருண்மொழித் தேவர் அவதரித்தார். சேக்கிழார் பெருமானுக்குத் தாய் தந்தையர் இட்ட பெயர் அருண்மொழித் தேவர் என்பது. சேக்கிழார் என்பது குடிப்பெயர். தம் அரசரிடத்து அன்புள்ள மக்கள் தம் மக்களுக்கு அவ்வரசரின் பெயரைச் சூட்டுவது மரபு. அதனை யொட்டிச் சேக்கிழார் பெருமானுக்கு அருண்மொழி என்று திருநாமம் சூட்டப்பட்டது போலும்! பாலறுவாயர் சேக்கிழார் பெருமானின் தம்பி.

சேக்கிழார் பெருமான் அவதரிக்கத் தவம் செய்தது வேளாளர் குலம். அக்குலத்தின் பெருமையை அளவிட யாராலும் இயலாது. வேள் என்ற சொல்லுக்கு மண், விருப்பம் என்ற இரண்டு பொருள்கள் உண்டு. வேளாளர் அந்த மண்ணை உழுது ஆள்பவர் என்றும், உலகில் உள்ள உயிர்கட்கு உபகாரத்தைச் செய்பவர் என்றும் பொருள் கொள்ளலாம். ஆறு சமயங்கட்குத் தலைவியாகிய உமையம்மையார் காஞ்சியம்பதியில் சிவபெருமானை வழிபட்டு அவர் தந்தருளிய இருநாழி நெல்லைத் தமது மக்களாகிய வேளாண் மரபினருக்குத் தந்தார். அவர்கள் அதனைப் பெற்று உலகமே வயலாகவும், கடல் ஏரியாகவும், வருணன் கம்பு — கட்டியாகவும் விளங்க; இயமனின் கடாவையும், ஈசனிடம் உள்ள விடையையும் உழவு மாடுகளாகப் பெற்று; பலராமனுடைய கலப்பையைக் கொண்டு விவசாயம் செய்தனர். இவர்களுக்கு ஆண்டுதோறும் விதையைத் தப்பாமல் அளந்து தருபவர் கச்சியம்பதிக் காமகோடி பீடத்தில் எழுந்தருளியுள்ள சாட்சாத் அறம் வளர்த்த அம்மையாகிய காமாட்சியே ஆவர். இவ்வாறு திவ்வியத் துணைகள் கொண்டு எறும்பு முதல் இமையவர் வரையில் உலகில் உள்ள உயிர்கள் அனைத்தும் உய்வு பெற்று வாழ வேளாளர் உதவி புரிந்து வந்தனர்.

பழையனூர் நீலி செய்த வஞ்சனையால் அவனுடைய கணவன் உயிர் இழக்க, அங்ஙனம் அவன் மாய்ந்ததற்குக் காரணம் தாமாக இருந்ததால் வேளாள மன்றத் தலைவர்கள் எழுபது பேரும் தீக்குழி விழுந்து உயிர் துறந்து திருவாலங்காட்டுத் தேவன் திருவடி சேர்ந்து வாய்மையைக் காத்தனர். இத்தகைய காராளர்



# ஆசி

மயிலை கபாலீச்சரத்தில் அறுபத்தி மூவர் விழா நடந்த அடுத்த பட்சத்திலேயே திரு வாரியார் அவர்கள் அறுபத்தி மூவரைச் சொல்லோவியமாக உருவாக்கி, 'கல்கி' ஏட்டு வாயிலாக நாடெங்கும் உலாவச் செய்து விழாக் கொண்டாட முன் வந்திருப்பது அடியார்களுக்கும் அறிவாளிகளுக்கும் ஒருங்கே இன்பமும் மகிழ்ச்சியும் தரக்கூடிய பெரும் பணி. 'நம் கடன் பணி செய்து கிடப்பதே' என்பது அப்பருடையது போல வாரியாருடைய கொள்கையும் ஆகும்.

நாயன்மார்கள் இறைவனைக் கண் காட்சியாகக் கண்டு பேரானந்தம் பெறுவதற்கு வழியாகக் கொண்ட வழிபாட்டு முறைகள் ஒன்றுக்கொன்று இணைபாடே யில்லாத பல்வேறு வகைத்தனவாகும். வேதம் ஓதுதல்

வயலை உழுதுக் கையார நட்ட முடி இருந்திலால் பாராளும் மன்னர் பசும் பொன்முடி இருந்தும். அவ்வேளாளர் ஏர் அடிக்குந் தாற்றுக்கோலே தரணியாளும் தனி மன்னர் செங்கோலுக்குத் துணை புரியும். இச்சரிதையில் நாம் சந்திக்கப் போகும் அறுபது தனி நாயன்மாருள் பதின்மூவர் வேளாளராவர். ஆதலினால் சீராலும் பேராலும் உயர்ந்த காராளரது சிறப்பை யாராலும் அளவிட முடியாது. அத்தகு சிறப்புமிக்க மரபிலே அவதரித்த சேக்கிழார் பெருமான் இளமையிலேயே கல்வி கேள்விகளில் ஓங்கிய புலமை பெற்றுத் திகழ்ந்தார்.

ஒரு நாட்டில் அரசர் புதிதாகப் பட்டத்துக்கு வந்தார். ஆகவே, அமைச்சரை அழைத்துக் கொண்டு அலுவலகத்தைச் சுற்றிப் பார்த்தார். அலுவலகத்தில் பணியாற்றிக் கொண்டிருந்த ஒவ்வொருவரைப் பற்றியும் அமைச்சரிடம் விசாரித்தார் அரசர்.

அங்கே ஓரிடத்தில் எழுபத்தெட்டு வயதான ஆஸ்தான வித்துவான் அமர்ந்திருந்தார். ''அரசே! இவர் ஆஸ்தான வித்துவான். மன்னருக்கு ஏதாவது சந்தேகம் ஏற்பட்டால் இவர் தான் தெளிவுபடுத்துவார்'' என்று அமைச்சர் கூறினார்.

''ஐயா! ஆஸ்தான வித்துவான் அவர்களே! மூன்று சந்தேகங்களைக் கூறுகின்றேன். அவற்றை அகற்றி விளக்கம் கூறுங்கள். விளக்கங்கள் தெளிவாகவும், திருப்திகரமாகவும் இல்லை என்றால் உமது சிரத்தைத் துண்டித்து விடுவேன்'' என்றார் அரசர்.

''தங்களுடைய ஐயங்கள் என்னவோ?'' என்று கேட்டார் ஆஸ்தான வித்துவான்.

அரசர் தமது ஐயங்களைக் கூறினார்:

''கடவுள் எங்கே இருக்கிறார்? அவர் எந்தத் திசையைப் பார்த்துக்கொண்டிருக்கிறார்? அவர் என்ன செய்துகொண்டிருக்கிறார்? என்னுடைய இந்த மூன்று சந்தேகங்களுக்கும் நாளை நண்பகலுக்குள் விடையுடன் வர வேண்டும். வேதம் சொல்லுகிறது; புராணம் கூறுகிறது; நம்மாழ்வார் சொன்னார்; நாயனார் கூறினார் என்றெல்லாம் கூறக் கூடாது. எனக்கு விளங்குகிற மாதிரி விடை சொல்ல வேண்டும்.''

ஆஸ்தான வித்துவானின் மூளை குழம்பியது. 'இவனுக்கு விளங்கும்படி சொல்ல வேண்டுமாமே! வேதம் சொல்கிறது; புராணம் சொல்கிறது என்று கூறக் கூடாது என்று உத்தரவு வேறு போட்டு விட்டானே! என்ன செய்வது?' என்றெல்லாம் குழம்பியபடியே வீட்டுக்குச் சென்றார் ஆஸ்தான வித்துவான்.

அரசரின் முதல் கேள்விக்குப் பதில் கண்டுபிடிக்கப் பல்வேறு நூல்களையெல்

## காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீசங்கராசார்ய சுவாமிகள்

(உருத்ரபசுபதி நாயனார்), யக்ஞம் புரிதல் (சோமயாஜிமாற நாயனார்), சலவைத் தொழில் (திருக்குறிப்புத் தொண்ட நாயனார்), மீன்பிடித்தல் (அதிபத்த நாயனார்), மாமிசமும் எச்சிலும் அளித்தல் (கண்ணப்ப நாயனார்), பிள்ளைக்கறி படைத்தல் (சிறுத்தொண்ட நாயனார்), மண்பாண்டத் தொழில் (திருநீலகண்ட நாயனார்), தலைமயிர் களைதல் (மானக்கஞ்சாற நாயனார்), பேயுருவம் தரித்தல் (காரைக்கால் அம்மையார்) — இதுபோன்ற பலவகைகளைக் காண்கிறோம். வெளி வழிபாட்டு முறைகள் வேறுபட்டு ஒன்றுக்கொன்று முரணாகத் தோன்றினாலும் உள்ளக்கனிவு ஒரே உயர்நிலைப் பக்குவமாக இருந்ததால் இவ்வெல்லாத் திருத்தொண்டர்களுக்கும் இறைவனின் அருள்மாரி ஒரே பொழிவாகப் பொழிந்தது. இவ்வாறு பான்மூவரையும், மற்றும் தில்லைவாழ் அந்தணர், பொய்யடிமை யில்லாத புலவர், பத்தராய்ப் பணிவார், பரமனையே பாடுவார், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார், திருவாரூர்ப் பிறந்தார், முப்போதும் திருமேனி தீண்டுவார், முழு நீறு பூசிய முனிவர், அப்பாலும் அடி சார்ந்தார் ஆகிய தொகையடியாரையும் நம் உள்ளம் நினைக்குங்கால், ஒருகணமேனும் நாமும் அவர் தம்முடன் ஒன்றுக் கலக்கும் பேறு பெறமாட்டோமா என்னும் பேராசை பொங்குகிறது. இச்சொல்லோவியத்தை இரசித்து இப்பேராசை பயனுற்று, நம் உள்ளத்திலும் நாட்டிலும் உலகத்திலும் இறைவன் அருள் பொழிந்து வாழிய அவன் திருவடியை இறைஞ்சுகின்றோம்.



லாம் புரட்டினார். கடவுள் சூரிய மண்டலத்தில் இருக்கிறார் என்று ஒரு நூலில் கூறப்பட்டிருந்தது. கடவுள் கயிலாயத்தில் இருக்கிறார் என்று ஒருநூலில் எழுதப்பட்டிருந்தது. கடவுள் வைகுண்டத்தில் இருக்கிறார் என்று மற்றொரு நூல் கூறியது. இப்படியாக நூல்களைப் புரட்டிப் பார்க்கப் பார்க்க ஆஸ்தான வித்துவானுக்கே ஐயங்கள் அதிகரித்தன. தெளிவு அவருக்கே பிறக்கவில்லை. அதனால் உள்ளம் தளர்ந்து அமர்ந்து விட்டார்.

சிறிது நேரம் சென்றது. அரசரின் இரண்டாவது கேள்விக்காவது விடை கண்டு பிடிப்போம் என்று ஆராயப் புகுந்தார். கடவுள் எந்தத் திசையைப் பார்த்துக் கொண்டிருக்கிறார் என்பது இரண்டாவது கேள்வி.

பழநியில் மேற்குப் பக்கம் பார்த்துக் கொண்டிருக்கிறார். திருச்செந்தூரில் கிழக்குப் பக்கம் பார்த்துக் கொண்டிருக்கிறார். திருவரங்கத்திலும் சிதம்பரத்திலும் தெற்கு நோக்கியிருக்கிறார். ஆக, கடவுள் எந்தத் திசையை நோக்கியிருக்கிறார் என்பதை அறிய நீண்டநேரம் ஆராய்ச்சி செய்தும் ஆஸ்தான வித்துவானுக்குச் சந்தேகங்கள் அதிகரித்தனவே யன்றித் தெளிவு பிறக்கவில்லை.

இரண்டாவது கேள்வியை விட்டு மூன்றாவது கேள்விக்கு விடை கண்டு பிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டார். கடவுள் என்ன செய்து கொண்டிருக்கிறார் என்பது மூன்றாவது கேள்வி.

ஸ்ரீரங்கத்தில் கடவுள் சயனித்துக் கொண்டிருக்கிறார். சிதம்பரத்தில் நடனமாடிக் கொண்டிருக்கிறார். ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிறார்; மற்றோரிடத்தில் நின்றுகொண் டிருக்கிறார். ஓரிடத்தில் சம்ஹாரம்; மற்றோரிடத்தில் அநுக்கிரகம்; ஓரிடத்தில் திருமணம்; மற்றோரிடத்தில் சந்நியாசம்.

ஆக, கடவுள் என்ன செய்து கொண்டிருக்கிறார் என்று சிந்தித்துப் பார்க்கப் பார்க்கப் பெரும் குழப்பம்தான் ஏற்பட்டது. இப்படியே அன்றிரவு கழிந்து பொழுது விடிந்தது.

அரசரோ உச்சிகாலத்துக்குள் வந்து விடை சொல்ல வேண்டும் என்று கூறியிருக்கிறார். அந்நேரமும் நெருங்கி விட்டது. தக்க விடை கிடைக்காததால் மிகுந்த கவலையுடன் இருந்தார் ஆஸ்



தான வித்துவான். அவரது பேத்திக் குழந்தை பள்ளாங்குழி விளையாடிக் கொண்டிருந்தது. அந்தக் குழந்தை ஆஸ்தான வித்துவானிடம் வந்து, ''சாப்பிட்டாயா தாத்தா?'' என்று கேட்டது. ''வேண்டாம் அம்மா! சாகப் போகிறவனுக்குச் சாப்பாடு எதற்கு?'' என்றார் ஆஸ்தான வித்துவான். ''ஏன் தாத்தா அப்படிச் சொல்லுகிறீர்கள்?'' என்று கேட்டது அந்தக் குழந்தை.

அவர் ஏதும் விடை கூறாமல் மேலங்கியை மாட்டிக் கொண்டு வெளியே புறப்பட்டார்.

''எங்கே தாத்தா போகிறீர்கள்?'' என்று கேட்டாள் பேத்தி.

''போகும்போதே கேட்டு விட்டாயா?'' என்று கடிந்து கொண்டார் ஆஸ்தான வித்துவான்.

''ஏன் தாத்தா இப்படிக் கோபித்துக் கொள்கிறீர்கள்? ஒரு நாளும் நீங்கள் இப்படிச் சொன்னதில்லையே?'' என்று கேட்டது குழந்தை.

''முட்டாள் ராஜா கேள்வி கேட்டு விட்டான். அவனுக்கு என்ன விடை சொல்லுவது என்று புரியாமல் திகைத்துக் கொண்டிருக்கிறேன்'' என்றார் ஆஸ்தான வித்துவான்.

''தாத்தா! அரசர் என்ன கேள்வி கேட்டு விட்டார்?''

''நீ போம்மா! நீ சிறு குழந்தை. உனக்கு என்ன தெரியும்?''

''இல்லை தாத்தா. நீங்கள் அந்தக் கேள்வியைச் சொல்லுங்கள்.''

பிடிவாதம் செய்தது பேத்திக் குழந்தை.

''அம்மா! அரசர் மூன்று கேள்விகளைக் கேட்டிருக்கிறார். கடவுள் எங்கே இருக்கிறார் என்பது முதல் கேள்வி. அவர் எந்தத் திசையைப் பார்த்துக் கொண்டிருக்கிறார் என்பது இரண்டாவது கேள்வி. அவர் என்ன செய்து கொண்டிருக்கிறார் என்பது மூன்றாவது கேள்வி'' என்றார் ஆஸ்தான வித்துவான்.

''இவ்வளவுதானே தாத்தா! நீங்கள் இங்கேயே இருங்கள். நான் ராஜ சபைக்குச் சென்று இந்தக் கேள்விகளுக்கு உத்தரம் சொல்லிவிட்டு வருகிறேன்'' என்று கூறியது குழந்தை.

''விளையாட்டுக்கு இதுதானா நேரம்?'' என்று அலுத்துக் கொண்டார் வித்துவான்.

அச்சிறுமி தன் பாட்டனார் கூறியதைப் பற்றிச் சிறிதும் கவலை கொள்ளாமல் நேராக ராஜ சபைக்குச் சென்றது.

ஆஸ்தான வித்துவான் சரியான விடை சொல்லாவிட்டால் அவருடைய தலை உருளப் போகிறது என்பதை அறிந்த மக்கள் ராஜ சபையில் திரளாகக் கூடியிருந்தனர். அந்தக் கூட்டத்துக்குள் புகுந்து ஓடிவந்த சிறுமி மன்னரை நோக்கி, ''வணக்கம்'' என்று கூறியது.

''நீ யாரம்மா?'' என்று வினவினார் அரசர்.

''ஆஸ்தான வித்துவானின் பேத்தி.''

''உன் தாத்தா எங்கே?''

''பெரிய கேள்விகளைக் கேட்டிருந்தால் அவரே வந்து பதில் சொல்லியிருப்பார். தாங்கள் கேட்ட சின்னக் கேள்விக்கு விடை சொல்லச் சிறுமியான என்னை அனுப்பியிருக்கிறார்'' என்றாள்.

''என்னம்மா நீயா விடை சொல்லப் போகிறாய்?''

சிரித்தார் அரசர்.

''மகாராஜா! என்னைச் சிறு பெண் என்று எண்ணுகிறீர்கள். பெரிய யானையை அடக்குவது சிறு அங்குசம்தான். பெரிய மலையை உடைப்பது சிறு உளிதான். ஐயாயிரம் பொதிப் பஞ்சை எரிப்பது சிறு தீப்பொறிதான். ஆகவே, வயது பிரதானம் அல்ல; அறிவே முக்கியம். மகாராஜா! போயும் போயும் நீங்கள் தரித்திரம் பிடித்த மாதிரி மூன்றே கேள்விகளைத்தானே கேட்டிருக்கிறீர்கள்? முப்பது கேள்விகளைக் கேளுங்கள். விடை சொல்லுகிறேன்'' என்று கூறினாள் சிறுமி.

''மூன்று கேள்விகளுக்குப் பதில் சொன்னாலே போதும். சொல்லு, பார்ப்போம்!''

''உங்கள் முதல் கேள்வி?''

''கடவுள் எங்கே இருக்கிறார்? இது தான் முதல் கேள்வி. விடை சொல்.''

''மகாராஜா! நீங்கள் கேள்வி கேட்டீர்கள். நான் அதற்கு விடை சொல்லி உங்களுக்குத் தெளிவு தரப் போகிறேன். இப்போது நான் குரு. நீங்கள் சீடர். நான் கூறுவதற்கு நீங்கள் குறுக்கே பேசக் கூடாது. 'ஏன்? என்ன?' என்று கேட்கக் கூடாது'' என்று சிறுமி கூறினாள். பின்னர், ''மகாராஜா! ஒரு பெரிய அண்டாவும் நூறு படி பாலும் கொண்டு வரச் சொல்லுங்கள்'' என்றாள்.

இந்தச் சமயத்தில் ஆஸ்தான வித்துவானும் ராஜ சபைக்குள் வந்து சேர்ந்தார்.

(தொடரும்)

திவாசித்தவர்கள் பாராட்டுக்குரியவர்கள். தொடக்கத்தில் ஒரு கொலைக்கு வித்திட்டவர்கள் கடைசி வரை தயவுதாட்சண்ய மின்றிக் கதையையும் பல சித்திரவதைக்கு உள்ளாக்கியிருக்கிறார்கள். தந்திரமாகப் பல தந்திரக் காட்சிகளைக் கொண்டு தங்கள் குற்றத்தையும் மறைக்கப் பார்த்திருக்கிறார்கள்.

இந்தக் கதையில் கண்ணுக்குப் புலனாகாதவராக அசோக் குமார் வெகு தந்திரமாக நடித்திருக்கிறார்! தமது நடிப்பை எடை போடும் வாய்ப்பை அளிக்காது நடித்திருக்கும் அவரது அபாரத் திறமையை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

அவருக்குத் தோழராக வரும் ஆகாவின் நடிப்பு பல இடங்களில் 'ஆகா, பிரமாதம்!' என்று கூற வைக்கிறது! பக்கத்தில் அசோக்குமார் இருப்பதாகக் கற்பனை புரிந்து கொண்டு அவர் நடிப்பதை யாரும் ரசிக்கவே செய்வார்கள்.

ராகினி திரையுலகத்திலிருந்து விலகிக் கொண்டதற்கு இந்தப் படமே ஒரு காரணமாக இருக்குமோ, ஒரு வேளை?

ஒரு யோசனை: நடிகர்கள் அனைவரையும் இப்படியே கண்களுக்குப் புலனாகாதவர்களாக நடிக்க வைத்துப் படம் எடுத்தால்?





மேனாட்டிலிருந்து திரும்பிய சங்கீதக் கலைஞன் ராஜேஷ் நாட்டியத்தி லும் சங்கீதத்திலும் நாட்டமும் பயிற்சியும் கொண்ட கீதா என்னும் பெண்ணைப் பார்க்க நேர்கிறது. சினிமாவில் சாதாரணக் கண்ணோடு பார்க்க முடியுமா? காதல் கண்ணோடுதான் பார்க்கிறான். அவளைத் தன் பாட்டுக்கு ஆடும்படி கோருகிறான்; மறுக்கிறாள். ஆனால் தன் சங்கீதத் தின் சக்தி அவளை ஆட வைக்கும் என்கிறான். முடியாது என்கிறாள். 'பார்ப்போமா?' என்று சவாலை ஏற்றுப் பாடுகிறான். சங்கீதத்துக்கு மயங்கி, அவள் தன்னை அறியாமல் அவன் பாட்டுக்கு ஏற்ப ஆடவே தொடங்கி விடுகிறாள். காதல் வாழ்க்கை எளிதாக இருப்பதில்லை. ஏற் கனவே கீதாவை ஒரு ஜமீந்தார்மகனுக்குக் கல்யாணம் செய்து கொடுக்கத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அவன் இக் காதலர் வாழ்க்கையில் குறுக் கிட்டுத் தொல்லை தருகிறான். ஸாயிராபானு இந்திய வகை நாட்டியம் மேனாட்டு வகை நடனம் எல்லாம் ஆடிக் காண்பிக்கிறார். ஹிந்தி சினிமாப் பாட்டுக்களில் மோகமுள்ளவர்களுக்கு இப்படம் நல் விருந்து.

^ கீதமும் நாதமும்
(ராஜ் ஔர் ஆவாஜ்)



நள்ளிரவுக்குப் பின் >
(ஆதீ ராத்கே பாத்)

லிப்கோ
பதிப்பு



கீர்த்தனாசார்ய ஸ்ரீ உ. வே. C. R.
ஸ்ரீநிவாஸ அய்யங்கார் அவர்களின்

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

(தமிழ் வசனம்)



மலிவுப்
பதிப்பு

| | | |
|---|---|---|
| 1. | பால காண்டம் | ரூ. 8.00 |
| 2. | அயோத்யா காண்டம் | 8.00 |
| 3. | ஆரண்ய காண்டம் | 5.00 |
| 4. | கிஷ்கிந்தா காண்டம் | 5.00 |
| 5. | ஸுந்தர காண்டம் (ஸம்ஸ்க்ருத மூலத்துடன்) | 12.50 |
| 6. | யுத்த காண்டம் | 9.00 |
| 7. | உத்தர காண்டம் | 6.00 |
| 8. | ஸ்ரீமத் வால்மீகி ராமாயண தத்வார்த்த தீபிகை (ராமாயண கோட்டுகள்) | 8.00 |

பக்திப்
பதிப்பு



லிப்கோவின் புதிய வெளியீடு!
'தினமணி' ஞாயிறு மலரில் வெளிவந்த

குடித்தனப் பாங்கு

(திருமதி ப்ருந்தா வரதராஜன்)
விலை ரூ. 2; தபாலில் ரூ. 2.80

தி லிட்டில் ப்ளவர் கம்பெனி (லிப்கோ), சென்னை-17; எம். தாமோதரம் & கம்பெனி, அப்பா பில்டிங், சென்னை-1; ஹிக்கின்பாதம்ஸ், சுதேசமித்திரன் ரெயில்வே ஸ்டால்கள்.

NALIN

# பருக்கள், கருப்பு மச்சங்கள், வேர்க்குரு மற்றும் சிறு சரும நோய்களுக்கு




# நிகோ

## கிருமிநாசினி சோப்

நிகோ நிரூபணமான மதிப்புடைய முதன்மையான கிருமிநாசினி சோப்பாகும். நிகோ உங்களுக்கு மூன்றுவிதமாகப் பயனளிக்கிறது—சுத்தமாக்குதல், கிருமிநீக்குதல், பாதுகாத்தல்—உங்கள் சருமத்தைச் சுத்தமாகவும், ஆரோக்கியமாகவும், பருக்கள், கருப்பு மச்சங்கள் மற்றும் இதர சிறு சரும உபாதைகளிலிருந்து பாதுகாத்து, பத்திரமாகவும் வைத்திருக்கிறது. மேலும், நிகோ சோப் தேய்த்துக் குளித்தால், வேர்க்குருவில் இருந்து சுகமான நிவாரணம் பெற்று, புத்துணர்ச்சி அடைவீர்கள்.



ஷாம்பூவைப்போல
நிகோவின் உபயோகம்



ஒவ்வொரு நாளும், உங்கள் சருமத்திற்குத் தேவையான பராமரிப்பை அளிக்கத் தவறாதீர்கள்.

நிகோ — ஒரு பார்க்-டேவிஸ் தயாரிப்பு

NAB 65186

தொலைதூரத்தில் அப்படியப்படியே பதிவாகிக் கொண்டிருக்கும். ரேடியோவை அலற விட்டு விட்டு அந்த ஓசைக்கு மத்தியில் ரகசியமாகப் பேசுவது, குழாய்த் தண்ணீரைக் கொட்ட விட்டு விட்டுக் கிசுகிசுப்பது, மேஜைக் கண்ணாடிமீது தம்ளர்களாலோ, சாவிக் கொத்தினாலோ ஓசையெழுப்பிக் கொண்டே பேசுவது - இப்படி எந்தப் 'பாச்சா'வும் பலிக்காது இனிமேல். ஏனென்றால், பின்னணி ஓசைகளை அப்படியப்படியே அமுக்கி விட்டுப் பேச்சை மட்டும் பிரித்துக் கொடுக்கக் கூடிய ஒலிபரப்புச் சாதனம் ஒன்றும் கண்டுபிடித்திருக்கிறார்களாம்!

இந்தத் தொல்லைகளுக்கெல்லாம் ஈடு கொடுப்பதற்கென்றே சில நாட்டுத் தூதராலயங்கள் சில வழிகளைக் கடைப்பிடித்திருக்கின்றனவாம். அதன்படி, பேச்சுவார்த்தை நடத்துவதற்கென்று கூடுபவர்கள் பேசுவதே இல்லை. சொல்ல வேண்டியதை யெல்லாம் துண்டுத் துண்டுக் காகிதங்களில் ஒருவருக்கொருவர் எழுதிக் கொடுத்து, படித்த பிறகு உடனடியாக அவற்றைக் கருக்கிச் சாம்பலாக்கி 'வாஷ்பேஸினி'ல் கொட்டி விடுகிறார்களாம்!

ஆண்டவன் கொடுத்த அறிவு எப்படி எப்படியெல்லாம் குறுக்குவழியில் புகுந்து புறப்பட்டு வருகிறது என்று இன்னும் நிறையத் தெரிந்து கொள்ள வேண்டுமானால் 'க்ளோக் அண்ட் சைபர்' புத்தகத்தை

**துப்பிப் பாருங்கள்!**

நூலின் பெயர்: க்ளோக் அண்ட் சைபர். (Cloak and Cipher.

ஆசிரியர்கள்: டான் டைலர் மூர். (Dan Tyler Moore) மார்த்தா வாலர். (Martha Waller)

வெளியிட்டவர்கள்: ஜார்ஜ் ஜி. ஹாரப் அண்ட் கம்பெனி, லண்டன்.

○ ○ ○ ○ ○ ○ ○ ○ ○ ○ ○ ○ ○ ○

# கணவன் பெயரைச் சொல்லு!

இன்றைக்கு இரண்டாயிரத்தைந்நூறு வருஷங்களுக்கு முன்பு புகழ்பெற்ற சம்ஸ்கிருத இலக்கண நூலாசிரியரான பாணினி முனிவர் வாழ்ந்திருந்தார். அவர்தாம் எழுதியுள்ள நூல்களில் கோடை காலத்தில் முதல் பண்டிகை 'நவலவ' எனக் குறிப்பிட்டிருக்கிறார். தற்கால நவராத்திரி போல் ஒன்பது நாட்களுக்கு முக்கியமாகப் பெண்கள் பண்டிகையாக இது கொண்டாடப்பட்டு வந்தது.

இப்பண்டிகையின் முதல் நாள் மணமான சுமங்கலிப் பெண்கள் ஒருவருக்கொருவர் ''உங்கள் கணவர் பெயரென்ன ?'' என வினவுவார்கள். சொல்லாது போனால் மற்றப் பெண்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து கொண்டு சொல்லாத பெண்ணைத் தாக்க ஆரம்பித்து விடுவார்கள். எதனால் தெரியுமா? மலர்களால்! அந்தப் பெண் தன் கணவன் பெயரைச் சொல்லாதவரை இந்த மலர்த் தாக்குதலை அவர்கள் நிறுத்த மாட்டார்கள். கடைசியில் திக்குமுக்காடிப் போய்த் தன் கணவன் பெயரை எவ்விதமும் சொல்லியே விடுவாள். உடனே பெண்கள் எல்லோரும் கைதட்டி 'ஓ' எனச் சிரித்து ஆரவாரம் செய்வார்கள்.

இதன் பிறகு கணவன் பெயரைச் சொன்ன தங்கள் தோழிகளை அழைத்துப் போய்ப் பாலும் அன்னமும் தருவார்கள். எல்லாருமாகக் கூடிக் காதல் தேவதையான ரதி தேவிக்குப் பூஜைகள் நடத்துவார்கள். சித்திரை மாதம் சுக்கில பஞ்சமியன்று இவ்விழா தொடங்கும். மறுநாள் ஷஷ்டியன்று ஸ்கந்தோத்சவம் நடத்துவார்கள். அன்று பெண்கள் ஸ்கந்த மாதா (பார்வதி)வுக்குப் பூஜை நடத்துவார்கள்.

அடுத்த நாள் சப்தமியன்று ஆனந்த சப்தமி கொண்டாட்டம் நடக்கும். அன்று பெண்கள் நல்ல புத்தாடை அணிந்து ஆபரணங்களால் தங்களை அழகுபடுத்திக் கொண்டு தங்கள் தங்கள் கணவன்மாரைக் காணச் செல்வார்கள். அன்று கணவனும் மனைவியும் ஆனந்தமாகப் பொழுது போக்குவார்கள். கணவன்மார்கள் தங்கள் தங்கள் மனைவிமாருக்குப் பரிசுகள் அளித்து சந்தோஷப் படுத்துவார்கள்.

அன்று தொடங்கிச் சித்திரா பௌர்ணமி தினம்வரை இரவில் நிலவொளியில் கணவனும் மனைவியும் வெளியில் காடுகளுக்குச் சென்று உல்லாசமாக இரவைக் கழிப்பார்கள். இதுபற்றிக் காவிய பிரகாசம் என்ற நூல் இலக்கிய நயத்துடன் இப்படிக் கூறுகிறது:

''வெண்மையான ஆடை அணிந்த யுவதி இரவின் நிலவொளியில் தன் காதலனைத் தேடிச் செல்லுவாள். பால்போன்ற நிலவொளியில் பால் போன்ற ஆடை அணிந்த அவளை அடையாளம் கண்டுகொள்வது சுலபமல்ல!'' —அ. ரா.

மனித குலம் என்பது சிந்திக்கும் ஓரினமாக உருவாக உருவாகப் புதுப் புது வார்த்தைகளைக் கண்டுபிடிக்கலாயிற்று. உடன் வாழ்வோருக்கு மனிதன் தனது சிந்தனைகளைக் கூறும் அடையாளம் வார்த்தையேயல்லவா? எனவே, மனித குல வரலாற்றில் வார்த்தைக்கு ஒரு முக்கியமான இடமுண்டு. சிந்தனை நுட்பம் ஒருவனுக்கு அதிகமாக ஆக அவன் அதை வெளியிடும் வார்த்தைகளைப் பொறுக்கி எடுப்பதிலும் ஜாக்கிரதையாயிருக்கிறான். எனவே, பொருள் நிறைந்த வார்த்தைகளையும், பலவிதமாக உள்ளர்த்தம் செய்து கொள்ளக் கூடிய வார்த்தைகளையும் அதிகாரத்தில் உள்ள செல்வாக்குப் பொருந்திய தலைவர்கள் உபயோகிக்கும் போது, அவர்கள் என்ன கருத்தில் அவ்வாறு பேசுகிறார்கள் என்பதைச் சரியாக

# வார்த்தைகள்: அவற்றின்





உணர வேண்டியது அவசியம். ஏனெனில், அதிகாரத்தில் உள்ளவர்கள் பேசும்போது அவர்களது வார்த்தைகள் ஓர் உத்தரவின் சக்தியைப் பெற்று விடுகின்றன. அதன்படி ஒருவர் நடக்காவிடில் விபரீத விளைவுகளையும் ஏற்க வேண்டியிருக்கும். ஆகையால் தலைவர்கள் தங்கள் வார்த்தைகளுக்கு என்ன பொருள் கொள்கிறார்கள் எனக் கேட்டறிவது பொதுமக்களின் உரிமையும் கடமையுமாகும்.

குருக்ஷேத்திரத்தில் சரித்திர முக்கியத்துவம் பெற்ற போர்க்களத்தில் பயங்கரமான சகோதரப் பூசலில் பாண்டவ சேனையும் கௌரவ சேனையும் அணிவகுத்து நின்றபோது, எல்லாச் சந்தர்ப்பங்களிலும் மனம் சமநிலையில் இருக்கப் பழக வேண்டியதன் அவசியத்தைக் கண்ணபெருமான் அர்ஜுனனுக்கு எடுத்துரைத்தார். உடனே அர்ஜுனன் மிகவும் பொருத்தமாகவும், அறிவுடைமையுடனும் கீதாசாரியனை ஒரு கேள்வி கேட்டான்: 'கண்ணா, நீ கூறுவது போல் மனத்தைச் சம நிலையில் நிறுத்தியவன் எப்படிப் பேசுவான், எப்படி அமருவான், எப்படி நடப்பான்?' என்பது அர்ஜுனனின் கேள்வி. ஒரு குறிப்பிட்ட இலட்சியமுள்ளவன் அவனது அன்றாட வாழ்வில் எப்படியெல்லாம் ஒழுகுவான் என்பதை அறிந்தால்தான் அதே இலட்சியத்தைப் பின்பற்ற விரும்பும் மற்றவரும் அவ்வாறு நடந்து கொண்டு அந்த இலட்சியத்தை அடைய முடியும். இதுவே அர்ஜுனன் கேள்வி கேட்டதன் தாத்பரியம். கண்ணனுடைய வார்த்தைக்கு என்ன பொருள் என்று அவனையே கேட்டு விட்டான்.

நமது அரசியல் சுதந்திரத்துக்கான இறுதி இயக்கத்தின் தளபதியாயிருந்த மகாத்மா காந்திஜி பலவிதமாகப் பொருள்படும் வார்த்தைகளை உபயோகிப்பதற்கு மிகவும் கூசுவார். அவரது இலட்சியம் 'சுயராஜ்யம்' என்கிற அரசியல் விடுதலை. அதாவது அந்நியர் ஆட்சி நீங்கி நம் மக்களே தங்களை ஆண்டு கொள்ள வேண்டுமென்பது அவரது இலட்சியம். சுயராஜ்யம் என்பதற்கு அவர் கொண்டுள்ள முழுப் பொருள் என்ன என்று கூறுமாறு என் தந்தையாரும் பெரும் தத்துவ ஞானியுமான காலஞ்சென்ற டாக்டர் பகவான்தாஸ் அவர்கள் காந்திஜியைப் பல முறைகள் வற்புறுத்திக் கேட்டிருக்கிறார். காந்தியடிகள் கூறிய சுயராஜ்யம் என்பதன் முழு அர்த்தத்தையும் மக்கள் தெரிந்து கொண்டால்தான் அவர்கள் திடீரெனச் சுதந்திரம் கிடைத்து விட்டால் 'இனி செய்வதென்ன?' என்று குழம்பாமல் சரியான முறையில் விவேகமாகச் செயலாற்ற முடியும் என்பதாலேயே டாக்டர் பகவான்தாஸ் இவ்வாறு பன்முறை கேட்டு வந்தார். எனினும், மகாத்மாஜி சுயராஜ்யத்தின் பொருளை விளக்கத் தீர்மானமாக

மறுத்து வந்தார். இவ்விரு மகாபுருஷர்கள் இவ்விஷயமாகப் பேசிய பல சந்தர்ப்பங்களில் நான் உடன் இருந்திருக்கிறேன். ஒவ்வொரு முறையும் முடிவு ஒன்றேதான். டாக்டர் பகவான்தாஸ் 'சுயராஜ்யம்' என்பதன் இலக்கணத்தைக் கூறுமாறு வற்புறுத்துவார்; காந்திஜியோ, எதிர்காலத்தில் சுதந்திர இந்தியாவில் ஏற்பட வேண்டிய அரசாங்க அமைப்பு பற்றித் தாம் முன்னதாகவே கட்டுப்படுத்துவதற்கு அதிகாரம் பெற்றிருக்கவில்லை என்பார்.

இந்த முக்கியமான கருத்து வேற்றுமையாலேயே அவ்விருவரும் நாட்டின் அரசியல் வாழ்வில் கூடி உழைக்க முடியாமல்போயிற்று. இது எனக்கு என்றும் வருத்தம் தருகிற விஷயம். இப்போது என் மனம் அந்தப் பழங்கால நினைவுகளில் செல்கிறது.

கருத்தே காந்திஜியின் சுயராஜ்ய விளக்கமாகும் என 'அதிகார பூர்வமான' குரலில் கூறுகிறார்கள். எனினும் இவர்கள் கூறும் கருத்துக்கள் ஒன்றுக்கொன்று மிகவும் மாறுபட்டிருக்கின்றன. காந்திஜியின் பெயரிலேயே ஒவ்வொருவரும் பிரமாணம் செய்கிறார்கள். ஆயினும் ஒருவருக்கொருவர் மாறுபட்ட குரலிலேயே பேசுகிறார்கள். இதன் பயனாகக் குழப்பமும், பகையும் — காந்தியடிகளின் பெயரால் குழப்பமும் பகையும் — ஏற்பட்டிருப்பதை என்னென்பது? நமது பொது வாழ்வை விஷமாக்கி, மக்களை மதிமயங்கச் செய்து, உண்மையான முன்னேற்றத்தை அசாத்தியமாக்கி விட்டிருக்கின்றன.

சுயராஜ்யம் என்ற சாமானியமான, இரண்டு அர்த்தங்கள் தொனிக்காத வார்த்தையை மகாத்மாஜி விளக்காததாலேயே

# பொருளும் உட்பொருளும்





**ஸ்ரீபிரகாசா**

காந்திஜி தமது 'ஹிந்த் ஸ்வராஜ்' என்ற நூலில் ஓர் ஆதர்ச அமைப்பைப் பற்றிக் கூறினாரேயன்றி நடைமுறைச் சர்க்காருக்கான கொள்கைகளை வகுக்கவில்லை. காந்திஜி மட்டும் தாம் விரும்பும் சுயராஜ்யம் எப்படியிருக்க வேண்டும் என்பதற்குச் சரியான குறிப்புக்கள் காட்டியிருந்தால் எப்படியிருந்திருக்கும் என்று எண்ணிப் பார்க்கிறேன். அவர் அவ்வாறு செய்திருந்தால், சுதந்திரம் கிடைத்தபின் — காந்திஜியும் நம்மிடமிருந்து மறைந்தபின் — அவரோடு நெருக்கமாகப் பணியாற்றிய தலைவர்களே சுயராஜ்யத்துக்கு வேறு வேறு உருவம் தர விரும்பிய சோகக் காட்சியைக் கண்டிருக்க மாட்டோம். அவர்கள் யாவரும் தாங்கள் காந்திஜியைப் பின்பற்றுவோர் எனக் கூறுகிறார்கள். அவர்களில் ஒவ்வொருவரும் தமது

இவ்வளவு தீய விளைவுகள் ஏற்பட்டுள்ளன வெனில், பல உட்பொருள்களைச் சுட்டும் வார்த்தைகளைப் பிரயோகிக்கும்போது இதைவிட ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமல்லவா? காந்திஜி சுயராஜ்யம் கோரிய காலத்தில் யாருமே சுயராஜ்யம் வந்த பின் நாம் எப்படிப் பேச வேண்டும், உட்கார வேண்டும், நடக்க வேண்டும் என்றெல்லாம் கேட்க அதிக இடமில்லை. காந்திஜிக்குப் பிறகு ஜவாஹர்லால் நேரு அவர்கள் பாரதப் பிரதமராகி மிகவும் அதிகாரமும் செல்வாக்கும் பெற்றார். நேரு அவர்கள் வார்த்தைகளைச் சற்றே கட்டுப்பாடின்றி உபயோகிப்பவர். அவர் தமது சொத்தாகப் பல வார்த்தைகளை விட்டுச் சென்றிருக்கிறார். இவற்றில் சிலவற்றை அவர் இடையறாமல் உபயோகித்திருக்கிறார். இவ்வார்த்தைகள்

கட்டிக் காட்டும் இலட்சியத்தை ஒவ்வொருவரும் பின்பற்ற வேண்டும் எனவும் கேட்டுக் கொண்டிருக்கிறார். எனவே காந்திஜியின் 'சுயராஜ்யம்' என்ற வார்த்தையைவிட இவை அதிமுக்கியத்வம் பெற்றவையாகும். 'செல்ல'மான இந்த வார்த்தைகளில் முக்கியமானவை, 'சோஷலிஸம்', 'விஞ்ஞான ரீதி', 'நவீனப் போக்கு' ஆகியவை. நம்மில் ஒவ்வொருவரும் சோஷலிஸ சிந்தனையுள்ளவராகவும், விஞ்ஞான ரீதியில் செல்பவராகவும், நவீனப் போக்கைக் கடைப்பிடிப்பவராகவும் இருக்க வேண்டும் என்பதே நேருஜி தினந்தோறும் நாட்டின் பல இடங்களிலும் தமது பேச்சுக்களில் மீண்டும் மீண்டும் வற்புறுத்திக் கூறியது.

அவரது பழைய நண்பன் என்ற முறையிலும், அவரோடு உழைத்தவன் என்ற முறையிலும், தேசம் போகிற போக்கில் திருப்தி காணாத ஒருவன் என்ற முறையிலும் நான் அவரிடம் இந்த வார்த்தைகளுக்கு என்ன பொருள் எனத் திரும்பத் திரும்பக் கேட்டிருக்கிறேன். சோஷலிஸ சிந்தனையாளர் அல்லது விஞ்ஞான ரீதியில் செல்பவர், அல்லது நவீன மனப்பான்மை யுள்ளவர் அல்லது மூன்றும் சேர்ந்த சோஷலிஸ — விஞ்ஞான — நவீன கூட்டுவாதி எப்படிப் பேசுவார், எப்படி உட்காருவார், எப்படி நடப்பார் என அர்ஜுனன் பாணியில் கேட்டிருக்கிறேன். அதை அறிந்தால் தான் நாமும் அப்படி நடந்து நேருஜி விரும்புகிறபடி இருக்க முடியும் என்று கூறியிருக்கிறேன். அவர் என் கேள்வி மிகவும் நியாயமானது என்று ஒவ்வொரு முறையும் சொல்லியிருக்கிறார் - ஆனால் என் கேள்விக்கு விடை என்னவோ கூறியதில்லை. அவரோடு நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேல் நெருக்கமாகப் பணிபுரிந்த எனக்கே இவ்விஷயத்தில் குழப்பம் இருக்கும்போது வேறு பலரும் இதே போல் குழம்பினால் ஆச்சரியப்படுவதற்கில்லை. சமையல் நன்றாயிருக்கிறதா என்பதற்குப் பரீட்சை, சமைத்ததை உண்டுபார்ப்பதேயாகும். ஒரு கொள்கையை ஒருவர் சொல்கிறார் என்பதை விட அதை வாழ்ந்து காட்டினாலே அக்கொள்கையைப் பரீட்சித்துப் பார்க்க முடியும். ஒருவர் குறிப்பிட்ட ஒரு கொள்கையைப் பிரசாரம் செய்கிறார் எனில் அவர் அக் கொள்கையைப் பின்பற்றி அதற்கேற்ப வாழ்ந்து காட்டுவார் என்று எதிர்பார்ப்பதே இயற்கை. கொள்கையைக் கூறும் தலைவரின் வாழ்க்கையைப் பார்க்க மக்களுக்கு உரிமை உண்டு; அப்போதுதான் அவர்களும் அதேபோல் வாழ முயலுவார்கள்.

இந்த ரீதியில் காலஞ்சென்ற நேரு அவர்கள் தாம் கூறியபடி ஒரு சோஷலிஸ— விஞ்ஞான — நவீன மனப்பான்மை படைத்தவர் எனக் கொண்டால் அவர் வாழ்ந்தது போல் நாமும் வாழ முயல வேண்டும் என்றாகும். ஆனால் அவர் அடைந்த ஸ்தானம் விசேஷமானது. அவர் வாழ்ந்த முறையைப் பின்பற்றுவது இந்தப் பரந்த உலகில் மிக மிகச் செருக்கே சாத்தியம். எனவே நாம் வேறு இடங்களிலேயே நமது கேள்விக்குத் தெளிவான விடை காண வேண்டும். நேருஜிக்குப் பிறகு பலர் அவரது கொள்கையின் பெயரால் பிரமாணம் இட்டுக் கொண்டு மக்களிடையே செல்வாக்குடன் தலைவர்களாக விளங்கி வருகிறார்கள். நேருஜியும் அவரது சகாக்களும் எப்படி காந்தியத்தை மந்திரமாகச் சொன்னார்களோ அவ்வாறே இவர்கள் நேருஜியின் கொள்கையை மந்திரமாகச் சொல்லியிருக்கிறார்கள். இவர்கள் வெறும் சொற்றொடர்களைப் பிரசாரமாகத் திரும்பத் திரும்பக் கூறுகிறார்களேயன்றி அவற்றைப் பற்றிச் சிந்தித்துப்பார்ப்பதில்லை. தலைமைஸ்தானத்தைப் பற்றியுள்ளவர்களுக்குப் பக்தி செலுத்தி, அவர்களுக்குப் பிரியமான வார்த்தைகளைத் திருப்பிச் சொல்லிவிட்டாலே தங்கள் கடமை தீர்ந்து போயிற்று என்று எண்ணுகிறார்கள். அன்றாட வாழ்க்கையில் இந்த வார்த்தைகளைப் பொருத்திக் காட்டுவது பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை. அதாவது தாங்கள் சொல்வதைத் தாங்களே செய்து காட்ட வேண்டும் என்பதில் அவர்களுக்குக் கவலையில்லை.

நான் ஏதோ விளையாட்டாகப் பேசவில்லை என்பதை வாசகர்களுக்கு மனப்பூர்வமாக உணர்த்த விரும்புகிறேன். மிகவும் மன வருத்தப்பட்டே இதை எழுதுகிறேன். நான் இப்போது பொதுக் கூட்டங்களுக்குச் சென்று இன்றையத் தலைவர்கள் பேசுவதை நேரடியாகக் கேட்டதில்லை. ஆயினும் செய்தித் தாள்களில் அவர்களின் பேச்சுக்களைப் படிக்கிறேன். நேருஜியின் லட்சியங்களான சோஷலிஸ — விஞ்ஞான — நவீன மனப்பான்மையை மக்கள் பின்பற்றி நடக்க வேண்டும் என அவர்கள் முறை விடுவதாகப் பத்திரிகைகளில் பிரதானமாக வெளியிடுகிறார்கள். காந்திஜி சுயராஜ்யத்தைப் பற்றிக் கூறிய காலத்தில் நாம் அரசியல் விடுதலை பெறுவதில்தான் முனைந்திருந்தோம்; பிற்பாடு அதிகாரத்துக்கு வருபவர்கள் சரியான முறையில் சுயராஜ்யத்துக்கு உருவம் தருவார்களென நம்பியிருந்தோம். எனவே காந்திஜி தமது சுயராஜ்யத்தை விளக்காவிடினும் கண்டனத்துக்கு ஆளாகாதிருக்க முடியும். நேருவும் எக்காரணம் பற்றியோ மக்களின் மனத்தைக் கவர்ந்து விட்டார். இவரே எல்லா விஷயங்களிலும் காந்திஜி நியமித்த வாரிசு என்பதாக மக்களால் நினைக்கப்பட்டவர். எனவே அவரும் தமது பிரசார மந்திரங்களை விளக்காவிடினும் கண்டனத்தினின்று தப்ப முடியும். ஆனால் இன்று ஆட்சியில் உள்ளவர்கள் காந்திஜி போலவோ, நேருஜி போலவோ கண்டனங்களிலிருந்து தப்பக் கூடியவர்களல்ல. இவர்கள் தாம் பிரசாரம் செய்வது போலவே உண்மையாக வாழ்ந்தும் காட்ட வேண்டியவர்கள்.

சின்னங்களை வணங்குவதோடும் பெரியவர்களின் பெயர்களைச் சொல்லிக் கோஷித்து மரியாதை செலுத்துவதோடும் நாம் திருப்திப்பட்டு விடுவதாகத் தோன்றுகிறது. நாம் கூறுகிற இலட்சியங்களை — அல்லது நாம் வழிபடுபவர்கள் கூறிய இலட்சியங்களை — செயலில் காட்ட வேண்டியதன் அவசியத்தை நாம் உணரவில்லை. இதனாலேயே தொடர்ச்சியாகத் தவறுகளும் கஷ்டங்களும் ஏற்படுகின்றன. இத

### தயக்கம் ஏன்?



சென்ற நூற்றாண்டில் அமெரிக்க ஜனாதிபதி ஆப்பிரகாம் லிங்கனின் முயற்சியால் அடிமை நிலை ஒழிந்தது. அடிமை முறை ஒழிப்புப் பிரகடனத்தில் கையெழுத்திடுமாறு காரியதரிசி லிங்கனிடம் கொண்டு வந்த போது, லிங்கன் பேனாவை மசியில் தோய்த்தார். அதில் கையெழுத்திடாமல் பேனாவை மேசை மீது வைத்தார். அதே போல் இரண்டு மூன்று முறை செய்தார். அப்போது அருகில் நின்ற தமது காரியதரிசியிடம், ''இன்று காலை முதல் என்னைப் பாராட்ட வந்தவர்களுடன் கை குலுக்கிக் குலுக்கி எனது வலது கை வலியெடுத்திருக்கின்றது. இந்த அடிமை முறை ஒழிப்புத்தான் என்னுடைய உயிர்நாடி. நான் கைநடுங்கிக் கொண்டே கையெழுத்திட்டால் அரை மனத்துடனே இந்தக் காரியத்தைச் செய்தேன் என்று கூறுவார்கள்'' என்றார்.

— இரா. சுந்தரவரதன் —

னால் சொல்வதைச செய்து காட்ட முயலாத வேஷதாரிகள் நாம் எனப் பிறர் எண்ணி இடமளித்தவர்களாவோம். இந்நாட்டில் ஒவ்வொருவரும் சோஷலிஸ — விஞ்ஞான — நவீன மனப் போக்குப் பெற்றிருக்க வேண்டும் என்று வற்புறுத்தும்போது அதன் பொருள் என்ன என்பதையும் நிச்சயமாக எடுத்துக் கூறத் தானே வேண்டும்? இக் கொள்கைகளைப் பிரசாரம் செய்பவர்கள் அவ்வழியிலேயே நடந்தால்தானே மற்றவர்களும் அதைப் போல் வாழ முயலுவதற்கு இயலும்? இந்த வார்த்தைகளின் பொருள் என்னவென்று புரிந்து கொள்ள நான் மிகவும் விரும்புகிறேன். இவை நல்ல கொள்கைகள்தான் என்பதற்கு நான் விளக்கம் கண்டால் இக்கொள்கைகளில் நம்பிக்கை வைத்துப் பிரசாரம் செய்பவர்கள் எப்படி வாழ வேண்டுமோ, அவ்வாறு வாழ்ந்து காட்ட முயலுவேன்.

முதலில் சோஷலிஸம் என்றால் என்ன என்பதை நாம் அறிந்தாக வேண்டும். ஏனெனில் சோஷலிஸத்தை ஒரு சர்க்கார் அமைப்பாகவும், வாழ்முறையாகவும் இன்றைய உலகில் மிகவும் தீவிரமாகப் பிரசாரம் செய்து வருகிறார்கள். 'சோஷலிஸம் என்றால் அதிகார வர்க்கம் என்று அர்த்தம்' என ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் சுமார் நூறாண்டுகளுக்கு முன்னமே கூறினார். ஒவ்வொருவரும் தமது திறமைக்கேற்ப உழைத்து, தேவைக் கேற்ப ஊதியம் பெற வேண்டும் என்பது சோஷலிஸம் விரும்பும் இலட்சியம். இது வெகு நல்ல இலட்சியம் என்பது வெளிப்படையாகவே தெரிகிறது. ஆனால் இவ்வாறு ஒவ்வொருவரின் திறமையறிந்து வேலை வாங்குவதற்கும், அவரது தேவையறிந்து ஊதியம் தருவதற்கும் ஒரு பெரிய அதிகார ஸ்தாபனம் இருக்க வேண்டும். அரசாங்கம் ஒன்றுதான் இத்தகைய அதிகார ஸ்தாபனமாயிருக்க முடியும். ஆனால் அரசாங்கம் என்பதற்குக் கையோ காலோ கிடையாது. அது ஒரு சிப்பந்திகள் பட்டாளத்தின் மூலம் செயல்படுகிறது. சோஷலிஸ இலட்சியத்தைச் செயலாக்குவதில் இந்த அரசாங்க அதிகாரிகளே முக்கிய அங்கமாகின்றனர். அரசாங்கத்தோடு சம்பந்தப்படாதவர்களுக்கு அப்போது எந்தச் சக்தியும் இல்லாமற் போகிறது. அவர்கள் இந்த அதிகாரிகளைக் குறித்து நடுங்கியபடியே வாழ வேண்டியிருக்கிறது. இவ்வதிகாரிகள் ஐயுறவான போக்குக்கு ஒருகாலும் அப்பாற்பட்டவர்களல்ல. 'சோஷலிஸம் என்றால் அதிகார வர்க்கம்' என ஸ்பென்ஸர் கூறியது இதனால்தான்.

சுயராஜ்யம் பெற்ற பின் நம் நாட்டில் சோஷலிஸம் செயலாகிற விதத்தை அறிந்த பின் 'இந்த விடக் கடுமையான முறையில் அது ருஷியாவிலும் சீனாவிலும் செயலாகும் விதத்தைப் பற்றிப் படித்த பின், என்னை இது கவரவில்லை. சோஷலிஸத்தின் போக்கு தனி மனிதனின் சுதந்திரத்தைப் பறித்து அவனை அரசாங்கத்தின் அடிமையாக்கிவிடுகிறது என அஞ்சுகிறேன். இது தனி மனிதனின் மாண்புக்கு விரோதமெனவே எனக்குத் தோன்றுகிறது. நமக்குப் பூரண ஜனநாயகக் குடியரசின் உரிமைகளைத் தந்த அரசியல் சாஸனத்தின் வார்த்தைகளே சோஷலிஸத்தை விடச் சிறந்தவை என நான் கருதுகிறேன். ஜனநாயகம் என்பதால் அங்கு சோஷலிஸம்தான் நிலவ வேண்டும் என்றாகி விடாது. நேருவின் அந்திம காலத்தில் அவரது "'செல்ல'ச் சொற்றொடராக இருந்ததும் இப்போது பெருவாரியாக வழங்குவதுமான 'ஜனநாயக சோஷலிஸம்' என்பதற்கு என்னால் ஓர் அர்த்தமும் காண முடியவில்லை. ஒரு வேளை ஜனநாயக முறையில் ஒவ்வொருவரும் தாம்பெற்றுள்ள வாக்குரிமையைப் பிரயோகிக்கும்போது தங்களுடைய தனிமனித சுதந்திரத்தையே அதனால் அழித்துக் கொண்டு 'நாங்களும் சோஷலிஸ்டுகளே' என்று கூறுவதுதான் 'ஜனநாயக சோஷலிஸ'த்தின் பொருள் போலும்!

சுயராஜ்யம் கிடைப்பதற்கு மூன்று நாட்கள் முன்பு நான் பதவி ஏற்றேன்—கராச்சியில் பாகிஸ்தானுக்கு அனுப்பப்பட்ட முதல் இந்திய தூதராக. அதன்பின் 1962 வரை பதினைந்தாண்டுகள் பல பதவிகளுக்கு மாறிவிட்டு வெளியேறினேன். பதவியிலிருந்து விலகிய போது அதைப் பெரிதும்

வரவேற்றேன். கடந்த மூன்றரை ஆண்டுகளாக நான் எப்பதவியும் வகிக்காமலிருக்கும் இந்நிலையில் அதற்கு முந்தைய பதினேந்தாண்டுப் பதவி காலத்தில் அறிந்ததைவிட அதிகம் அறிந்திருக்கிறேன். சுயராஜ்யத்துக்கு முன் முப்பதாண்டுகள் காங்கிரஸ் இலட்சியங்களுக்காகப் பொதுத் தொண்டு செய்தபோது நம் நாட்டைப் பற்றி நான் அறிந்ததைவிட இந்த மூன்றரை ஆண்டுகளில் அதிகம் அறிந்திருக்கிறேன். இப்போது அதிகாரத்தில் இல்லாதவர்களின் அந்தஸ்து நாளுக்கு நாள் குறைந்து வருவதைக் காண்கிறேன். சோஷலிஸம் என்ற பெயரில் அற்ப அதிகாரம் படைத்தவர்களும் தங்கள் அதிகாரத்தைப் பொறுப்பற்ற முறையில் துஷ்பிரயோகம் செய்யும் காட்சியைக் கண்டு வருந்துகிறேன்.

நமது புராதன நாகரிகம் எப்போதுமே தனி மனித சுதந்திரத்தை முக்கியமாகக் கருதியிருக்கிறது. நமது சுயராஜ்யத்துக்கு ஏதேனும் பொருள் இருக்க வேண்டுமாயின், நாம் நவீன ஜனநாயகத்தைப் பின்பற்றும் போதே அதனை நமது புராதன இலட்சியத்தின் மீது பதிக்க வேண்டும். இரண்டுமாக இணைந்து மிக நல்ல பலன்களை அளிக்கும்.

ஜனநாயக சோஷலிஸத்தைப் பிரசாரம் செய்பவர்கள் தங்களது வாழ்க்கையின் மூலம் அந்தக் கொள்கைக்காரர்கள் எப்படிப் பேச வேண்டும், எப்படி உட்கார வேண்டும், எப்படி நடக்க வேண்டும் என்பதற்கெல்லாம் (கிதை சொற்றொடர்படி) குறிப்புக் காட்டுவதில்லை. அவர்கள் பிறர்க்கு மட்டும் உபதேசிக்கிறார்கள். இவர்களில் பெரும்பாலோர் அரசாங்க இயந்திரத்திலேயே அங்கமாயிருக்கிறார்கள்; மற்றவர்கள் தங்கள் நலனுக்காகவே அரசியல் செல்வாக்கைப் பிரயோகிக்கும் சக்தி பெற்றிருக்கிறார்கள். எனவே, இவர்கள் (சோஷலிஸத்துக்கு உரிய) அதிகார வர்க்கத்தின் ஆளுகைக்கு உட்படுவதில்லை. இப்படிப்பட்டவர்களின் சோஷலிஸத்தோடு எனக்கு எந்தத் தொடர்பும் வேண்டியதில்லை என்றே நினைக்கிறேன்.

சோஷலிஸத்துக்கு அடுத்தது 'விஞ்ஞான மனப்பான்மை'. இதற்கு என்ன பொருள் என்று என்னால் சொல்ல முடியாது. விஞ்ஞானம் சத்தியத்தைத் தேடிச் செல்கிறது என்று நிச்சயமாகக் கூறப்படுகிறது. அது இயற்கை விதிகளைக் கூர்ந்து ஆராய்கிறது. ஆராய்ச்சிப் பலனை மனித நலனுக்கு உபயோகிக்கிறது. பல சகாப்தங்களாக இவ்வாறே நடந்து வந்திருக்கிறது. இன்று 'டிராக்டர்'களை எப்படி விஞ்ஞானக் கருவியாகச் சொல்கிறோமோ, அதே போல் ஒரு காலத்தில் ஏரும் கலப்பையும் விஞ்ஞான ஆராய்ச்சியிலேயே பிறந்தன. இன்றைய ஆகாய விமானம் போலவே ஒரு காலத்தில் மாட்டு வண்டி விஞ்ஞான அறிவுக்கு இசைந்ததாக இருந்தது. அதாவது அவ்வப்போதும் மக்கள் தாமாகவே அந்தந்தச் சமயத்துக்குரிய அளவில் விஞ்ஞான மனப்பான்மை படைத்துத்தான் இருந்தார்கள். ஒரு வேளை ஒவ்வொருவரும் சந்திரனைச் சுற்றிப் பறக்க வேண்டும் என்றும், நாசகர ஆயுதங்களை ஆராய்ச்சியால் கண்டுபிடிக்க வேண்டும் என்றும் நமது 'விஞ்ஞான மனப்பான்மை'க்காரர்கள் கருதுகிறார்களோ, என்னவோ! அவ்வாறாயின் எனக்கு இந்த விஞ்ஞான மனப்பான்மை வேண்டவே வேண்டாம் என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. இயற்கையான வளர்ச்சியின் போக்கை ஒப்புக் கொண்டு அதற்கேற்பச் செயலாற்றுவதே 'விஞ்ஞான மனப்பான்மை' எனில், இந்த முறை நாம் எப்போதுமே பின்பற்றி வருவது தான். இதை வீட்டுக் கூரையின் மீதேறி நின்று கொண்டு கூச்சல் போடுவதால் எந்த அதிகப்படியான பலனும் கிடைத்துவிடாது.

ஆக, எனக்கு இந்த 'விஞ்ஞான மனப்பான்மை' புரியவில்லை. இதைக் கோஷிப்பவர்கள் விஞ்ஞான மனப்பான்மை பெற்றவன் எப்படிப் பேச வேண்டும், உட்கார வேண்டும், நடக்க வேண்டும் என்றெல்லாம் எனக்குச் சொல்ல வேண்டுமென விரும்புகிறேன். பிரத்தியட்சமாகப் பார்க்கும் போது, விஞ்ஞான மனப்பான்மை பற்றிப் பேசுபவர்களின் நடத்தைக்கும் எனது நடத்தைக்கும் எந்த வித்தியாசமும் இருப்பதாகத் தெரியவில்லை. எனவே, இத்தகைய சொற்றொடர்களைக் கோஷிப்பது ஏதோ ஒரு பேய்த் தோற்றத்தை ஏற்படுத்தி எச்சரிக்கையற்ற மக்களைப் பயமுறுத்திக் குழப்புவதற்குத்தான் என நினைக்கிறேன்.

அடுத்தபடியாக, 'நவீன மனப்பான்மை.' இதற்கு என்ன பொருளாயிருக்கக் கூடும்? இவ்வுலகில் எல்லாக் காலங்களிலுமே பற்பல போக்குடைய மக்கள் வெவ்வேறு சூழ்நிலைகளில் வாழ்ந்திருக்கிறார்கள்; வாழ்கிறார்கள். இவர்களில் யார் நவீன மனப்பான்மை பெற்றவர், யார் பெறாதவர் என்பது அபிப்பிராய பேதத்துக்குரிய விஷயம். முள்ளுக் கரண்டியும் கத்தியும் உபயோகித்து உண்பது நவீனம், இந்த நவீனப் போக்கையே நாம் அநுசரிக்க வேண்டும், விரல்களை உபயோகித்து உண்ணும் வழக்கத்தை நிறுத்த வேண்டும் எனில் இப்படிப்பட்ட நவீன மனப்பான்மையை என்னால் ஆதரிக்க முடியாது. இரண்டு முறைகளும் வேண்டுமாயின் இருந்துவிட்டுப் போகட்டும்; இரண்டும் ஒரே போதில் வாழ முடியும். குறிப்பிட்ட முறையில் உடை அணிவது தான் நவீனம், மற்றவை பிற்போக்கைக் காட்டுவது எனில் எனக்கு நவீன மனப்பான்மை வேண்டியதேயில்லை. பல வித வேறுபாடுகள் இருப்பதே வாழ்க்கைக்கு அழகு. அதுவே வாழ்க்கைக்கு வண்ணமூட்டும், ஒவ்வொருவரும் தமது தனித் தன்மையை வெளிக் காட்ட உதவும். அவரவரும் தமது ரசனையைப் பிரயோகிக்க வழிகாட்டும். பொதுவாக அமெரிக்கா அல்லது ருஷியாவைக் 'காப்பி' அடிப்பதே நவீன மனப்பான்மை எனக் கருதப்படுகிறது. ஆனால் இவ்விரண்டு முறைகளுக்குள்ளேயே பெரு வேற்றுமையுள்ளது. எனவே இவற்றில் ஏதேனுமொன்றை அல்லது மற்றதைப்

பின்பற்ற முயல்வது விநாசத்துக்கு இட்டுச் செல்லக் கூடும். ஆகையால் நமது நாட்டு மக்களின் பாரம்பரியப் பண்பில் பிறந்த மரபைச் சார்ந்து அதன் மீது இயன்ற அளவுக்கு நம் வாழ்வை எழுப்பிக் கொள்வதே சாலச் சிறந்ததாகும்.

உதாரணங்களை நான் பெருக்கிக் கொண்டு போக முடியும். ஆனால் இந்த அடிப்படை எடுத்துக்காட்டுகளே போதும். மொத்தத்தில் நான் எழுதியிருப்பதிலிருந்து தற்போது வெகு டம்பத்துடன் சாற்றப்படும் வார்த்தைகளின் சரியான பொருள் எனக்கு விளங்கவில்லை என்பது புரியும். இவ்வார்த்தைகளைக் கோஷிப்பவர்கள் அனைவரும் ஒரே போக்கில் செல்லாமல் தங்களுக்குள்ளேயே மாறுபட்டு நடக்கிறார்கள். இவ்வாறு இவர்களுக்குள்ளே ஒரு சீரான போக்கு இல்லாதபோது தங்களைப் பின்பற்றக்கூடிய மற்றவர்களுக்குத் தங்கள் வார்த்தைகளின் பொருளை இவர்கள் குறிப்பிட்டுக் காட்ட இயலாதல்லவா ?

எனக்கு இத்தனை ஐயங்களும், சிரமங்களும் இருக்கின்றன வெனில், என்னளவுக்கு வெளிப்படையாகப் பேசாத கோடிக் கணக்கான மற்றவருக்கும் இதே போல் ஐயங்கள் இருக்கக் கூடும் என்றே அஞ்சுகிறேன். எனினும் தங்களைப் பிற்போக்குவாதி என்று சொல்லி விடுவார்களோ என்பதால் இவர்கள் இந்நாள் தலைவர்கள் விரும்பும் கோஷங்களை எழுப்புகிறார்கள். அதற்கேற்பத் தங்கள் வாழ்க்கையை மாற்றிக் கொள்ளாமலே, மாற்றிக் கொள்ள விரும்பாமலே, மாற்றிக் கொள்வது நல்லது என்றுகூட நினைக்காமலே இருந்து வருகிறார்கள்.

தலைவர்கள் தங்கள் வார்த்தைகளை ஜாக்கிரதையாக உபயோகிக்க வேண்டிய தருணம் வந்து விட்டது. ஒரு வார்த்தையைச் சொல்லுமுன் அவர்கள் அதனைத் தாங்களே புரிந்து கொள்ள வேண்டும்; அதன் உட்கிடைக்கைகளை அறிந்து கொள்ள வேண்டும்; வார்த்தையின் பொருளைத் தங்கள் வாழ்விலேயே பொருத்திக் காட்ட வேண்டும். இல்லாவிடில் மற்றவர்களைத் தவறான வழியில் அழைத்துச் செல்கிற குற்றத்துக்கும் அவர்கள் ஆளாவர். நமக்கு வேண்டியது தெளிவான சிந்தனை. நமக்கு வேண்டியது நமது மக்களின் உண்மையான மனப்போக்கைப் பற்றிய ஞானம். இதையறிந்தாலே அவர்களுக்குப் புரியக்கூடிய இலட்சியங்களைக் கொடுத்து, அவர்கள் காரியத்தில் அநுசரிக்கக் கூடிய முறைகளைக் காட்டலாம்.

உள்ளீடற்ற வார்த்தைகளின் மீது நீண்ட காலம் வாழ்ந்து விட்டோம். இவற்றைக் கொண்டு சிலர் லாபம் சம்பாதித்திருக்கிறார்கள்; மற்றவர்கள் கஷ்டத்துக்கு ஆளாகி யிருக்கிறார்கள். தவறான காரியங்களுக்கெல்லாம் நாம் முற்றுப்புள்ளி வைத்தாக வேண்டும். சரியான மார்க்கத்தை, சரியான மார்க்கமொன்றையே நாம் பின்பற்ற வேண்டும். நம் நாடு ஒரு ஜனநாயகம் என்பதை உணர வேண்டும். நம்மில் ஒவ்வொருவரும் உண்மையான ஜனநாயகவாதியாயிருக்க வேண்டும். அதாவது ஒவ்வொருவரும் நல்ல பிரஜையாக, கடுமையாக உழைப்பவராக, நேர்மையுள்ளவராக, நம்பகமானவராக இருக்க வேண்டும். பொறுப்புள்ள ஒரு மனிதன் என்கிற முறையில் ஒவ்வொருவரும் தமது சமூகக் கடமைகளை ஆற்ற வேண்டும்; தமது தொழிற் கடமைகளை ஆற்ற வேண்டும். ஜனநாயகத்தில் ஒவ்வொருவருக்குமே தமது நலன்களை நாட்டின் உயர் பீடங்களில் எடுத்துச் சொல்லவும், தமது திறமைகளுக்கு உரிய மதிப்பைப் பெறவும், தமது சேவைக்குப் பிரதியான வசதியைப் பெறவும் உரிமையுள்ளது. ஜனநாயகத்தில் சர்க்கார் மக்களுடைய வாழ்வின் ஒவ்வோர் அம்சத்திலும் தலையிடுவதில்லை. தேவைப்படும் வசதியைப் பெற இயலாதவர்கள் கௌரவமான பிரஜைகளாக உயருவதற்கு அரசாங்கம் உதவி புரியும் போதே, தனிநபர் சுதந்திரத்துக்கு அதிகபட்ச வாய்ப்பளிப்பதுதான் ஜனநாயகம். நமது அரசியல் சாஸனம் ஜனநாயகத்தைப் பற்றித்தான் பேசுகிறதேயன்றி, மற்ற எந்த முறை பற்றியும் குறிப்பிடவில்லை. சாஸனத்தை நாம் சத்தியமாகப் பின்பற்றுவோமாக. ஆண்டவனுக்குச் சத்தியமாக நாம் நடப்போமாக. தேசத்துக்கு எக்காலத்திலும் தீங்கு நேராதபடி காத்து அதன் சத்தியமான தொண்டர்களாக விளங்குவோமாக !

**கெ**ன்னடி தேர்தலுக்கு நின்ற சமயம் அது. அவரை எதிர்த்து நின்ற நிக்சன் பெண்கள் கூட்டமொன்றில் '' கென்னடி ஒரு பொய்யர்'' என்று கடுமையாகத் தாக்கிப் பேசி விட்டுச் சென்றிருந்தார். அதே கூட்டத்தினரிடையே கென்னடி பேச வேண்டும். கென்னடி எழுந்தார்: '' சீமாட்டிகளே ! நீங்கள் மிகவும் அழகுடையவர்கள்; அறிவு நிறைந்தவர்கள் என்று நான் சொல்



கிறேன் ! ஆனால் என்னைப் 'பொய்யன்' என்று திரு நிக்சன் கூறினார். நான் பொய்யனா?'' என்றார். கென்னடியைப் பொய்யன் என்று ஏற்றுக் கொண்டால் அவர் அந்தப் பெண்களைப் பற்றிக் கூறியது பொய்யாகும் ! கென்னடியின் நாவன்மையைக் கண்டு அந்த மாபெரும் கூட்டம் கைதட்டி ஆரவாரம் செய்தது !

ஆதாரம் : '' அமைதி காத்த அண்ணல் கென்னடி'' என்னும் நூல்.

- குடந்தை மோகன்.

தமிழிலும் விஞ்ஞானப் படங்கள் வரவேண்டும் என்ற கோரிக்கையுடன் சமீபத்தில் 'கல்கி'யில் வெளிவந்த குட்டி கிருஷ்ணனின் கட்டுரையைப் படித்திருப்பீர்கள். அமெரிக்காவிலிருந்து வந்த விஞ்ஞானத் துணுக்குப் படங்களைப் பார்த்துவிட்டு நம் நாட்டுத் திரைப்படக் கலைஞர்களில் பெரிய நடிகர்கள் அந்தத் துறையில் கவனம் செலுத்த வேண்டிய அவசியத்தை வலியுறுத்தியிருந்தார். மேற்படி நடிகர்கள் தங்களுக்குள்ள செல்வாக்கைப் பயன்படுத்தி, 'இந்தக் கதைப் படத்துடன் இரண்டுதரமான விஞ்ஞானத் துணுக்குப் படங்களை எனக்குத் திருப்தியளிக்கும் வகையில் நீங்கள் எடுப்பீர்களா?' என்று படாதிபதியைக் கேட்க வேண்டும் – என்றும் குறிப்பிட்டிருந்தார்.

இது சம்பந்தமாகப் பெரிய நடிகர்களைக் கண்டு பேச வேண்டும் என்ற நோக்கத்துடன் பத்மஸ்ரீ ஷிவாஜி கணேசனைச் சந்திக்க அவர் இல்லம் சேர்ந்தோம். தமக்கே உரிய முகமலர்ச்சியுடன் வரவேற்றார். உரையாடல் ஒரு மணி நேரத்துக்கும் மேலாகவே நீண்டது.

''எந்த ஒரு விஷயத்தையும் மக்களிடையே எடுத்துச் சொல்ல சினிமாவைப் போன்ற சக்தி வாய்ந்த சாதனம் வேறொதுவுமில்லை. அதுவும் மாணவர்களிடையே சினிமாவுக்கு இருக்கும் கவர்ச்சியைப் பற்றிக் கேட்க வேண்டாம். 'அண்ணாமலைப் பல்கலைக் கழக மாணவர்கள் தங்களுக்குப் படிப்புக்காக அனுப்பப் படும் பணத்தில் நாற்பது சத விகிதம் சினிமாப் படங்களைப் பார்ப்பதில் செலவிடுகிறார்கள்' என்ற புள்ளி விவரம் சமீபத்தில் பத்திரிகைகளில் வந்திருந்தது. அது அந்த ஒரு பல்கலைக் கழக மாணவர்களுக்கு மட்டுமல்ல; எல்லாக் கல்லூரி, பல்கலைக் கழக மாணவர்களுக்கும் பொருந்தும். அந்த மாணவ குலத்துக்குப் பயன்படும் விதத்தில் தமிழில் விஞ்ஞானப் படங்கள் வர வேண்டாமா? அது தமிழுக்கும் செய்த சேவையாகுமே? முதியோர் கல்விக்கும் உதவியதாகுமே? பொழுதுபோக்குப் படங்கள் தேவைதான். ஆனால் அவை மட்டும் போதுமா?

பிரதான படம் திரையிடப்படு முன்னர் விஞ்ஞான சம்பந்தமான துணுக்குகளைக் கூறும் துணுக்குப் படங்களைக் காட்ட நீங்கள் உதவி புரியக் கூடாதா?'' என்று கேட்டோம்.

அதற்கு நடிகர் திலகம், ''அது சம்பந்தமாக நான் என்ன செய்ய வேண்டும் என்று விரும்புகிறீர்கள். 'கல்கி'யில் குறிப்பிட்ட அக் கட்டுரையைப் படித்தேன்...'' என்றார்.

''பத்து அல்லது பதினைந்து நிமிஷ நேரம் ஓடக்கூடிய ஒரு விஞ்ஞானத் துணுக்குப் படத்தைத் தயாரித்துச் செய்திப் படங்கள்மாதிரி தியேட்டரில் காட்டப் படாதிபதிகளைச் சம்மதிக்கச் செய்ய வேண்டும். அது உங்களுடைய செல்வாக்கில் நடக்கக் கூடிய காரியம் என்றே தோன்றுகிறது.''

''செய்திப் படங்களை அரசாங்கச் செய்தி இலாகா தயாரிக்கிறது. விஞ்ஞானத் துணுக்குப் படங்களை யார் தயாரிப்பார்கள்? அதற்குத் தேவையான கச்சா பிலிமுக்கு எங்கே போவது?''

''இதுபோன்ற உபயோகமான விஷயத்துக்குக் கச்சா பிலிம் தரமாட்டோம் என்று அரசினர் கூறமாட்டார்கள். மேலும் இதற்கென்று அதிகப்படி பிலிம் தேவையில்லை. மூன்று மணி நேரத்துக்கு மேல் காட்டப்படும் பிரதான படத்தில் சுமார் அரை மணி நேர அளவைக் குறைத்து அதனால் மிச்சமாகும் பிலிமைக் கொண்டு விஞ்ஞானத் துணுக்குப் படங்களைத் தயாரிக்க முன்வந்தால் அப் படாதிபதிக்கு என்ன குறைந்து விடும்?''

''...வருகிற லாபத்தில் ஒரு பகுதி குறைந்துவிடும்! படத்தின் நேரம் அரை மணி குறைந்தால் படப் பிடிப்புச்

செலவில் இருபதாயிரம் ரூபாய் குறைந்தது என்றுதான் கணக்குப் போட விரும்புவார்கள்.''

''அப்படிக் கணக்குப் போடுவதானால் அது நம் துரதிர்ஷ்டம்தான். சாதாரணமாக இப்போது மூன்று மணி நேரத்துக்குக் குறைவாக யார் படமெடுக்கிறார்கள்? அநேகமாக இல்லவே இல்லையே! மேனாடுகளிலிருந்து வரும் படங்கள் நீளத்தில் சிறியவை. அவற்றுடன் துணுக்குப் படங்கள் ஒன்றோ இரண்டோ காண்பிக்கப்படுகின்றன. இந்த முறையை ஏன் நாமும் பின்பற்றக் கூடாது?''

''மேனாட்டிலிருந்து வரும் துணுக்குப் படங்கள் விஞ்ஞானப் படங்கள் அல்லவே? அவைகள் டாக்குமெண்டரி படங்கள்.''

''வாஸ்தவம். ஆனால் டாக்குமெண்டரி படங்களும் உபயோகமானவையே. மேனாடுகளில் ஒவ்வொரு 'பள்ளியிலும் கலாசாலையிலும் சினிமா புரொஜெக்டர்

இருக்கிறது. விஞ்ஞானத் துணுக்குப் படங்களைக் கல்லூரியிலோ பள்ளியிலோ போட்டுக் காட்டலாம். நம் நாடு அந்த உயர்நிலையை அடைய எவ்வளவோ நாளாகும். அதனால்தான் அரசினரின் செய்திப் படம் அல்லது டாக்குமெண்டரி படம் ஒன்றைத் தவிரப் படாதிபதியே எடுத்தனுப்பும் டாக்குமெண்டரிப்படமோ, அல்லது விஞ்ஞானத் துணுக்குப் படமோ பிரதான கதைப் படம் திரையிடப்படுவதற்கு முன்னால் காண்பிக்கப்பட வேண்டும் என்று விரும்புகிறோம். ஆயிரமாயிரம் மாணவர்கள் இதனால் பயன் பெறுவார்கள்.''

''இந்தப் பெரிய தியாகத்தை ஏன் படாதிபதி செய்ய வேண்டும் என்று விரும்புகிறீர்கள்? சர்க்கார் (கல்வி இலாகா ங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்யலாமே!''

''தாராளமாகச் செய்யலாம். பல வீண் செலவுகளைக் குறைத்துக் கொண்டு இந்த நல்ல காரியத்தில் அவர்கள் முனையலாம். ஆனால் அரசினரைவிட இந்தத் துறையிலேயே உள்ளவர்கள் இதனை இன்னும் திறம்படச் செய்ய இயலும். படத் தயாரிப்பாளர்களிடம் மாணவ குலத்துக்குச் சேவை செய்யும் மனப்பான்மை மட்டும் இருக்குமானால் இதைச் சாதிக்க முடியும் என்றே தோன்றுகிறது.''

''நம் படாதிபதிகளில் பெரும்பான்மையோரிடம் சொந்தத்தில் மூலதனம் கிடையாது. அதிக வட்டிக்குக் கடன் வாங்கிப் பெரும் செலவு செய்து படம் தயாரிக்க முற்பட்டுச் சிரமப்படுபவர்கள்தான் இந்தத் தொழிலில் அதிகம். ஒரு 'மெஸேஜ்' எடுத்துக் கூறும் படத்தை — அதாவது ஒரு நல்ல

# சிவாஜி கணேசன் சொல்கிறார்

கருத்துள்ள படத்தை — அரும்பாடு பட்டுத் தயாரித்து நஷ்டப்பட்டிருப்பவர்களெல்லாம் சின்னப் படாதிபதிகள்தான். அப்படியிருக்க விஞ்ஞானத் துணுக்குப் படங்களை எடுக்க அவர்களுக்கு எப்படித் துணிவு வரும்? இப்படிச் சொல்லுவதனால் விஞ்ஞானத் துணுக்குப் படங்களை நான் எதிர்ப்பதாக நீங்கள் நினைத்துவிடக் கூடாது. பெரிய படாதிபதிகள் — அதாவதுஸ்ரீ எஸ். எஸ். வாஸன், ஸ்ரீ ஏ.வி.எம்., ஸ்ரீ நாகி ரெட்டி போன்றவர்கள் — மனம் வைத்தால் இதைத் தாராளமாகச் செய்யலாம். ஆனால் படாதிபதிகளை நாங்கள் ஆணையிடவோ, வற்புறுத்தவோ முடியாதல்லவா?''

''...வற்புறுத்த வேண்டாம். கேட்டுக் கொள்ளலாமே! உங்கள் வேண்டுகோளை அவர்கள் புறக்கணித்து விடுவார்களா?''

''புறக்கணிப்பார்களா, மாட்டார்களா என்பது வேறு விஷயம். இது பிஸினஸ், ஸார், பிஸினஸ்! எந்தத் தயாரிப்பாளனும் ஆதாயம் இல்லாமல் எதையும் செய்ய முன் வர மாட்டான். நீங்கள் அவனைத் தியாகம் செய்யச் சொல்லுகிறீர்கள்.''

''ஆரம்பம் என்று ஏற்பட்டு இம்முறை பிரபலமாகிவிட்டால் படாதிபதிகளுக்கு இது ஆதாயமாகக்கூட இருக்கும் என்று எங்களுக்குத் தோன்றுகிறது.''

''இருக்கலாம்'' என்றார் சிவாஜி.

''தியேட்டர் சொந்தக்காரர்கள் இவற்றைத் திரையிடச் சம்மதிக்க வேண்டுமே?'' என்றார் அருகிலிருந்த சிவாஜியின் நெருங்கிய நண்பர் ஒருவர்.

''அதைக்கூட ஒருவாறு சமாளித்துவிடலாம். பூனைக்கு யார் மணிகட்டுவது என்பதுதான் முக்கிய பிரச்னை'' என்றார் பத்மஸ்ரீ.

''எந்தத் துறையிலும் ஆரம்பம் என்று ஏற்பட்டால்தானே முன்னேற்றத்துக்கு வழி உண்டு? ஸினிமா தோன்றிய ஆரம்ப நாட்களில் எத்தனை பேர் இத்தொழிலில் புகத் துணிந்தார்கள்? இன்று புற்றீசல் போல் எத்தனை படாதிபதிகள் இருக்கிறார்கள்? படப் பிடிப்பு டெக்னிக்குகளில் எவ்வளவு முன்னேற்றம் கண்டிருக்கிறோம்? மேலும் பெரிய நடிகர்களைப் போட்டுத் தயாரிக்கும் 'ஸ்டார் வால்யூ' படங்களுக்குச் செலவாவது போல் அப்படியொன்றும் பிரமாதமாக இந்தத் துணுக்குப் படங்களுக்குச் செலவாகி விடும் என்று தோன்றவில்லை!''

''யார் உங்களுக்குப் பெரிய நடிகர்களைக் கொண்டு தயாரிக்கப்படும் படங்களுக்குச் செலவு அதிகமென்று சொன்னது? அநுபவம் முதிர்ந்த நடிகர்கள் நடிக்கும் படங்களில் 'ரீடேக்' இருக்காது. புது முகங்கள் விஷயம்



''கூடையை எடுத்துக்கிட்டு எங்கே அவசரமாக் கிளம்பிட்டே?''

''காலேஜுக்கு, ஸ்கூட்டரிலே போனேன்; அதை வாரிக்கொண்டு வரத்தான்!''

அப்படியில்லை. எடுத்த காட்சிகளையே மீண்டும் மீண்டும் எடுத்துப் பிலிம் ஏராளமாகச் செலவாகுமே! நானும் புது முகமாகத் திரை உலகில் நுழைந்தவன்தான். நான் நடித்த முதல் படமான 'பராசக்தி'யில் எத்தனை 'ரீடேக்'குகள் என்று உங்களுக்குத் தெரியுமா?''

''அது சரி. பொழுது போக்குக்காகத் தயாரிக்கப்படும் கேளிக்கைப் படங்களுடன் சில நிமிஷ நேரமே ஓடக்கூடிய பயனுள்ள தகவல்கள் அடங்கிய சிறு படங்களையும் சேர்த்துக் காட்டுவது அவசியம் என்பதை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா?''

''ஆகா, நிச்சயமாக, தாராளமாக ஒப்புக் கொள்ளுகிறேன். மாணவ குலத்துக்குப் பயன்படும் விஞ்ஞான உண்மைகளைப் படத்தின் மூலம் பரப்புவது எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது. நான் எடுக்கும் படங்களில் அவற்றைச் சேர்ப்பது பற்றி யோசிக்கிறேன். ஆனால் எனக்கு வழி காட்டுங்கள். மேற்படி விஞ்ஞானப் படங்களைத் தயாரிக்க உறுதுணையாக இருக்கக் கூடிய அறிஞர்கள் இருக்கிறார்களா? அவர்கள் ஒத்துழைப்பு எனக்குக் கிடைக்குமா?''

''பேஷாய்க் கிடைக்கும். விஞ்ஞான அறிவுள்ள எத்தனையோ இளைஞர்கள் இருக்கிறார்கள். அவற்றை அழகிய முறையில் படமெடுக்க டெக்னீஷியன்களுக்கும் பஞ்சமில்லை. எளிய முறையில் தெளிவாகப் புரிகிற மாதிரி இந்த விஞ்ஞான விஷயங்களைத் தமிழில் எழுதித்தர எழுத்தாளர்களும் உண்டு. இவர்களைப் பயன்படுத்திக் கொள்ளப் படாதிபதிகள்தான் தேவை.''

''அப்படியானால் மிக்க மகிழ்ச்சி. உடனடியாக இல்லாவிட்டாலும் விஞ்ஞானத் துணுக்குப் படங்களுக்கு ஏதோ நல்ல எதிர்காலம் நம் தமிழ் நாட்டில் இருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. அந்த எண்ணம்தான் உங்களுடன் இத்தனை விரிவாக இது பற்றி விவாதிக்கவும் தூண்டியது.''

''இந்த அளவுக்கு நீங்கள் ஒப்புக் கொண்டதே எங்களுக்குப் பெரிய வெற்றி!'' என்று கூறி எழுந்தோம்.

''என்றாலும் பிரச்னைக்கு முடிவான நிர்வு காணாமலே செல்கிறீர்கள்!'' என்றார் சிவாஜி.

''மனமிருந்தால் வழி பிறக்கும். உங்களிடம் மனம் இருக்கிறது. இது விஷயமாக என்று கண்டு கொண்டோம்'' என்று கூறி விடைபெற்றோம்.

நடிகர் திலகத்தின் இந்த ஆர்வத்துடன் தமிழகத்தின் பிரபல நட்சத்திரங்கள், படாதிபதிகள் ஆகியோரின் ஒத்துழைப்பும் ஒன்று சேர்ந்து மாணவர் சமுதாயத்துக்கு நலன் விளைவிக்க வேண்டும்.

— காந்தன்

# டயல் ஒன் நாட் நாட்

கதை :: கௌசிகன் ✢ சித்திரம் ரமணி.

சட்டமும் ஒழுங்கும் எங்கு மீறப்படுகிறதோ நேர்மை எங்கு தவறுகிறதோ, அநீதி எங்கே ஆட்சி புரிகிறதோ அங்கெல்லாம் நீதியை, ஒழுங்கை, சகஜ நிலைமையை நிலைநிறுத்துவது சிங்காரத்தின் கடமை. ஏனென்றால் அவன் ஒரு சி. ஐ. டி! முறைகேடான செயல் எங்கு நடந்தாலும் பாதிக்கப்பட்டவர்கள் தவிக்கும் உள்ளத்தோடு நடுங்கும் கரங்களால் டெலிபோனை அணுகி போலீஸ் உதவிக்கு 'ஒன் நாட் நாட்'டை 'டயல்' செய்வார்கள். 'டெலிபோன் ஒலித்த உடன் விவரமறிந்து சிங்காரம் விரைந்து வருவான். அவன் பணிக்கு உதவியாக இருந்து கொண்டு சி. ஐ. டி.யாகப் பயிற்சி பெறுபவன் பாலு. இவ்விருவரும் சேர்ந்து துப்புத் துலக்கும் வழக்குகள் சிலவற்றை வரிசையாகத் தொடர்ந்து வாசகர்கள் படித்து வரலாம், வாரம் ஒரு வழக்காக. குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கத் துப்புத் துலக்கும் திறமை உங்களுக்கு இருக்கிறதா என்பதைப் பரீட்சிக்க ஆங்காங்கே படக் கதையில் சில வினாக்கள் கொடுக்கப்பட்டிருக்கும். உங்களையே சிங்காரமாக எண்ணிக் கொண்டு; அவைகளுக்கு விளக்கம் கொடுத்துப் பாருங்கள். பிறகு உங்கள் விளக்கத்தை வேறொரு பக்கத்திலுள்ள விடையுடன் ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளுங்கள். ஆனால் முயன்று பாராமலேயே விடைப் பக்கத்தைப் புரட்டிப் படிக்க ஆரம்பித்துவிட மாட்டீர்களே?



பிரதர் பிக்பாக்கெட் அடிச்சது கள்ள நோட்டு அச்சடிக்கறவங்களைக் கண்டு பிடிக்க வழி செய்து விட்டது.

அந்த மணிபர்ஸ் கிடைத்தாலும்...? இவனை ஸ்டேஷனில் ஒப்படைத்து விட்டு நாம் ரயில்வே லைன் பக்கம் போய்த் தேட வேண்டும்.

ரயில்வே லைனைச் செப்பனிடும் அவர்கள் நமக்கு உதவுவார்கள் என்று நினைக்கிறேன்.

அவ்விருவரும் இரயில் இலாகாவைச் சேராதவர்கள் என்பதைச் சிங்காரம் அறிந்தது எப்படி?

இல்லை பாலு அவ்விருவரும் ரயில் இலாகாவைச் சேர்ந்தவர்களில்லை. அவ்விருவரும் கூட நம்மைப் போலவே அந்த மணிபர்ஸைத் தான் தேடுகிறார்கள்?

பாலு, அவர்கள் நம்மைப் பார்த்து விட்டார்கள். தப்பிவிடுவதற்குள் அவர்களைப் பிடித்தாக வேண்டும்.

வண்டி போகும் நேரத்தில் அவ்விருவரும் எப்படியோ ஓடி மறைந்து விட்டார்களே. ம்.....

இனி அவர்களைத் தேடிப் பயனில்லை. பர்ஸைத் தேடுவோம். அதில் முக்கியமான தடயம் ஏதாவது இருக்கலாம்.

இதோ பார்த்தாயா? நம் முயற்சி வீண் போகவில்லை. அவர்களுக்குக் கிடைக்காதது நமக்குக் கிடைத்தது.

அவர்களுக்கு என்ன சிங்காரத்தைப் போன்ற கழுகுக் கண்களா?

பர்ஸைச் சோதனையிட்ட போது....

சுஜாதா பத்திரிகையிலிருந்து கிழித்தெடுத்த அழகிய பதுமைகளின் படங்கள் தவிர...

தேவை: ...

பத்திரிகையின் 'தேவை' விளம்பரப் பகுதியில் ... சிவப்புப் பென்சிலால் சுழிக்கப்பட்டுள்ள இது...?

ம்.. பாலு! கிளம்பு. இப்படியான வீடுகளைத் தேடியாக வேண்டும்.

# ஒன்று சேர்ப்பது

## ஒரு கோப்பை புத்தம் புதிய, தெம்பூட்டும்

# ப்ரூக் பாண்ட் காபி




எங்கும் ... எந்நேரமும் ... நண்பர் குழாம் ஒவ்வொன்றிலும், ப்ரூக் பாண்ட் காபி உல்லாசம் உண்டு பண்ணுகிறது. மக்களை ஒன்று சேர்க்கிறது. நாகரீக வாலிபர்கள் ஆணையிட்டுச் சொல்வார்கள். பெற்றோருக்கோ இது இல்லாவிட்டால் முடியாது! ஏன்? புத்தம் புதிய, தெம்பூட்டும், கமகம என்ற மணம் இருப்பதால்தான் — எப்போதைக் காட்டிலும், இன்று ப்ரூக் பாண்ட் காபி தரத்தை நிர்ணயிக்கிறது!

BENSONS2/BBG-1BD TAM





1. இந்த நடன நங்கைக்குத்தான் எத்தனை ஆபரணங்கள்! (பேலூர்)
2. சீதா தேவி படிமம். காதணிகளின் கவர்ச்சி, கழுத்தணிகளின் நிறைவு, நூதன கேச அலங்காரம், கரங்களில் பலப் பல ஆபரணங்கள், அனைத்தையும் வென்று விஞ்சுகிறது அன்னையின் அருட் புன்னகை.

# அன்றைய நாகரிகம்

வி. கோபாலன்



நாகரிகம் என்ற சொல்லுக்குப் புதுமை, அழகு, ஒய்யாரம், கவர்ச்சி, நவீனம் போன்ற பல உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கும் சக்தி இருக்கிறது. அழகு, அலங்காரம் என்ற பேச்சுக்கள் வரும்போதெல்லாம் அது பெண்களுக்கே உரித்தாகி விடுகிறது. நாகரிகத்தை ஒரு சுழலுக்கு ஒப்பிடலாம். நேற்றைய நாகரிகத்தை விட்டு விட்டு இன்று புதிய ஒன்றில் மனம் லயிக்கிறது; மீண்டும் நேற்றைய நாகரிகமே நாளை புதியநாகரிகமாகத் திரும்புவதையும் காண்கிறோம். ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரே நம் நாட்டு மாதர்கள் நாகரிகத்தில் மிகச் சிறந்து விளங்கினர் என்பதறிய எவ்வளவு உவகை பொங்குகிறது!

❀ ❀ ❀

மாதர்கள் அணியும் நாகரிக ஆபரணங்கள் சிலவற்றை ரிக் வேதம் குறிப்பிடுகிறதென்றால், அலங்காரக் கலையின் பழமை புலனாகும். மகாகவி காளிதாசனின் ரகுவம்சம்,



வற்றை உடலில் பூசிக்கொண்டு நீராடுவர். நீராடிய பின்னர் அகர், சந்தனத் துகள் ஆகியவற்றின் புகையில் கேசத்தின் ஈரத்தை உலர்த்துவர். வாசனைத் திரவியங்களின் பூச்சு உடலுக்குக் குளிர்ச்சியும், சுறுசுறுப்பும் அளிக்கவல்லது.

அன்றைய மாதரின் ஆடை நாகரிகம் அழகும், முழுமையும் ஒருங்கே இணைந்தது. இடுப்பிலிருந்து பாதம்வரை அணிந்து கொள்ளப்பட்ட ஆடை 'நீவிபந்தம்' எனப்பட்டது. தற்காலச் 'சோளி'யைப் போன்ற மேலணி கூர்பாசகம் எனப்பட்டது. உடலைச் சுற்றி அணிந்து கொள்ளப்பட்ட ஆடையே உடலுக்கு முழுமையான அணி. இவ்வாடைகளில் சரிகை வேலைப்பாடு முக்கியமான அம்சம். தாமரை வடிவிலும், மகர வடிவிலும், மயில்கண் வடிவிலும் சரிகை 'பார்டர்' இருக்கும். தூய வெண்ணிற ஆடையும், சிவப்பு, மஞ்சள் வண்ணங்களுமே அந்தக் கால நாகரிகம்.

முகத்துக்கு வண்ணம் பூசிக் கொள்வதில் அக்காலப் பெண்கள் பேரார்வம் கொண்டிருந்தனர். வத்ஸ்யாயனர் அந்தக் காலப் பெண்கள் வெள்ளைத் தாமரை, தேன் ஆகியவற்றாலான சாந்தை முகத்தில் பூசிக் கொண்டு அழகு மிளிரத் தோன்றியதாகக் குறிப்பிடுகிறார். தற்போதைய 'கூலிங் கிரீம்'ப் போன்றே குளிர்ச்சியான தைலங்கள் அன்றும் உபயோகிக்கப்பட்டன.

'நாட்டிய சாஸ்திரம்' பெண்களின் முக அழகுக்கான பல வகை அழகு சாதனங்களைக் குறிப்பிடுகிறது. நடனப் பெண்கள் 'விசேஷகா' எனும் வண்ண அலங்காரம் செய்து கொள்வர். நெற்றிப் பரப்பிலும், கன்னங்களிலும் வண்ணக் கோலங்கள் இட்டுக் கொள்வதே அது. இலை வடிவ வண்ண அலங்காரம் அந்தக் காலத்தில் மிக நாகரிகமாக இருந்தது. இந்த அலங்காரத்துக்கு 'பத்ர விசேஷகா' எனப் பெயர்.

**திலகம்:** பலவகை கவர்ச்சியான திலகங்களை அக்காலப் பெண்கள் அணிந்து கொள்வர். மணமான பெண்களுக்கு வட்ட வடிவக் குங்குமமே நாகரிகம். நட்சத்திர வடிவிலும், மகர வடிவிலும், மலர் வடிவிலும், இலை வடிவிலுமான குங்கும அலங்காரங்களில் கன்னிப் பெண்களுக்கு விருப்பம். நம் நாட்டுக்கு வருகை புரிந்த வெளிநாட்டு யாத்திரிகர்களை மிகவும் கவர்ந்தது பெண்களின் மங்களகரமான திலகம்தான். குளிர் காலத்தில் உதடுகள் வெடிப்புறாமலிருக்க வண்ணப் பூச்சிட்டுக் கொள்வதும் உண்டு.

கேச அலங்காரம் பண்டைய பெண்களின் நாகரிகத்தில் ஒரு முக்கிய அம்சமாக இருந்திருக்கிறது. நீண்ட கருமையான கூந்தல் ஒரு பெண்ணின் அதிர்ஷ்டமாகத்தானே இன்றளவும் கருதப்படுகிறது? தலைப் பின்னலில் பலவகை நாகரிகங்கள் அன்று இருந்தன. பின்னலுக்குப் பிறகு இறுகச் சுருட்டி, வட்டமாக முடியப் பெற்ற கேச நாகரிகம் 'கபரதம்' எனப்பட்டது; முடியாமல் தொங்க விடப்படும் முறை 'ஒவா' எனப்பட்டது. 'கும்பம்' என்பது கும்பமாகக் கேசத்தை உயர்த்திக் கட்டுவது; இது ஏறத்தாழ இன்றைய அஜந்தாக் கொண்டையைப் போன்றது. அக்காலத்தில் தலை வாரிக் கொள்ள உபயோகிக்கப் பெற்ற உபகரணங்கள் 'பங்கா', 'கோச்சா' எனப்பட்டன; இவை பெரும்பாலும் மரத்திலும் தந்தத்திலுமானவை.

**கேச அணிகள்:** குப்தர் காலத்தில் பழைய கேச அலங்காரங்களை மாற்றிப் புது நாகரிகம் கண்டனர் அன்றைய பெண்கள். 'சூடா' என்னும் புதிய பின்னல் அலங்காரமும், இந்த அலங்காரத்துக்கே சிறப்பாக உரிய 'சூடாமணி' என்னும் ஆபரணமும் இக்காலத்திலேயே தோன்றின. அகர், சந்தனத் தைலம் ஆகியவை கேச வளர்ச்சிக்கு உபயோகிக்கப்பட்டன. வாரி முடித்த கூந்தலை, தலை மீது குவித்துக் கும்பம் போன்று அலங்கரித்துக் கொள்வது அக்காலத்தில் 'சிகா' எனப்பட்டது. நீண்ட ஒரே பின்னல் 'ஏக வேணி' என்ற நாகரிகத்தைச் சேர்ந்தது; இரட்டைப் பின்னல்களும் உண்டு. நேர் வகிடு, கோணல் வகிடு இரண்டுமே நாகரிகமாகத்தான் கருதப்பட்டன. குளிர்காலத்தில் வகிடுகளில் வண்ணப் பூச்சு இட்டுக் கொள்ளப்படும். பலவகை வண்ண மலர்களை அந்தக் காலத்துப் பெண்களும் விரும்பி அணிந்து கொள்வர்.

கூந்தல் கலையாமலிருக்க வெள்ளியிலும், தங்கத்திலுமான 'ஹேர் பின்'கள் பண்டைய பெண்களாலும் உபயோகிக்கப் பெற்றன. தம்பிலா, சூடாமணி, திருகுப்பூ போன்ற அணிகலன்கள் பின்னலின் நடுவில் அணிந்து கொள்ளப்பட்டன. தலையைச் சுற்றி 'ரத்னஞ்சலி' எனும் இரத்தினக் கற்கள் பதித்த ஆபரணத்தை அணிந்து கொள்வர்.

திருச்சி மலைக்கோயிலில் எழுந்தருளியுள்ள அன்னை உமாதேவிக்கே சுகந்த குஞ்சலாம்பாள் — அழகான கேசமுடையவள் என்று பெயர் இருக்கிறதென்றால் அன்றும், இன்றும் பெண்கள் கேச அலங்காரத்தில் ஆர்வம் கொண்டிருப்பதில் வியப்பென்ன? கி. மு. இரண்டாயிரத்துக்கு முற்பட்ட சிந்து சமவெளி நாகரிகப் புதைபொருள் சின்னங்களில் அழகிய 'சீப்பு'களும் 'ஹேர்' பின்களும் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

**முக அணிகள்:** இவை முக்கியமாகக் காதணியும், மூக்குத்தியும்தான். பல வகையான காதணிகளை அன்றைய பெண்கள் நாகரிகம் கண்டது. மணமான பெண்களின் காதணியாகத் தோடு விளங்கியது. வட்டம், நட்சத்திரம், மலர் போன்ற வடிவங்கள் பலவற்றில் இது இருக்கும். இரத்தினக் கற்களாலான கரந்த பூஷணம், கர்ண பூரம், மகரகுண்டலம், மணிகுண்டலம், பத்ரகுண்டலம் எனும் வேறு பல்வகை காதணிகளை மணமாகாத கன்னிப் பெண்கள் விரும்பி அணிவர். நாக வளையம், மகர வளையம், பத்ர வளையம் இலை வடிவ வளையம் எனும் வளையவடிவ காதணிகளும் இருந்தன.

ஒரே கல்லாலும், பல கற்களாலுமான வசீகர 'மூக்குத்தி'களை அக்காலப் பெண்கள் அணிந்தனர்; இது அநேகமாக நட்சத்திர வடிவில் இருக்கும். முகத்தின் எடுப்பான ஓர் அங்கம் மூக்கு. இதற்கான ஆபரணத்தில் அக்காலப் பெண்கள் மிகக் கவனம் செலுத்

தினர். மூக்குத்தி பெரும்பாலும் இரண்டு பக்கங்களுக்கும்தான்.

**கழுத்து அணிகலன்கள்:** இரத்தினக் கற்களாலான காந்தி எனும் ஆபரணம் மிக முக்கியமானதாகக் கருதப்பட்டது. நிஷ்கம் என்றோர் அணி; இது காசு மாலையைப் போன்றது. முத்துக்களாலான முக்தாஹார அணி பண்டைய மாதர் மனம் கவர்ந்தது. கழுத்தை இறுக்கியவாறு அணிந்து கொள்வது ஒரு வகை; கழுத்தில் நீண்டு தொங்க அணிந்து கொள்வது இன்னொரு நாகரிகம். முத்து மாலையில் ஒரு கல்லாலான 'ஹார யஷ்டி' எனும் பதக்கத்தைக் கோத்து அணிவது பிறிதொரு நாகரிகம். பவழ மாலைகளையும் அன்றைய மங்கையர் விரும்பி அணிந்தனர்.

**கண்ணாடி:** அன்றைய மங்கையர் கரத்தில் அணிந்த ஆபரணங்கள் இரு வகை. ஒன்று மேற்கரத்தில் அணிவது. இது பட்டையாகவும், கற்கள் பதித்ததாகவும் இருக்கும். கீழ்க் கரத்தில் அணிபவை மற்றொரு வகை. இவைகளே பலவித வடிவங்களில் செய்யப்பட்ட வளையல்கள். இவ்வளையல்கள் ஒரே கோடு போன்றும், முறுக்குக்கள் கொண்டதாகவும், மலர் வடிவில், நட்சத்திர வடிவிலும் இருக்கும்.

அக்காலத்திய பெண்களுக்கு இடை அணி முக்கியமானது. இது ஏறத்தாழ 'ஒட்டியாணம்' போன்றது. பொன்னாலானது; ஆடைக்கோர் இறுக்கியாக இது இருந்ததுடன், இடையின் அழகையும் இது கூட்டிக் காட்டியது. கவர்ச்சியான ஓர் அணி இது.

அலங்காரம் எத்தனை நேர்த்தியானதானாலும் அதை ஒரு முறை கண்ணாடியில் பார்த்து, ரசித்த பிறகுதானே திருப்தி ஏற்படுகிறது? மிகப் பழைமையான நாட்களில் கண்ணாடி இருந்ததாகத் தகவல் இல்லை. பளபளப்புடைய உலோகத் தட்டுகள்தான் அன்றையக் கண்ணாடிகள். ஆயினும், இத்தட்டுக்கள் பிரதிபிம்பத்தைக் காட்டும் சிறந்த உபகரணங்களாயிருந்தன. இவ்வகைத் தட்டுக்கள் செய்யும் கலை இன்றளவும் திருவாங்கூர்ப் பகுதியில் இருக்கிறது.

அன்றைய மாதர் நாகரிகத்தின் சிற்பப் பிரதிபலிப்புக்கள் பலவற்றைக் கலைக் கூடங்களில் காண்கிறோம். அழகுக்கும், அலங்காரக் கலைக்கும், நாகரிகத்துக்கும் அக்காலப் பெண்கள் கொடுத்த முக்கியத்துவத்துக்கு அவை சான்றாய் விளங்குகின்றன. அந்தக் கலை வடிவங்கள் சில இந்தக் கட்டுரை வெளியாகும் பக்கங்களை அலங்கரிக்கக் காண்கிறீர்கள்.

சில சிற்ப அணங்குகளின் கரங்களில் அழகிய 'டாய்லட் பாக்ஸ்'கள்கூடக் காணப்படுகின்றன என்றால் பலருக்கும் வியப்பாக இருக்கும்.

பெண்ணுக்கு அலங்காரம் அவசியமே. அழகு அவள் உடைமை; பொன் நகைகள் அவளுக்கு வேண்டியவைதான். ஆனாலும் அவளுக்குப் பெருமையைத் தேடித் தருவது புன்னகைதான்!



## கிளி பேசியது

(சிங்காரத்தின் ஊகங்கள்)

1. துரித வண்டிகள் வரும் ரயில்வே லைனில் வேலை செய்யும்போது, ரயில் வருவதைக் கூறி எச்சரிக்கை செய்வதற்காக ஒருவர் வண்டிவரும் திசையைப் பார்த்தபடி நின்று கொண்டிருப்பார். அந்த மூன்றாம் நபர் இல்லாததால் அவ்விருவரும் போலிகள் என்பதைச் சிங்காரம் ஊகித்தான்.

2. மணிபர்ஸில் இருந்த பறவைகளின் படங்கள், அதன் உரிமையாளருக்குப் பறவைகளிடம் தனி ஈடுபாடு உண்டு என்பதைத் தெரிவித்தன. குறிப்பிட்ட தெருவில் ஒரு வீட்டின் மாடி ஜன்னலின் அருகே மட்டும் பறவைகள் வட்டமிட்டபடி இருந்ததிலிருந்து யாரோ அவைகளுக்கு உணவு அளிப்பதினால்தான்; அந்தப் பழக்கத்தினால் அவை அங்கு வட்டமிடுகின்றன என்று நிச்சயித்து அந்தக் குறிப்பிட்ட வீட்டுக்குப் போய் விசாரிக்கிறான் சிங்காரம்.

3. கிளிக்குப் பேசக் கற்றுத் தர அப்படிப்பட்ட வார்த்தைகளை யாரும் தேர்ந்தெடுக்க மாட்டார்கள். ஆகவே, அது அத்தகைய கூச்சல் நிலவும் ஒரு சூழலின் அருகே வளர்ந்திருக்க வேண்டும். இப்படிக் கூவும் ஒரு பையனின் தோற்றமும் அவன் நின்று கூவும் இடமும் சிங்காரத்தின் நினைவில் பளிச்சிடுகின்றன. துப்பறிபவர்களுக்கு நல்ல ஞாபக சக்தியும், உன்னிப்பான கவனிப்பும் மிக மிக அவசியமாயிற்றே.





# 10 யாத்திரை

ஏ.எஸ்.ராகவன்

**இதுவரை செய்த யாத்திரை....**

மனித வாழ்க்கை அற்புதமான ஒரு யாத்திரை தான்! யாத்திரையின் பொழுது எத்தனை எத்தனை பிரயாணிகள் ஒன்று சேருகிறார்கள். கூடிப் பேசி மகிழ்கிறார்கள்! பிரியும் பொழுது பிரியா விடையும் பெற்றுப் புறப்படுகிறார்கள்!

சுந்தரி பெற்ற பிள்ளை நாணு. அவள் காலமாகி விடவே, மதுரையிலிருந்து அத்தான் பத்மநாபனைத் தேடி வேலூருக்கு வருகிறான். வழியிலேயே வைத்தியர் முதலியாரைச் சந்திக்கிறான். ரயிலடியிலே அத்தானையும், அத்தான் மகள் கமலாவையும் சந்திக்கிறான். வீட்டிற்கு வந்ததும் சமையற்காரி ருக்கம்மாவின் பாசத்தைப் பெறுகிறான்! அத்தான் பத்மநாபனின் அருமை பெருமைகளை உணருகிறான். விவரமறியாப் பருவம் என்றாலும், விஷயமறிந்து கொள்ளத் துடிக்கும் பருவம். கமலாவின் தோழி சீதா அறிமுகமான கையோடு அவள் சகோதரன் வஸ்தாது சீனுவையும் நண்பனாகப் பெறுகிறான்.

சில நாட்களுக்கெல்லாம் பத்மநாபனின் சகோதரி கல்யாணி 'பிறந்தகம் ஆட' வருகிறாள். அவளோடு அவள் மகன் ஜெகுவும் வருகிறான்! பத்மநாபனும், கல்யாணியும் ஒரே வயிற்றில் பிறந்தவர்களானாலும் அவளுக்கு உள்ள ஆற்றாமையை என்ன வென்பது? நாணுவை அவளுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. 'இளங்கன்று பயமறியாது' என்னும் முதுமொழிக் கேற்ப ஓர் உணர்ச்சி வேகத்தில் விஷத்தை வைத்தியர் வீட்டிலிருந்து களவாடி வருகிறான் நாணு. நாணுவின் குற்றத்தை மறைத்து அவனைத் தடுத்தாட் கொள்ளுகிறான் ஜெகு. இதைத் தொடர்ந்து நாணு வீட்டை விட்டு ஓடி விடுகிறான். அந்த நாளே அவனைப் பார்க்கும் ஆவலுடன் அவன் தந்தை சுந்தரம் வேலூருக்கு வந்து சேருகிறார். யாத்திரையில் இப்படியாகப் பலவகைப்பட்ட பாத்திரங்களைச் சந்திக்கிறோம். அதோடு பயணத்தில் உள்ள இன்பத்தையும் சுவைக்கிறோம்!

இனி—

சுவரேறிக் குதித்து வீதியை அடைந்த சுந்தரம் மீண்டும் முதலியாரின் வீட்டை நோக்கி விரைந்தார். பத்மநாபன் தம் கண்களிலிருந்து தப்பி முதலியாரைச் சரண்புகுந்து விட்டதாக நினைப்பு அவருக்கு. ஆனால் அவர் எங்கே போனாலும் சுந்தரம் விடப் போவதில்லை. இத்தனை ஆண்டுகளின் குமைச்

சலேயும் கொட்டித் தீர்த்துவிட வேண்டு மென்கிற ஆவேசமும் வெறியும் உந்த நடந்தார்.

தொலேவிலே சுந்தரம் வருவதைக் கண்டு கொண்ட பத்மநாபன் அவரை எதிர் கொள்ளத் தயாரானர். அருகில் வந்ததும், "எப்போது வந்தீர்கள்?" என்ருர்.

"ஏன் வந்தாய் என்று கேட்காமல் இருந் தாயே?" என்ருர் சுந்தரம் கோபமும் கேலி யும் பொங்க.

"அதைக் கேட்டு என்ன பயன்? நான் வர வேண்டாமென்று சொல்லியும் வந்திருக் கிறீர்கள் அல்லவா?"

"எங்கே என் மகன்?"

"அவன் இப்போது இங்கு இல்லே."

"அப்படியென்ருல்?"

"இத்தனே நாட்கள் இல்லாத கவலேயும் பாசமும் இப்போது வந்திருக்கிறதல்லவா உங்களுக்கு! நீங்களே அதைக் கண்டுபிடித் துக் கொள்ளலாமே......அவன் இங்கே இல்லே. அதுதான் என் பதில்."

"நீ வேறு என்ன பதில் சொல்வாய்? அவனே விரட்டி அனுப்பத்தானே அழைத்து வந்தாய் இங்கே?"

"சுந்தரம்!"

"உன் வேஷம் எனக்குத் தெரியும்...தடை போட்டும் வந்து நிற்கிறேனே என்கிற ஆத் திரமோ உனக்கு? என் கண்ணில் காட் டாமல் அவனே அபகரித்துக் கொள்ள நினேத்தாயல்லவா? நீ செய்திருக்கும் துரோ கத்துக்கு மன்னிப்பே கிடையாது. மகனேயும் அப்பனேயும் பிரித்த பாவி நீ! நல்லவன் போல வேஷமிட்டு......"

"சுந்தரம், என்ன இது? பத்மநாபனேப் பார்த்தா இப்படிப் பேசுகிறீர்கள்?" என்று இடைமறித்தார் முதலியார்.

"ஆமாம்..... மதுரை முழுதும் என் குடும்பக் கதை ஊர் சிரிக்கிறது. முதலி யாரே..... என்னேப் பழி வாங்கி என் குடும் பத்தைக் குலேத்து என் மகனேயும் பிரித்தவன் இந்தப் பத்மநாபன்......நெஞ்சில் கைவைத் துச் சொல்லச் சொல்லுங்கள்..... எங்களுக்கு இவன் செய்தது பச்சைத் துரோகமா இல் லேயா என்று?" சுந்தரத்துக்கு உடல் ஆடிற்று.

பத்மநாபன் நிமிர்ந்தார். "என் நெஞ்சில் கை வைப்பது இருக்கட்டும், சுந்தரம். உங்கள் நெஞ்சில் என்றைக்காவது கைவைத்து நீங்கள் பார்த்துக் கொண்டதுண்டா?.... சுலபமாகக் கேட்டு விட்டீர்களே ஒரு கேள்வி.... இதற்கு நான் பதில் சொல்ல வேண்டுமா? ஏன்? யாருக்கும் பதில் சொல்ல வேண்டிய அவசியம் எனக்குக் கிடையாது. அதைக் கேட்க உங்க ளுக்கு உரிமையுமில்லே" என்ருர் கோபமாக.

முதலியாருக்கே பத்மநாபனின் சீற்றம் வியப்பைத் தந்தது. ஆற்ருமையின் வெடிப் புத்தான் அது. ஆனல் சுந்தரம் அதைப் புரிந்துகொள்ள வேண்டுமே!

அவர் புரிந்து கொள்ளவில்லே. எதையும் புரிந்து கொள்கிற நிதானத்தில் அவர் இல்லே. மகனேக் காணுத துக்கம், அவனேக் காண ஓடி வந்த ஏக்கம், வரும் வழியிலெல் லாம் அனுபவித்து வந்த கைப்புக்கள், பழிச் சொல் இவையே அவர் நெஞ்சில் முன்நின்றன.

"எனக்கு உரிமை இல்லேயோ?" என்று அவர் சீறினர்.

"இல்லே" என்ருர் பத்மநாபன் அழுத்தம் திருத்தமாக.

"ஏன் இல்லே? எனக்கு இல்லாத உரிமை உனக்கு உண்டோ? இப்போது தெரிகிறது, பத்மநாபா! நீ என் மகனே விரட்டவில்லே, விஷம் வைத்துக் கொன்று விட்டாய். கல் யாணியும் நீயுமாகச் சதி செய்து என் மகனேக் கொன்று விட்டீர்கள்."

பத்மநாபன் எழுந்து விட்டார். அவ ருக்குச் சுந்தரத்தின் பேச்சு பிடிக்கவில்லே.

"எனக்குப் பதில் சொல்லி விட்டுப் போ" என்று மறித்தார் சுந்தரம்.

"ஆரம்பத்திலேயே பதில் சொல்லிவிட் டேன். வழி விடுங்கள்."

"மாட்டேன்..... என்னே வரவேண்டா மென்று ஏன் தடுத்தாய்? என் மகன் ஏன் ஓடிப் போனன்? பதில் சொல்லிவிட்டுப்போ."



"எனக்குப் பதிலாக முதலியார் பதில் சொல்வார்....... கேட்டு விட்டுப் போய் வாருங்கள்......."

"நான் போகப் போவதில்லே. உன் ரகசியத்தைக் கிழித்தெறிகிற வரையில் நான் போகப் போவதில்லே."

"அப்படியானல் நான் போகிறேன்." பத்மநாபன் வேகமாக அங்கிருந்து புறப் பட்டே விட்டார். முதலியார் அவரைத் தடுக்க வில்லே. இவ்வளவு நேரம் அவர் அங்கு இருந்ததே அதிகமென்பதை அவர் அறிவார்.

சுந்தரம் முதலியாரிடம் அந்தக் கேள்வி யைக் கேட்கவில்லே. விடிந்ததும் பத்மநாபனே மீண்டும் ஒரு முறை கேட்டுப் பதிலே வர வழைத்தே தீருவது என்று முடிவு செய்து கொண்டவராய் அலுப்புடன் படுத்தார். முதலியார் விடுதலே பெற்ற நிம்மதியோடு உள்ளே போய்க் கதவைத் தாளிட்டார்.

நெடுநேரம் சுந்தரம் புலம்பிக் கொண்டே கிடந்தார். தம் கோபம் தீருகிற வரை

# வசீகரத்தையும், பெருமிதத்தையும் கொடுக்கும் நறுமணம் உங்களுக்கு பாமாலிவ் லவண்டர் டால்க் உபயோகிப்பதால்.

**உங்களுக்கு மிகவும் பிடித்தமான ஸெண்டுகள்—உங்களுக்காகவே மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கின்றன!**

ஒரு காலத்தில் உலக அழகுக் கேந்திரங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையும், உங்களுக்கு மிகவும் பிடித்தமானவையுமான ஸெண்டுகளின்றி இனி நீங்கள் தவிக்கவேண்டாம்...இன்று பாமாலிவ் லவண்டர் டால்க் மட்டுமே அளிக்கும் வசீகர நறுமணத்தினாலும், பெருமிதத்தினாலும் உங்கள் உடலைச் சொகுசாகப் பராமரிக்க முடியும். பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பு முழுவதும் தூவிக்கொண்டு, சூழ்ந்து நிற்கும் அதன் இனிய வசீகர நறுமணத்தினால் களிப்படையுங்கள்.

**எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் நறுமணம் சூழ்ந்த அழகுடனுமிருக்க பாமாலிவ் லவண்டர் டால்க்.**

புதிய, நவீன காஸ்மெடிக் டின்!




எடுப்பான புதிய டின்!




மற்றும் பாமாலிவ் டால்க் டிலக்ஸ் — மயக்கும் 17 ஸெண்டுகளின் அற்புதமான கலை

PT.G.8 TAM.

உறுமினார். அவருடைய மகன் ரோஷக்காரன். இந்தப் போலி வாழ்வில் ஊன்றுவானா? ஓடிப் போய் விட்டான். அவனை விரட்டி விட்டதுமல்லாமல் என்ன இறுமாப்போடு பேசுகிறார் பத்மநாபன்! பணமும் படை பலமும் இருக்கிற மமதை. வேறென்ன?

அவர் வரக் கூடாதாம். வந்தால் என்ன?

வந்தும்தான் என்ன? நாணுவைப் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையே! விதி தடை செய்து விட்டதே! ஒரு வேளை அவனை அவர் பார்க்கக் கூடாது என்பதுதான் விதி வகுத்த நியாயமோ?

இருக்கலாம். இப்போது மட்டுமா, எத்தனையோ முறை விதி அவரைச் சதி செய்து கவிழ்த்து விட்டிருக்கிறது!

வராமலே இருந்திருக்கலாம். வந்ததால் கனவு குலைந்து நனவின் பயங்கரமே தெரிகிறது. அவன் இப்போது நன்றாக இருந்தால் போதும் என்ற திருப்தி இது வரை இருந்தது. இப்போது அது போய் விட்டது. அவன் எங்கோ பசியிலும், பட்டினியிலும் வேதனையிலும் அல்லற்பட்டுக்கொண்டிருக்கிறான்.

அவர் துரதிர்ஷ்டமே உருவானவர். அந்த நிழல்தான் அவனை விரட்டி விட்டிருக்கிறது. அவரைச் சுற்றி, அவர் காலடியில் துரதிர்ஷ்டம் கவிந்து கொண்டிருந்த கதைதான் வாழ்க்கை நெடுகிலும்.

சுந்தரத்துக்குக் கண்ணில் நீர் பெருகிற்று. தமது வாழ்வின் அவலம், அதன் நெடிய, கொடிய விளைவுகள், அவற்றில் இடறி விழுந்த துயர்கள், அநுபவித்த வேதனைகள் அந்த நீரில் கரைந்து உருகின. அதெல்லாம் தீர்ந்தது என்று நினைத்தாரே! தீரவே யில்லையா? மகன் மூலம் ஒரு பொற்காலம் உதயமாகுமென்று எண்ணினாரே, அது நடவாதா? என்றுமே இருள்தானா துணை அவருக்கு?

பத்மநாபனைக் குறை சொல்லிப் பயன் என்ன? அவர் வரக் கூடாது அங்கே. அதற்குக் காரணத்தை எவரிடமும் கேட்டுத்தானா சுந்தரம் தெரிந்து கொள்ள வேண்டும்? ஊருக்குப் புகழையும் பெருமையையும் தேடித் தந்த மனிதனை ஊரார் பூரண கும்பத்தோடு வரவேற்பார்கள். இழுக்கைத் தேடித் தந்தவனை யார் வெற்றிலை பாக்கு வைத்து அழைப்பார்கள்? எதற்காக வந்தார் அவர்? நாணு இருந்திருந்தால் இத்தனை நாட்கள் வராமல் இருந்ததற்குக் காரணம் கேட்டிருப்பான். என்ன பதில் சொல்வார்? 'மகனே, சிறைவாசம் செய்தேனப்பா. நம் குலப் பெருமையைக் காப்பாற்றத் தியாகம் செய்து சிறைத் தண்டனை பெற்ற அருமைத் தந்தை நான்' என்று சொல்வாரோ?

நடந்ததையெல்லாம் அவர் மறந்துவிட்டார். பத்மநாபனையே தாக்கிப் பேசிவிட்டார். பாசம் அறிவை, பார்வையை மறைத்து விட்டது. இந்தப் பாசம் இத்தனை காலமும் எங்கோ இருந்ததோ? இன்று வெளிப்படும்போது பசித்த புலியாகிவிட்டது.

சுந்தரம் எழுந்தார். தூக்கம் பிடிக்காமல் நடந்தார்.

சற்று நேரம் கழித்து எட்டிப் பார்த்த முதலியார் வாசல் திண்ணையில் படுக்கை காலியாக இருப்பதைக் கண்டார்.

கண்ணுக்குத்தான் பார்வை உண்டு என்பதல்ல. காலுக்கும் உண்டு. அது சுந்தரத்தைக் காவேரிக் கரையில் கிழக்கு நோக்கி அழைத்துச் சென்றது. ஓர் இடத்தில் நின்றது. பல்வகைப் பூஞ்செடிகளும் பழ மரங்களும் நிறைந்த தோட்டம் அது. சுந்தரம் தோட்டத்துக்குள் நுழைந்து அதன் நடுவே இருந்த மண்டபத்தை அடைந்தார். பலவகைச் சித்திரங்களும் சிற்பங்களும் அழகு செறிக்க அந்த மண்டபத்தில் திருவிழாச் சமயங்களில் பெருமாள் எழுந்தருளுவதுண்டு. அப்போது நாதஸ்வரக் கச்சேரியும், நாட்டியமும் முழங்கும். ஊரே கூடி நிற்கும் அங்கே. சாதாரண காலத்தில்கூட அந்த மண்டபத்தின் சித்திரங்களும் சிற்பங்களும் குரலெடுத்துப் பாடும். சுந்தரம் கேட்டிருக்கிறார்.

ஆமாம். அவை எல்லாம் பாடின. ஆடின. அவர் மட்டுமா அதைக் கேட்டிருக்கிறார்? அவர் மட்டுமா அந்த நிருத்தியத்தைப் பார்த்திருக்கிறார்? சுந்தரியும்தான் பார்த்திருக்கிறாள்!

அவளை இந்த மண்டபத்தில் முதன் முறை சந்தித்த போது அவர் தம்மை இழந்தார். இரண்டாவது முறை சந்தித்தபோது அவள் தன்னை இழந்தாள். மூன்றாவது முறையில் இருவருமே தங்களை இழந்தார்கள்.

சிற்பங்களும் சித்திரங்களும் பாடின. ஆடின. இல்லை; அவர்களைப் பார்த்து அநுதாபமாய் அழுதன. வேதனையால் துடித்தன.

அப்படித்தான் இருக்க வேண்டும்.

சுந்தரி ஒரு நாள் அவரை அந்த மண்டபத்தின் பின்புறத் தூணில் மறைந்து கொள்ளச் சொன்னாள். பத்மநாபன் வந்தார் அப்போது. உற்சாகமாக இருந்தார். "சுந்தரி! என்னைக் கூப்பிடாமல் தனியே வந்து விட்டாயே இன்றைக்கு? அதற்கு நல்ல தண்டனை தரப் போகிறேன் உனக்கு.... ஒரு சந்தோஷ சமாசாரம் இருக்கிறது. அதை நான் சொல்லப் போவதில்லை. அதுதான் தண்டனை" என்று சிரித்தார் அவர்.

"நீ சொல்லா விட்டாலும் உனக்கு நான் ஒரு சந்தோஷ சமாசாரம் சொல்லத்தான் போகிறேன்...... அது என்னவென்று...."

அவள் முடிப்பதற்குள் பத்மநாபன், "தெரியும் எனக்கு..... ஆனால் நீயும் அதைச் சொல்ல வேண்டாம், சுந்தரி...... சில சந்தோஷங்கள் மனசோடேயே இருக்கவேண்டும். அதைச் சொன்னால் வார்த்தை எச்சில் பட்டு அதன் அழகே கெட்டுப் போகும்" என்றார்.

"உனக்கு அது எப்படியும் தெரிந்தாக வேண்டும், பத்மநாபா!"

"சொல்லாமல் சொல்ல முடியுமே உன்னால்!"

"சொல்லாமலேயும் உன்னால் புரிந்து கொள்ள முடியும் போலிருக்கிறதே. பத்மநாபா..... நான் ஓர் அசடு.... உனக்கு எதுவும் தெரியாது என்று நினைத்தேன்."

சுந்தரி சிரித்தவாறே ஜாடை காட்டவும் தூணின் பின் நின்ற சுந்தரம் அவர்கள் எதிரே போய் நின்றார்.

பத்மநாபன் அப்போது பார்த்த பார்வையை வர்ணிக்க இயலாது. பார்வையா

அது! தெரிந்தது, தெரியாதது, சொன்னது சொல்லாமல் விட்டுப் போனது, அறிந்தது அறியக் கூடாதது எல்லாமே ஒரு சம்மேளனமாகிய பார்வைத் தேக்கம் அது! உயிரும் உணர்வும், காற்றும் தீயும், நீரும் பள்ளமும் வானும் வெளியும், மண்ணும் உடலும் ஒரு சம்மேளனமான பார்வை அலை அது!

பத்மநாபன் எழுந்து விட்டார்.

"ஏன் எழுந்திருக்கிறாய், பத்மநாபா?" என்றாள் சுந்தரி.

"மண்டபத்துக்குள் தெய்வம்தான் இருக்கலாம்...... துவாரபாலகனுக்கு வேலையில்லை" என்றார் பத்மநாபன்.

அப்படிச் சொன்னவர் அவர்! சொல்லத் தெரிந்தவர் அவர்!

சுந்தரம் அந்தக் காட்சியை நினைவில் தேக்கிப் பார்த்துப் பொருமுகிறார் இப்போது. பொருமிப் பயன் என்ன?

அந்த மண்டபம் பல கதைகளின் கருவூலமாக இன்னும் நிற்கிறது. முன்போல் அது பேசவில்லை. பாடவில்லை. வெறுமே நிற்கிறது. பேச்சுக்கும் பாட்டுக்கும் பொருளற்றுப் போன போது சிலைகூட மௌனமாகி விடும் போலும். பேசத் தெரிந்தவன் பேசக் கூடாததைப் பேசும்போது சிலை கல்லாகி விடும்! பேசத் தெரியாதவன் பேசக் கூடியதைப் பேசினால் சிலையின் கல்லில் உயிர் துளும்பி விடும்!

புரியாததையெல்லாம் புரிவது போலவும் தெரியாததையெல்லாம் தெரிவது போலவும் இருந்தது அவருக்கு. காலம் தாழ்ந்த இந்த ஞானத்தால் என்ன பயன்? ஞானம் வந்து விட்டதாகக்கூடச் சொல்ல முடியாது அவரால். உண்மையில் இன்னமும் பத்மநாபன் சுந்தரியிடம் கூறவந்த சந்தோஷச் செய்தி என்ன என்பதை அவர் அறியார். அது பரம ரகசியமாகவே போய்விட்டது.

சுந்தரம் எழுந்தார். பார்வை காலை விட்டு நீங்கிக் கண்ணுக்கு வந்தது. அதனால்தானோ என்னவோ கரைக்கு வந்து சேர்வதற்குள் இரண்டொரு இடங்களில் அவர் தள்ளாடினார். விழுந்தார்! அவருக்கே இது புதுமையாகத்தான் இருந்தது. காலின் பார்வை கண்ணை விட உயர்ந்ததா? ஆனால் காலா பார்க்கிறது? கால்வழியாக மனமல்லவா நடந்தது?

அந்த இரவின் முன் பொழுதுக்கும் பின் பொழுதுக்குமிடையே அவர் பழைய சுந்தரமாகவும் புதிய சுந்தரமாகவும் மாறி உளைகிறார். இந்த உளைச்சல், இந்த வேதனை, இந்த உணர்வு எல்லாம் பொய்தான். அவரிடம் எதுவுமே நிலையாக இருந்ததில்லை. ஆத்திரமும் வெறுப்பும் அரிக்கின்றன. அறிவு சீராகுமுன் அவர் வழி தவறி எங்கெங்கோ போய்ச் சேர்ந்து விடுகிறார்!

நல்ல வேளை. இன்று மட்டும் அறிவு சீராகும் முன்னால் அவர் தம்மை உணர்ந்து கொண்டு விட்டார்.

வேகமாக நடந்தார் சுந்தரம்.

முதலியார் காலையில் பார்த்தபோது படுக்கையில் சுந்தரம் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தார்! ஒரு காலத்தில் கவர்ச்சி நிறைந்ததாகவும் ஆர்வம் மிகுந்ததாகவும் சுந்தரியின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டதாகவும் விளங்கிய முகம் எப்படி மாறி விட்டது! அந்த முகத்தில் நாகுவை அவர் தேடினார். பாரம்பரியம் என்கிறார்களே, அந்த தோஷம் அவனையும் பீடிக்குமோ? அவனும் தந்தையைப் போல் படபடப்பும் அவசரமும் கொண்டு அழிந்து போவானோ? சிறை வாயில் அவனையும் விழுங்கி விடுமோ?

இதை எண்ணவே அவருக்குச் சங்கடமாக இருந்தது. நாகு கெட்டிக்காரன். அவனைக் கடவுள் காப்பாற்றுவார். பத்மநாபனுக்கும் சுந்தரிக்குமாகவாவது அவனை அவர் காப்பாற்றுவார்!

"என்ன பார்க்கிறீர்கள்?" என்று கேட்டவாறே எழுந்து உட்கார்ந்தார் சுந்தரம்.

"ஒன்றுமில்லை..." என்றார் முதலியார்.

"எனக்குத் தெரியும் முதலியாரே... நாகு எங்கே போயிருப்பான், அவன் எப்படி வாழ்வான் என்று கவலைப்படுகிறீர்கள், இல்லையா?" என்று கேட்டார் சுந்தரம்.

"ஆமாம்."

"கவலைப்படாதீர்கள். அவன் சௌக்கியமாக இருக்கிறான்."

"கண்டுபிடித்து விட்டீர்களா அவனை?"

"உம்..."

"எங்கே அவன்?"

சுந்தரம் சிரித்தார். அந்தச் சிரிப்பு முதலியாருக்கு விளங்கவில்லை. அவருடைய பெருமைக்குரிய மனத்தத்துவத்துக்கு அது சவால்தான். இரவில் உறுமிய சிங்கம் காலையில் பசுவாக மாறியிருப்பது எளிதில் புரிகிற விஷயம் அல்லவே!

"அவன் எங்கே இருக்கிறான் என்பது தெரியாது, முதலியாரே. ஆனால் அவன் சௌக்கிய



"ஓய்! உமக்குச் சொப்பனத்தில் நம்பிக்கை உண்டா?"

"ஓ, உண்டு! நேற்றிரவு நான் விழித்துக் கொண்டிருக்கிற மாதிரி கனவு கண்டேன். சட்டென்று எழுந்து பார்த்தேன்... கரெக்டா இருந்ததய்யா!"



இந்தியாவில் முதன் முதலாக
டெலிவிஷன் மூலம் இந்தியன்
ஓவர்ஸீஸ் பாங்க் கதீட்ரல் காரி-
யாலயத்தில் சில விநாடிக்குள்
உங்கள் காரில் இருந்தபடியே
உங்கள் செக்கிற்கு பணம்
பெறலாம். இதே மாதிரி பணமும்
கட்டலாம்.

மவுண்ட் ரோடு



# இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்

தலைமைக் காரியாலயம்: 151, மவுண்ட் ரோடு, சென்னை-2.

எம். ஸிடி- முத்தையா
சேர்மன்

கே. எம். நஞ்சப்பா
ஜெனரல் மானேஜர்

(IOB-16-SA)

மாகவே இருக்கிறான். அது தெரியும். என் புத்தி கெட்டிருந்தது. பத்மநாபனிடம் சீறிப் பாய்ந்தேன். நாணு என் கனவில் வந்து சொல்லி விட்டான். 'அப்பா, நான் சௌக்கியமாக இருக்கிறேன்' என்று... நல்லது. நான் புறப்பட்டுப் போகிறேன்'' என்று எழுந்தார் சுந்தரம்.

முதலியார் பிரமித்துப் போனார். பேச நா எழவில்லை. சுந்தரம் ஒரு கணத்தில் உயர்ந்து நின்றுவிட்டாரே! இது சாத்தியமென்று அவர் நம்பக் கூடவில்லை. மனிதனுக்குள்ளே மனம் என்ற ஒன்றில் இத்தனை வண்ணங்களை இறைவன் வாரி இறைத்திருக்கிறானே, அதுவும் நம்பக் கூடியதாக இல்லை. அந்த வண்ணச் சேர்க்கை உரிய முறையில் கூடினால் கண்ணும் மனமும் பறி போகின்றன.

பத்மநாபனிடம் விடைபெற்ற சுந்தரம் புறப்பட்டு விட்டார். விடிந்தபொழுது நல்ல பொழுதாகவே அமைந்த மகிழ்ச்சியில் தாம் கண்ட இந்த வியப்பின் பிரமை தீராமல் முதலியாரும் சற்றைக்கெல்லாம் பத்மநாபனைக் காணப் புறப்பட்டு விட்டார்.

ஆனால் அங்கே சற்றும் எதிர்பாராத ஒரு விபரீதச் சூழ்நிலை அல்லவா நிலவியிருந்தது!

பத்மநாபன் தோட்டத்தில் ரோஜாப் பதியத்தின் அருகில் நின்றுகொண்டு, முதன் முதலாக அன்றுதான் மலர்ந்த ஒற்றைப் பூவைப் பார்த்து, அது மலர்ந்த அதிசயத்தை வியந்து நின்ற சமயம் சுந்தரம் அங்கே போய்ச் சேர்ந்தார்.

''வாருங்கள்'' என்றார் பத்மநாபன்.

''நான் உன்னிடம் விடைபெற வந்திருக்கிறேன், பத்மநாபா... உன்னை மனம் நோகப் பேசிவிட்டேன். என்னை மன்னித்து விடப்பா. நான் இங்கே வந்திருக்கவே கூடாது. வந்து ஒரு பெரிய பாவ காரியம் செய்து விட்டேன். அதைக் கழுவ நான் உடனே போயாக வேண்டும்'' என்றார் சுந்தரம்.

பத்மநாபன் சிரித்தார்.

''இல்லை, பத்மநாபா, உனக்குத் தெரியாது. நீ என் பாவத்தின் கனத்தை உணர மாட்டாய். உனக்கு அது சாதாரணமாகவே படலாம். நானே என்னைக் கண்டே பயப்படுகிறேன்.''

பத்மநாபன் மறுபடியும் சிரித்தார்.

''நான் திருடன், பத்மநாபா! உன் வீட்டில் கொள்ளை யடிக்க வந்தேன். அது எனக்கு லாபமாக இருக்குமென்று...''

சுந்தரம் முடிக்கவில்லை. அதற்குள் உட்புறமிருந்து கல்யாணியின் குரல் உச்சஸ்தாயியில் கிளம்பித் தோட்டத்தை உலுக்கிற்று. அடுத்து அவள் ஓடோடி வந்தாள். ''அண்ணா, போய்விட்டதே அண்ணா!'' என்று பதறினாள்.

''என்னம்மா போய்விட்டது?'' என்று கேட்டார் பத்மநாபன்.

''பத்துப் பவுன் சங்கிலி, அண்ணா... கல்யாணத்தின்போது செய்து போட்டாயே, அந்தச் சங்கிலி... ராத்திரி கழற்றி ஜன்னலில் வைத்தேன்.... எனக்கு உடம்பே பதறுகிறது. நெஞ்சு துடிக்கிறது.... மாயமாய்ப் போய் விட்டதே!'' என்றாள் கல்யாணி.

பத்மநாபன் சிரித்தார். ஏனோ அவர் இன்று எல்லாவற்றுக்குமே சிரித்தார்.

''சிரிக்காதே, அண்ணா...'' என்று படபடத்தாள் அவள். பிறகு சுந்தரத்தை வெறுப்போடு பார்த்தாள். ''ராத்திரி இங்கே வந்திருந்தது நீங்கள்தானே?'' என்று கேட்டாள்.

''ஆமாம்'' என்றார் சுந்தரம்.

''எனக்குத் தெரியும். என் நகையைத் திருடத்தான் வந்திருக்கிறீர்கள் இல்லையா?... கதவுகூடத் திறந்து கிடந்ததாம். கந்தன் சொன்னான்... அண்ணா, ஏன் பேசாமல் இருக்கிறாய்?... கட்டி வைத்து உதைத்து என் சங்கிலியைக் கேளேன்...''

''கல்யாணி!''

''கல்யாணி!'' — பத்மநாபனின் சிரிப்பு மறைந்து சீற்றம் பாய்ந்தது குரலில்.

''சுவரேறிக் குதித்துத் தப்பி ஓடலாம் என்று பார்த்தால் நடக்காது இங்கே.... காசிக்குப் போனாலும் கர்மம் தொலையவில்லையே! இங்கே வந்துமா திருட்டுப் புத்தி?'' என்றாள் கல்யாணி.

---

**''நேற்று மறந்து போய், ஸ்டாம்பு ஒட்டாமலேயே ஒரு கவரைத் தபால் பெட்டிக்குள்ளே போட்டுட்டேன்!''**

**''அதனாலே என்ன? இன்று ஒரு பதினைந்து காசு ஸ்டாம்பை வாங்கிப் பெட்டிக்குள்ளே போடு. அது ஒட்டிக்க ஒரு டம்ளர் தண்ணீரையும் ஊற்றி விடு!''**



---

பத்மநாபனின் விழிகள் சிவந்தன. ''போதும் கல்யாணி,' போதும். அவரைப் பார்த்துத் திருடன் என்று சொல்லாதே... இப்படித்தான் காலமெல்லாம் பிறரைத் தூஷித்தே உன் காலத்தைப் போக்கிவிட்டாய். உடன்பிறந்த பாசத்தால் நானும் பொறுத்துப் பொறுத்துப் பொறுமையை இழந்து விட்டேன்'' என்றார்.

சுந்தரம் அயர்ந்து போனார்.

''அதே பாசத்தால்தான் நான் இத்தனை காலமும் சும்மா இருந்தேன். இனிமேல் அரை விநாடிகூட நான் இங்கே தங்கப் போவதில்லை.''

''தங்கவும் கூடாது. உடனே புறப்படு... என்னென்ன உடைமைகளோ எல்லாவற்றையும் பெற்றுக் கொண்டு உன் கணக்கை இன்றோடு தீர்த்துக் கொண்டு போய்ச் சேர்... யாரும் இனிமேல் எனக்கு அவசியமில்லை.''

''நாங்களெல்லாம் உனக்கு எதற்கு?.... நான் கூடப் பிறந்தேனே தவிர என்மீது உனக்கு ஏது பாசம்? சுந்தரிதான் உனக்கு ஓசத்தி. அவள் பிள்ளைதான் ஓசத்தி.''

''ஆமாம், அதுதான். சங்கிலியைக் காணோமென்று ரகளை செய்கிறாயே, அதை எடுத்துக் கொண்டு உன் பிள்ளைதான் எங்கோ ஓடிவிட்டான்...இவ்வளவு அழகான பிள்ளையை வளர்க்கத் தெரியாமல் வளர்த்துவிட்டு வந்தவர்கள் மேல் புகார் செய்ய வருகிறாய், பார்!''

''என் பிள்ளைக்குத் திருட்டுப் பட்டம் வேறே சூட்டியாகி விட்டதா? ஜெயில் வாசம் பண்ணினவனும் பெண்டாட்டியை வைத்துப் பிழைக்கத் தெரியாதவனும் நல்லவன் உனக்கு! என் பிள்ளை திருடன்!''

பத்மநாபன் அவளிடம் அதற்கு மேல் பேசவில்லை. ''சுந்தா! வண்டியைக் கட்டி அம்மாளை ரயிலேற்றி விட்டு வா'' என்றார்.

கல்யாணி குமுறிக்கொண்டு வீட்டினுள் சென்றாள். வாசல் அறை குமுறிற்று. அவளுடைய பெட்டி படுக்கைகளெல்லாம் குமுறிக் கொண்டு வெளியே வந்து விழுந்தன.

சுந்தரம் கைகுவித்தார். ''பத்மநாபா! என்னை ஏன் வரவேண்டாம் என்று தடுத்தாய் என்பதை இப்போதுதான் புரிந்து கொண்டேன். என்னைத் திருடன் என்றுதான் எல்லோரும் சொல்வார்கள். இன்னமும் தீராத ஒரு வழக்கில் சிக்கித் தவிக்கிறவன்தானே நான்!... ராத்திரி நான் இங்கே வந்தபோது கதவு திறந்துதான் இருந்தது. நான் சுவரேறிக் குதித்துத்தான் வந்தேன். அப்படியேதான் திரும்பினேன்... கல்யாணி என்மீது சந்தேகிப்பதில் தவறில்லை... நான் இங்கு வந்திருக்கக் கூடாது. உன் வார்த்தையை மீறியதற்கு எனக்குத் தண்டனை தராமல் உன் தங்கையையே பகைத்துக் கொண்டாயே. இந்தப் பெரிய மனசு யாருக்கு வரும்?... ஊரார் சொல்வதைக் கேட்டு எனக்கும் புத்தி கெட்டிருந்தது. உன்னைச் சந்தேகித்த பாவம் என்னை விடாது. இப்படிப்பட்ட என் முன்னால் நானு நிற்காமலிருப்பதே அவன் செய்த புண்ணியம்...'' என்றார்.

பத்மநாபன் சிரித்தார்!

''என்னைத்தான் எல்லோரும் தெரிந்து கொள்ளவில்லை என்று நினைத்தேன்... பத்மநாபா, உன்னையும் அல்லவா ஒருவரும் புரிந்து கொள்ளவில்லை! சே! உண்மையான அன்பு யாருக்குமே விளங்காதா?'' என்றார் சுந்தரம்.

''நான் வரேன்'' என்றாள் கல்யாணி முகத்தைத் திருப்பிக் கொண்டு.

''போய் வா...'' என்றார் பத்மநாபன்.

வண்டி புறப்பட்டுவிட்டது.

''பத்மநாபன்! அவளைக் கூப்பிடுங்கள். எனக்காக உங்களுக்குள் பூசல் வேண்டாம்'' என்றார் சுந்தரம்.

''இல்லை, சுந்தரம். அவள் போகட்டும். அவரவர் வழியில் அவரவர் போவதே நல்லது. நாம் யாரையும் தடுத்து நிறுத்தி நல்லது செய்ய எண்ணுவது பிரமை. நல்லதும் கெட்டதும் கடவுளுக்குத் தெரியும். நமக்குக் கடமைதான் உண்டு. ஆனால் அதுவும் சுமையாக இல்லாமல் இயல்பாக இருக்க வேண்டும்... பார்க்கப் போனால் வாழ்க்கையே ஒரு யாத்திரை. அதிலே நான் போக வேண்டிய ஊர் வேறே. எனக்கு உள்ள காரியம் வேறே. நீங்கள் போக வேண்டிய ஊர், உங்கள் காரியம் வேறே. தயவு செய்து நீங்களும் புறப்படுங்கள்.''

''பத்மநாபா, நீ சொன்னது போல் வாழ்க்கை ஒரு யாத்திரைதான். அந்த யாத்திரையில் ஒரு புண்ணிய ஸ்தலத்துக்கு இன்று தான் வந்திருக்கிறேன். கடவுளையும் தரிசித்து விட்டேன். நான் வருகிறேன்.''

பத்மநாபன் இப்போது சிரிக்கவில்லை. அவர் கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் விழுந்தது.

முதலியார் நுழைந்தார். அவ்வளவு நேரமும் அவர் வெளியிலேயே நின்றிருந்தார்.

பத்மநாபன் புதிதாக மலர்ந்த ஒற்றை ரோஜாவையே பார்த்துக் கொண்டிருந்தார். மண்ணுக்குள், விதைக்குள் இந்தப் பூ இருந்து எப்படி மலர்ந்தது? இத்தனை அழகும் இத்தனை மணமும் இதற்கு எப்படி வந்தது? இந்தப் பூவைத் தவிர, ரோஜாச் செடியின் இதர பாகங்களில் முள்ளும் முரடு தட்டிய கிளைகளும்தான் உள்ளன. ஆனால் பூ இருக்கிறதே, இது போதும்.

சுந்தரத்தை எண்ணி உள்ளூற அவர் பூரித்தார் என்றே சொல்ல வேண்டும். அவருக்கும் ஒருசில உண்மைகள் விளங்கினவே! அவரா விளக்கினார் சுந்தரத்துக்கு? உண்மைகள் தாமாகவே தம்மை விளக்கிக் கொண்டன. அதற்கு முன்னர் எத்தனை அவஸ்தை!

இருவரும் தோட்டத்தைச் சுற்றி வந்தனர். முதலியார் பேசவில்லை. பத்மநாபனும் பேசவில்லை. ஆனால் பேசிக் கொண்டே இருந்தாற் போலிருந்தது.

கல்யாணி போய்விட்டாள்! நாணு போய்விட்டான்! சுந்தரம் போய்விட்டார்! ஜெகுவும் ஓடி விட்டான்!

எல்லாரும் போகட்டும். முதலியாரும் புறப்பட்டார். அவரும் போகட்டும்!

பத்மநாபன் தலையை அசைத்து விடை கொடுத்தார். அங்கிருந்து விடை பெற்ற உள்ளங்கள் தம் தம் வழிகளில் யாத்திரையைத் தொடர்ந்தன. (தொடரும்)

தேவகி, உஸ்மான் ரோடு முனையில் பஸ்ஸிலிருந்து இறங்கி ரங்கநாதம் தெருவில் காய்கறிகள் வாங்கிக் கொண்டு ஒரு கையில் கறிகாய்ப் பையும் மற்றொரு கையில் பிளாஸ்டிக் கூடையில் புத்தகங்கள், டிபன்-பாக்ஸ் மற்றும் ஏதேதோ சாமான்களுமாகத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு மாம்பலம் ஸ்டேஷன் கீழ்ப் படியில் ஒரு பெருமூச்சுடன் ஏறிக் கொண்டிருந்தாள். இன்னும் மாடிப் படி ஏறி இறங்கி, மின்சார ரயிலின் நெரிசலில் வேறு இடிபட வேண்டுமே என்ற நினைவின் அலுப்பு எழுந்த போதுதான் அம்மாவுக்கு உஸ்மான் ரோடு மருந்துக் கடையில் மாத்திரை வாங்கி வர மறந்து விட்டது நினைவுக்கு வந்தது. எதிரில் இருந்த படிக்கட்டுகளில் மேல்மூச்சு வாங்க ஏறி அந்தப் பக்கம் இறங்குவதில் உள்ள சிரமம் குறைவா, அல்லது மீண்டும் ரங்கநாதம் தெருவைக் கடந்து உஸ்மான் ரோடு மருந்துக் கடைக்கு நடப்பதில் உள்ள சிரமம் குறைவா என்று ஒரு கணம் யோசித்தாள்.

ஸ்டேஷன் படியேறிய பெண்ணை அவன் சற்றுத் தாமதமாகவேதான் கவனித்தான். பார்வை பட்ட கணத்தில் பாம்பு கடித்த பதற்றத்துடன் உடல் எல்லாம் திடீரென்று பற்றி எரியும் வேகத்தில் தன் நிலையை மறந்த அவனுக்கு, டாக்ஸியில் கொண்டு விட்டுப் போன ஆண் பிள்ளையைக் கவனிக்கத் தோன்றவில்லை. டாக்ஸியும் ஒரு வட்டம் அடித்துவிட்டுத் திரும்பி விட்டது.

டாக்ஸியிலிருந்து இறங்கிய ராதா, அமைதியாகப் படி ஏறி, டிக்கட் கொடுக்கும் இடத்துக்குச் சென்றாள். ஆண்கள் நிற்கும் 'க்யூ' வரிசைக்கு எதிர்ப்புறத்தில், பெண்மைப் பிறப்பின் பலவீனத்தை இதற்கு மாத்திரம் பயன்படுத்திக் கொண்டு முதலில் டிக்கட் வாங்கிச் சில்லறையையும் டிக்கட்டையும் பையில் போட்டு விட்டுத் திரும்பினாள். அப்போது எதிரே வெற்றிலை விற்கும் கடையில் குனிந்த தலையுடன் பேரம் பண்ணிக் கொண்டிருந்த தேவகியைக் கவனித்துவிட்டு, ''தேவகி...'' என்று உரக்க அழைக்க நினைத்தவள், 'தே...'

நெடுங்கதை

# குத்து விளக்கு

## வ. சா. நாகராஜன்

இரு செயல்களுமே இரு பெரும் பாரங்களாகக் கழுத்தில் இறங்குவதை உணர்ந்து, எதைச் செய்வது என்று நிர்மானிக்க முடியாமல் படிக்கட்டில் வெற்றிலை விற்கும் கடையில் வைத்திருந்த மாலைப் பத்திரிகைகளின் தலைப்புகளைப் படிக்கிற மாதிரியும் வெற்றிலை வாங்கக் காத்திருக்கிற பாவனையிலுமாகப் பைகளைக் கீழே வைத்து விட்டுக் கிடைத்த மூன்று நிமிஷ ஓய்வை அநுபவித்துக் கொண்டிருந்தாள்.

அப்போது சற்றுத் தள்ளி ஸ்டேஷனுள் நுழையும் அடுத்த வாசல் அருகில் வந்து நின்று விட்டுக் கிளம்பிய டாக்ஸிக் கதவின் 'படீர்' என்ற ஒலி தேவகியின் கவனத்தைத் திருப்பியது. டாக்ஸியினுள்ளிருந்து ஓர் ஆணின் கை வெளியில் நீண்டு, ''டாட்டா'' காண்பிக்கும் பாவனையில் ஆட்டியதைக் கவனித்தாள். சோர்ந்து போயிருந்த மனசில் பார்வையிலேயே நிச்சயம் குறைந்திருந்ததால், டாக்ஸியிலிருந்து இறங்கி

யுடன்] உதட்டைக் கடித்துக் கொண்டு நின்றாள். பார்த்த கணத்தில் கலவரம் எழுந்தாலும் சமாளித்துக் கொண்டு 'தேவகி கவனித்திருக்க மாட்டாள்' என்ற தைரியத்துடன், ''தேவகி! ஏன் லேட் உனக்கு இன்னைக்கு?'' என்று குரலில் சாதாரணக் குழைவை வரவழைத்துக் கொண்டு கேட்டாள் ராதா.

தான் வேறு மாதிரி கேட்க வேண்டிய கேள்வியை ராதாவே தன்னிடம் மாற்றிக் கேட்கும் நிலையையும் ஒரு கணம் முன்னால் ராதாவின் முகத்தில் ஓடி மறைந்த கலவரத்தையும் உணர்ந்த தேவகி, ''மயிலாப்பூருக்குப் போயிட்டு வரேன். போகலாமா?'' என்று கூறி நடக்க ஆரம்பித்தாள். பிறகு, ''நீ எப்படி இங்கு மாம்பலத்தில் வந்து ரயில் ஏறுகிறே?'' என்று கேட்டாள்.

எல்லாம் தெரிந்து கொண்டுதான் ஒன்றும் தெரியாதது மாதிரி இவள் கேட்கிறாளோ என்ற சந்தேகப் பார்வை ராதாவின் முகத்

''பெண்கள் எல்லோரும் குத்து விளக்கு மாதிரி இருக்கணும்.
அப்படியென்றால் என்ன தெரியுமா?.....
குத்துவிளக்கு மெதுவாக, அடக்கமாக, அலுங்காமல் அழகாக எரியும்.
குத்துவிளக்கு பந்தம் மாதிரி எரியலாமா?.....
அப்படி எரிந்தால் அது அழகு என்று ஒருவருமே சொல்ல மாட்டார்கள்.....
அதன் தலையில் தண்ணீரைக் கொட்டி அணைத்து விடுவார்கள்....''



சிறப்புக் கதை

இல் ஓடியது. ஆனாலும், ''சீ, இவள் கவனித்திருக்க மாட்டாள்'' என்ற தைரியத்துடன், ''பீச்சிலேதான் ரயில் ஏறினேன். கோமதி இல்லே, அவள் வந்தாள். இரண்டு பேரும் இங்கே இறங்கி ஒரு கப் காப்பி குடித்துவிட்டு வந்தோம்'' என்று சொல்லிவிட்டுச் சகோதரியின் கையிலிருந்து ஒரு பையை வாங்கிக் கொண்டு நடக்க ஆரம்பித்தாள். கறிகாய்ப் பை உண்மையாகவே தூக்க முடியாமல் கனத்தது.

''என்ன தேவகி இது. பஸ்ஸிலேதானே வந்தே? இறங்கிய உடனே எதிரில் இருக்கும் கடையில் வாங்கவா மறந்து விடும்? இப்போது மறுபடியும் ஒரு தடவை உஸ்மான் ரோட்டுக்குப் போகணுமா?'' என்று அலுத்துக் கொண்ட ராதாவின் குரலில், ''நீ சொன்னாலும் நான் போகத் தயாரில்லே'' என்ற அலுப்புத் தெரிந்தது.

''ஆமாம், ராதா! இன்றைக்கு எனக்கு ரொம்பக் களைப்பாக இருக்கு. மயிலாப்பூருக்கு வேறே போயிட்டு வந்தேன். நீ கொஞ்சம் போய் மாத்திரையை வாங்கிக் கொண்டு வந்து விடு'' என்று சொல்லித் தேவகி மீண்டும் கறிகாய்ப் பையை வாங்கிக் கொண்டாள்.

''மயிலாப்பூர்'' என்றதுமே ராதாவுக்கு வழக்கம் போல் ஆத்திரம் பீறிட்டுக் கொண்டு வந்தது. ''உன்னே யார் மயிலாப்பூருக்குப் போகச் சொன்னது? எத்தனை தடவை பட்டாலும் உங்களுக்குப் புத்தி வராது'' என்று சொல்லிவிட்டு, அவள் திரும்பி ரங்கநாதம் தெருவில் மருந்துக் கடையை நோக்கி நடந்தாள்.

ஒரே கணத்தில் குணமே மாறி, ஆத்திரத்துடன் படபடக்கும் தங்கையை நினைத்துச் சிரித்துக் கொண்ட தேவகி, அடுத்து அவள் டாக்ஸியில் வந்து இறங்கிய நினைவு வந்ததும், 'ராதாவா இப்படிச் செய்கிறாள்? தன்னுடன் ஒரே வயிற்றில் பிறந்த தங்கையா? வெட்கம், மானம் எல்லாவற்றையும் துறந்து விட்டு..... ராதாவா?.... ராதாவா?'' என்று மயங்கிக் கதிகலங்கி நின்றாள்.

நினைக்க நினைக்கத் தேவகிக்கு நெஞ்சு வலித்தது. 'அவன் யாராக இருக்கும்? எத்தனை நாட்களாக இப்படிக் கொண்டு விடுகிறான்? பீச் ஸ்டேஷனில் ரயில் ஏற வேண்டிய ராதா எங்கே போய் இவனைப் பார்த்து?...' தேவகி சுவரைப் பிடித்துக் கொண்டு தன்னை மறந்து நின்று கொண்டிருந்தாள்.

தேவகியின் சிந்தனை சுழன்றது. ராதா யாருடனோ டாக்ஸியில் வந்து இறங்கிய சமாசாரத்தை அம்மாவிடம் தெரிவிப்பதா வேண்டாமா? அம்மாவுக்கு இருக்கும் கவலைகளில் இதை வேறு போட்டு அவளை இன்னும் வருத்த வேண்டுமா என்று குழம்பிக் கொண்டிருந்த போது ஒரு வழியாக ராதா வந்து சேர்ந்தாள்.

## 2

பல்லாவரம் ஸ்டேஷனில் இறங்கித் தெரு முனை திரும்பியதும், ஆபீசுக்குப் போன பெண்கள் இருட்டிய பிறகும் வராத கவலையினால் அம்மா வாசலில் காத்துக் கொண்டு நின்றது தெரிந்தது. அம்மா கேட்பதற்கு முன்னாலேயே, ''உனக்கு மாத்திரை வாங்கிக் கொண்டு வந்து விட்டேனம்மா. மயிலாப்பூருக்குப் போயிருந்தேன். அத்திம்பேர் போன் பண்ணினார். முரளிக்கு இரண்டு நாட்களாக உடம்பு சரியாக இல்லையாம். பார்த்து விட்டு வந்தேன்'' என்று சொல்லிக் கொண்டே உள்ளே நுழைந்தாள் தேவகி.

''ஆமாம். இவள் பெரிய டாக்டர். அந்தப் பெரியவர் சொல்லியனுப்பியவுடனே போய்ப் பார்த்து 'டெஸ்டு' பண்ணி, மருந்து எழுதிக் கொடுத்து விட்டு வந்து விட்டாள்'' என்று ராதா எரிச்சலுடன் சொன்னதை அம்மாவும் தேவகியும் சட்டை செய்யவில்லை.

''என்ன உடம்பு? இப்போ எப்படி இருக்கிறது?'' என்ற அம்மாவின் கேள்விக்கு, ''இப்போ தேவலே. நேற்று ராத்திரிதான் ரொம்பக் கவலையாக இருந்ததாம்'' என்ற தேவகி, பைகளை அப்படியே போட்டுவிட்டு, மொட்டை மாடியில் ஈஸிசேரில் படுத்துக் கொண்டிருந்த அப்பாவின் அருகில் போய், 'அப்பாடா!' என்று தரையில் உட்கார்ந்து கொண்டாள்.

பெண் வந்து உட்கார்ந்ததைப் பார்த்ததும் மனசில் எந்தவிதச் சலனமும் இல்லாமல் பேப்பரில் மூழ்கியிருந்த அப்பாவைப் பார்க்கப் பார்க்கத் தேவகிக்கு மனம் வலித்தது. அம்மா இவ்வளவு உடல் பலவீனத்திலும் மனத் தெம்பையும் பற்றையும் ஆசையையும் விடவில்லை. ஆனால் அப்பாவோ,—

முதல் இரண்டு பெண்களைக் கல்யாணம் செய்து கொடுத்து, அடுத்து வந்த விசேஷங்களுக்கெல்லாம் புரோ நோட்டில் வட்டிக்கு வரவு வைப்பது மாதிரி மூச்சைப் பிடித்துக் கொண்டு செய்தும் எதிலும் திருப்தி அடையாத மாப்பிள்ளைகளின் மனோபாவங்கள்; அடுத்து உள்ள இரு பெண்களை எந்தத் தலைமுறையிலும் இல்லாத வழக்கமாக வேலை என்று வெளியில் அனுப்ப நேர்ந்த நிலை; இடையில் இருந்த பிள்ளைகள், உலகத்தின் எந்த விதக் கவலைகளும் தெரியாமல் கிரிக்கெட், சினிமா என்ற இரண்டு பந்தங்களில் சிக்கி, மீள முடியாமல் அதன் விளைவாக வகுப்புக்கு இரண்டிரண்டு வருஷங்கள் என்ற கணக்கில் முக்கி முனகிக் கொண்டு இப்போதுதான் பி. யு. ஸி.யிலும் ஒன்பதாவதிலும் அமர்ந்திருக்கும் விமரிசை — ஆகிய குடும்பப் பெருமைகள் அவரைக் 'கவலை என்பது நினைத்துப் பார்த்தால்தான்' என்ற முடிவுக்கு வரச் செய்து, கூடியவரையில் அது தம்மிடம் அணுகாமல் பார்த்துக் கொண்டு, தாமுண்டு தம் ஆபீஸ் வேலைகள் பேப்பர், ஈஸிசேர் உண்டு என்று ஆக்கி விட்டன.

கவலைகள் தலைக்கு மேல் இருந்த போதிலும் தேவகியும் ராதாவும் கொண்டு வரும் இருநூறு, நூற்றி ஐம்பது ரூபாயிலும் அப்படி இப்படி என்று எப்படியோ கொஞ்சம் மிச்சப்படுத்தி, அப்பா ஆபீஸ் கடன், ராதா ஆபீஸ் கடன் என்று வரவு வகைகளையும்



அதனுடன் ஒட்டி மேலும் எதிர்பார்க்கக் கூடிய வரவுகளுக்கும் கணக்குப் போட்டுப் பார்த்து அந்தத் தைரியத்தில் தேவகிக்குக் கல்யாணம் என்ற ஏற்பாட்டின் முதல் அங்கமாகப் பெண் பார்க்க என்று ஒரு கோஷ்டியைச் சென்ற மாதம் வரவழைத்தார்கள். குற்றம் சொல்ல முடியாத தேவகியின் குணத்திலும் அழகிலும் பற்று வைத்த போதிலும் 'மேற்கொண்டு நடத்த பேச்சில்' ஓர் ஆயிரம் ரூபாய்க்கு உதைத்துக்கொண்டது.

''ஒரு 'ஆறு' ரூபாய்க்குக் கூடச் செய்யா விட்டால், அப்புறம் எங்களை நாலு பேர்கள் நாலு சொல்வார்கள். மூத்த பிள்ளைகளுக்கு 'ஏழு' ரூபாய் 'எட்டு' ரூபாய் என்று வந்த இடத்தில் செய்து விட்டு, இவனுக்கு மாத்திரம் குறைத்தால் பின்னால் இவனும் வருத்த படுவான்......'' என்று பிள்ளை வீட்டுக்காரர்களின் பேச்சுப் போய்க் கொண்டிருந்தது.

அப்பா பதில் சொல்லத் தெரியாமல் கையைப் பிசைந்து கொண்டிருந்தார். அம்மாதான் தாக்குப் பிடித்துக் கொண்டிருந்தாள். ''இவ்வளவுதானே வித்தியாசம்? இன்னும் எவ்வளவோ வரும். நாங்கள்

ஒன்றையும் குறைத்துச் செய்ய மாட்டோம். அப்படிச் செய்வது எங்களுக்குத் தெரியாது. முதல் இரண்டு பெண்களைக் கொடுத்திருக்கும் இடங்களில் கேட்டுப் பாருங்கள்......'' என்று சொன்ன அம்மா இன்னும் எப்படி முட்டுக் கொடுத்துப் பார்க்கலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தாள்.

பிள்ளையைப் பெற்ற புண்ணியவதி, ''அந்தப் பேச்செல்லாம் வேண்டாம். நீங்கள் இப்பவே கஷ்டத்தோடு கஷ்டமாக இழுத்துப் போட்டுக் கொண்டு செய்தால் தான் உண்டு. பின்னாடி உங்களை ஒன்றும் கேட்க முடியாது. உங்கள் குடும்ப நிலைமை எங்களுக்கு நன்றாகத் தெரிகிறது'' என்று சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்த ராதாவுக்கு அடிவயிற்றிலிருந்து ஆத்திரம் வந்து விட்டது. மூத்த சகோதரிகளைக் கொடுத்திருந்த இடங்களில் வாங்கிக் கட்டிக் கொண்ட பேச்சுக்கள் தேவகியின் கல்யாணத்துக்கு முன்னாலேயே எழுந்தும், தங்கள் கையாலாகாத்தனத்தை இவ்வளவு விண்டு நேரிடையாக இடித்துக் காண்பிக்கிற மாதிரி பேசும் மனிதர்களின் ஈவிரக்கமற்ற தன்மையும் அவர்கள் கேட்கும் ஆயிரம் ரூபாய் இருக்கும் இசையறியாத பிரமையும் சேர்ந்து, ராதாவைத் தன் நிலை மறக்கச் செய்தது. அடிபட்ட புலி போல் அவள் சீறினாள். அது அவள் சுபாவம். ''எங்களை என்னவென்று நினைத்துக் கொண்டீர்கள்? உங்களைத்தான் என்னவென்று நினைத்துக் கொண்டீர்கள்? உங்கள் வீட்டிலும் பெண்கள் இருந்து கேவலம் ஆயிரம் ரூபாய்ப் பணத்தில் அவர்கள் வாழ்க்கையே ஊசலாடுவதை உணர்ந்து பார்க்கும் சக்தி உங்களுக்கு ஏற்பட வில்லை..... போகட்டும்; இதோ மகாலக்ஷ்மி மாதிரி எங்கள் தேவகி நிற்கிறாள். எங்களால் செய்ய முடிந்தது இவ்வளவுதான். இதைச் செய்வதற்கும் நாங்கள் எந்தெந்த விதத்தில் ஏற்பாடுகள் செய்ய நேர்ந்தது என்பதைப் பற்றி உங்களுக்குத் தெரிய வேண்டியதில்லை. எங்கள் நிலையைப் பற்றி நாங்கள் வெட்கப்படவும் இல்லை. நிலைமை இதுதான். உங்களுக்கு மனசு இருந்தால் செய்து கொள்ளுங்கள். இல்லாவிட்டால் உங்களுக்குப் 'பெரிய ஆறு ரூபாயோ ஏழு ரூபாயோ' கிடைக்கிற இடத்தில் கறுப்போ, சிவப்போ, நொண்டியோ, முடமோ பார்த்துக் கொள்ளுங்கள். அவ்வளவுதான்!'' — ஆவேசம் வந்தது மாதிரி முழங்கிய ராதா பதிலுக்கு நிற்காமல் எதிர்ப்புறத்து அறைக்குப் போய்க் கட்டிலில் விழுந்தாள்.

ராதாவை மடக்கிப் பேச ஒருவருக்குமே துணிவில்லை. அம்மாவுக்கும் தகதகவென்று ஒளிவிடும் தேவகியைப் பார்த்து, வந்திருக்கும் மனிதர்களின் மன நிலையையும் பார்த்து மனம் வெறுத்து விட்டது. அப்பாவோ தம் பெண் இத்தனை வேகமாகப் பேசுவதைப் பார்த்து, 'அதுவும் நியாயம்தான்' என்ற நிலையை அனுசரித்தார். வந்தவர்கள் எழுந்தார்கள். ''நல்ல வேளை; தங்கைக்கே இவ்வளவு வாய் இருந்தால் பெரியவளுக்கு எவ்வளவு இருக்குமோ?'' என்று சொல்லாமல் சொல்லிக் கிளப்பி விட்டார்கள்.

அம்மா ராதாவின் அறைக்குச் சென்றாள். ராதா குலுங்கிக் குலுங்கி அழுது கொண்டிருந்தாள். ஆனால் அம்மா வந்து தொட்டதும் அவள் அழுகை ஓய்ந்து விட்டது. அம்மா சொன்னாள்: ''நீ வீணாகக் கலங்காதே ராதா! உனக்கு ஏன் இப்படிக் கோபம் வருகிறது? கல்யாணம் ஆகாத பெண்ணுக்கு இப்படிக் கோபம் வரலாமோ? பெண்கள் எல்லாரும் குத்துவிளக்கு மாதிரி இருக்கணும். அப்படி என்றால் என்ன தெரியுமா? குத்துவிளக்கு மெதுவாக, அடக்கமாக, அலுங்காமல், அழகாக எரியும். குத்துவிளக்கு, பந்தம் மாதிரி எரியலாமா? அப்படி எரிந்தால் அது அழகு என்று ஒருவருமே சொல்ல மாட்டார்கள். அதன் தலையில் தண்ணீரைக் கொட்டி அணைத்து விடுவார்கள்.''

## 3

**கா**ரியாலயத்தில் தேவகிக்கு வேலையே ஓடவில்லை. இத்தனை நாட்களாக இத்தனை ஆண் பிள்ளைகளுக்கு நடுவில் உட்கார்ந்து வேலை செய்யும் அவளுக்கு இது வரை எந்த விதமான பய உணர்ச்சியும் தோன்றியதில்லை. புருஷ்த வீட்டுக் குடும்ப பந்தத்தை ஏற்றுக் கொண்டிருக்க வேண்டிய வயதில் பிறந்த வீட்டின் அத்தியாவசியத் தேவை என்ற ஒன்று தன்னைக் காரியாலயத்துக்கு விரட்டியிருப்பதையும், தன்னைப் போல நூற்றுக் கணக்கான பெண்கள் தாம்பரத்திலிருந்தும் மாம்பலத்திலிருந்தும் மின்சார ரயிலில் ஏறி இடிபட்டு, நசுங்கிக் காரியாலயம் என்ற அந்தக் கூண்டில் அடைபடுவதையும் அந்த வேதனையில் அங்கே பால் உணர்ச்சிகூட ஓரளவுக்கு மங்கிவிடுவதையும் அவள் உணர்ந்திருந்தாள். தானும் தன்னுடன் வேலை செய்யும் தோழிகளும் உணரும் உணர்வுதான் தன் கூடப் பிறந்த தங்கைக்கும் இருக்கும் என்று நினைத்திருந்த தேவகிக்கு முதல் நாள் மாலையில் ஓர் ஆண்பிள்ளை அவளைக் காரில் கொண்டு வந்துவிட்ட நிகழ்ச்சி நினைவுக்கு வர, தன்னைச் சுற்றியுள்ள ஆண்களையே என்றுமில்லாத பயங்கர உணர்ச்சியுடன் பார்த்தாள். தன் ஆபீஸிலும் ஓரிரண்டு பெண்களின் பெயர்கள் பட்டும் படாததுமாக ஆண் பிள்ளைகளின் பெயர்களுடன் சம்பந்தப்படுத்தப்பட்டு அடிபடுவது நினைவுக்கு வந்ததும், தன் தங்கையைப் பற்றியும் அப்படி நாலு பேர்கள் ரகசியப் பேச்சுப் பேசுவார்களோ என்ற நினைவில் தேவகி கூசிக் குறுகினாள். அவளுக்குக் காரியாலயத்தில் இருக்கவே பிடிக்கவில்லை. அது ஒரு சிறையாகவே அவளுக்குத் தோன்றியது. இந்தச் சிறையிலிருந்து எப்படி விடுபட்டு எங்கே போவது? வீட்டுக்கா?... ராதாவைக் கொண்டுவந்து விட்டது யாராக இருக்கும்? அவள் காரியாலயத்தைச் சேர்ந்தவனாகவே இருக்குமா? ஆண்பிள்ளைகள் என்றாலே அற்பமானவர்களாக நினைத்து ஆத்திரத்துடன் பேசும் ராதாவா இப்படி வெட்கம், மானம் எல்லாவற்றையும் துறந்து, எதற்கும் கவலைப் படாமல் ஆண்பிள்ளை ஒருவன் கொண்டு

# ராம்தீர்த் பிரஹமி ஆயில்

(ஸ்பெஷல் நெ. 1) (ரிஜிஸ்டர்டு)



கூந்தல் உதிர்வதையும், பொடுகையும் தடுத்து கேசத்திற்கு கரு நிறத்தையும் பளபளப்பையும் அளிக்கும் ஓர் ஒப்பற்ற கூந்தல் தைலம். பல உயர்ந்த மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்டது. மூளைக்குக் குளிர்ச்சி யளித்து, ஞாபக சக்தியை அதிகரித்து, கண் எரிச்சலையும் அடிக்கடி ஏற்படும் தலைவலியையும் போக்கி நிம்மதியான நித்திரையை அளிக்கிறது.

## யோகாசனப் படம்

எங்கள் யோகாசனப் படத்தில் காட்டியுள்ளவாறு ஆசனங்களை முறைப்படி செய்து வந்தால் நீங்கள் உடல் வலிவு பெற்று ஆரோக்கியமாக வாழ்வீர்கள்.

விலை ரூ. 3/- (தபால் செலவு உள்பட)

## SHRI RAMTIRTH YOGASHRAM
DADAR, BOMBAY-14

மதராஸ் டிப்போ: 25, நைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ் - 3



# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414, மதராஸ் - 5
தந்தி: 'EVERMANS' போன்: 85834

மதராஸ் சிட்பண்டு 1961 ஆக்ட்படி மேற்கண்டும் சிட்டுகள் நடத்தப்படுகின்றன
(மதராஸ் ஆக்ட் நெ. 24 of 1961)

25 மாதங்கள் — குறுகிய காலச் சீட்டுகள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5000/- | D | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |

40 மாதங்கள் — நீண்ட காலச் சீட்டுகள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500/- | ரூ. 20000/- |
| LTB | ரூ. 250/- | ரூ. 10000/- |
| LTC | ரூ. 125/- | ரூ. 5000/- |

சேரும் குரூப்பை விவரித்து எங்கள் விதிகளுக்கு எழுதவும்

கிளைகள்: புது டில்லி - பம்பாய் - பெங்களூர் - கல்கத்தா

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

CRITERION BCP 658

வந்து விட, நிர்ப்பயமாக டாக்ஸியிலிருந்து இறங்குகிறுள்?

இதுவரை வாழ்க்கை என்பது எல்லையற்ற தூரவெளியாக இருந்தது தேவகிக்கு. இப்போது வாழ்க்கை என்பது பயங்கரமான இருள் சூழ்ந்த காடாகத் தோன்றியது.

நடுப்பகலில் சிற்றுண்டி அருந்தும் வேளையில் எல்லாப் பெண்களும் கூடி உட்கார்ந்து கொட்டியளக்கும் நேரத்தில்கூடத் தேவகி தனித்தே நின்றுள். மாலை நேரம் நெருங்க நெருங்க, தன்னுள்ளேயே இனந் தெரியாத திகில் மூள்வதை அவள் உணர்ந்தாள். இன்றும் ராதா அவனுடன் டாக்ஸியில் மாம்பலம் ஸ்டேஷனுக்கு அருகில் வந்து இறங்குவாளோ என்ற எண்ணத்தை அவளால் நினைத்துப் பார்க்கக் கூட முடியவில்லை. அந்தப் பயம் அவள் மனசில் பூதமாய்ப் பயமுறுத்த அன்று ஒரு மணி முன்னதாகவே வீட்டுக்கு ஓடித் தாயின் மடியில் விழுந்தாள்.

இரண்டு மூன்று நாட்கள் ஆன பிறகு அவளுக்குப் பரபரப்பு ஒருவாறு அடங்கியது. மூத்தவளாகிய தான், தங்கையைக் கண்காணித்து அவளுடன் கூட வரும் அந்த ஆண் பிள்ளை யார் என்று பார்த்தாக வேண்டும் என்று தீர்மானித்தாள்.

அன்று மாலை நாலரை மணிக்கே தன் காரியாலயத்திலிருந்து கிளம்பி ராதாவின் ஆபீஸ் வாசலுக்கு எதிர்ப்புற நடைபாதையில் நின்றுகொண்டு உள்ளேயிருந்து வருபவர்களைக் கவனித்தாள். மணி ஐந்து அடித்ததும் பெண்களின் கூட்டத்தோடு கூட்டமாக ராதா சிரித்து முழக்கிக் கொண்டு நடுநாயகமாக எல்லோரையும் இழுத்துக் கொண்டு வருகிற மாதிரி வருவதையும், அவள் ரயிலில் போகும் தோழிகளுடன் பீச் ஸ்டேஷனுக்குப் போய் ரயில் ஏறிப் பல்லாவரத்தில் இறங்கி வீடு நோக்கி நடப்பதையும் பின்னுலேயே வந்து கண்காணித்த தேவகிக்கு ஏமாற்றமாக இருந்தது.

இரண்டு மூன்று நாட்கள் இப்படியே நடந்தது. நான்காவது நாள். இனி இந்த மாதிரி வேவு பார்க்கும்வேலை தன்னுல் முடியாதுஎன்று நினைத்தபடி தேவகி, ராதாவின் ஆபீஸின் எதிர்ப்புற நடைபாதையில் நின்றுகொண்டு உள்ளிருந்து வருபவர்களைக் கண்காணித்துக் கொண்டிருந்தாள். மணி இன்னும் ஐந்து அடிக்கவில்லை. பத்து நிமிஷம் பாக்கியிருந்தது. ராதா உள்ளே யிருந்து வேகமாக வருவது தெரிந்தது. அவள் வாசலுக்கு வந்து நின்றது தான் தெரியும். ரோட்டில் வேகமாக வந்த டாக்ஸி ராதாவின் ஆபீஸை ஒட்டி நின்றது. ராதா பாய்ந்து சென்று அதில் ஏறிக்கொண்டாள். டிரைவருக்குப் பக்கத்தில் இருந்த முன் சீட்டில் ஓர் ஆண் உட்கார்ந்திருந்ததும் தேவகிக்குத் தெரிந்தது. யாரைக் கவனிக்க வேண்டும் என்று தேவகி நாலு நாட்களாகத் தவித்துக் கொண்டிருந்தாளோ, அவனைக் கவனிக்க வேண்டிய அந்தக் கணத்தில், ராதா ஓடிவந்து டாக்ஸியில் ஏறிய வேகத்தைப் பார்த்த அதிர்ச்சியில் உடல் நடுங்கி, தலை சுற்றி, கண் மயங்கி, அப்படியே சுவரைப் பிடித்துக் கொண்டு நின்ற நிலையில் தன் நினைவையே சில நிமிஷங்கள் இழந்திருந்தாள். டாக்ஸி பறந்து விட்டது. தேவகி ஐந்து நிமிஷங்கள் கழித்துத்தான் தன் நினைவுக்கு மீண்டாள். உடல் சோர, உள்ளம் கொதிக்க அவள் கால்கள் அவளை பீச் ஸ்டேஷனுக்கு இழுத்துச் சென்றன. வீட்டுக்குப் போனதும் அம்மாவுக்கு எதிரில் திரும்போது எரியும் நெருப்புக்கு முன்னுல் இருப்பதாக உணர்ந்தாள். அந்த உணர்வில் அவளுக்கு அம்மாவிடம் எதுவும் சொல்ல வாய் எழவே இல்லை.

வழக்கம் போல இரண்டு மூன்று நாட்கள் கழிந்ததும் அவளுக்குத் தைரியம் வந்தது. தன் பயத்தை நினைத்து வெட்கி மேலே தான் செய்ய வேண்டியதை யோசித்தாள்.

நான்கைந்து நாட்கள் ராதா ஐந்து மணிக்கு எல்லாருடனும் வெளியில் வந்து நேராக பீச் ஸ்டேஷனுக்கு நடந்தாள்.

★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★

**கண்களை நம்பாதே!**



'ரம்யன்'

ஜேம்ஸ் தர்பர் என்ற நகைச்சுவையாளருக்குக் கண் பார்வை மங்கிவிட்ட பிறகு காது மிகவும் கூர்மையாகி விட்டது. எவ்வளவு சிறிய முணுமுணுப்பும் அவருக்குத் தெளிவாகக் கேட்கும்.

ஒரு சமயம் அவர் விருந்தொன்றுக்குச் சென்றிருந்தார். அதில் கலந்து கொண்ட ஓர் இளம் ஜோடியைப் பற்றி, ''அவர்கள் சீக்கிரத்தில் பிரிந்து விடுவார்கள்'' என்று சொன்னுர். இதைக் கேட்ட அவருடைய நண்பர்கள், அவருக்குப் பார்வையோடு மூளையும் பழுதாகி விட்டதென்று எண்ணிக் கொண்டார்கள். ''எவ்வளவு ஆனந்தமான ஜோடி! இவர்களா பிரியப் போகிறுர்கள்...?'' என்று பரிகசித்தார்கள்.

''உண்மைதான். நீங்கள் கண்களால் அவர்களைப் பார்க்கிறீர்கள்; நான் காதுகளால் அவர்களைக் கேட்கிறேன்...!'' என்றுர் ஜேம்ஸ்.

ஆறு மாத காலத்தில் அந்த ஜோடி விவாகரத்து செய்து கொண்டது!

★—★—★—★—★—★

## வெண்ணெய்க் கோபுரம்



பிரான்சு நாட்டில் நாட்டர்டேம் டி ரூவன் என்ற இடத்தில் சுமார் 800 ஆண்டுகளுக்கு முன் தேவாலயம் ஒன்று கட்ட ஆரம்பித்தார்கள். வேலை நடந்து கொண்டிருந்தபொழுதுதான் அதைப் பூர்த்தி செய்யப் பல ஆண்டுகள் பிடிக்கும் என்பதும் அதற்குப் போதிய பண வசதி கிடையாது என்பதும் தெரிய வந்தன. அதனால் மனம் ஒடிந்துபோய் அந்த வேலையை இடையில் அப்படியே நிறுத்தி விட்டார்கள், பூர்வாங்கமாகச் சில பணிகள் மட்டுமே நிறைவேறி யிருந்தன.

ஆண்கள் அயர்ந்து விட்டுவிட்ட இந்த லட்சியத்தை நிறைவேற்ற ரூவன் மாதர்கள் கிளர்ந்தெழுந்தார்கள். ஒரு நாள் அவர்கள் கூட்டமாகக் கூடி, தியாகம் செய்யச் சங்கல்பம் எடுத்துக் கொண்டார்கள். தேவாலயம் கட்டி முடிக்கப்படும்வரை யாரும் வெண்ணெய் வாங்குவது இல்லை என்பதுதான் இந்தப் பிரதிக்ஞை. வெண்ணெய் வாங்கும் பணத்தை இந்தப் புனித பணிக்கென்று தனியே ஒதுக்கி வைத்தார்கள். ஆரம்பத்தில் பால் பண்ணைக்காரர்கள் இதைப் பரிகசித்தார்கள். 'வெண்ணெய் வாங்கும் பணம் எவ்வளவு சேர்ந்துவிடப் போகிறது?' என்று பேசினார்கள். ஆனால் பெண்கள் தங்களது உறுதியில் விடாப் பிடியாக இருந்தார்கள்.

அதன் பலன் ஐந்தே ஆண்டுகளில் தெரிந்து விட்டது. அழகான கோபுரத்துடன் தேவாலயம் கம்பீரமாக எழுந்து நின்றது. அதைப் பார்த்துப் பிரமித்த மக்கள் அன்று முதல் இதை 'வெண்ணெய்க் கோபுரம்' என்று அழைக்கலானார்கள்.

— மூ. முத்துக்காளத்தி

★—★—★—★—★—★

ஆறாவது நாள். ஐந்து அடிக்கப் பத்து நிமிஷம் இருக்கும்போதே ராதா வெளியில் வருவதைக் கவனித்த தேவகி தன் பக்கம் போன டாக்ஸியைக் கூப்பிட்டு நிறுத்தி ஏறிக் கொண்டாள். சொல்லி வைத்தது போல் எதிர்ப்புறம் ஒரு டாக்ஸி வந்து நிற்க, ராதா ஏறிக்கொள்ள அது நகர்ந்தது. தான் ஏறிய டாக்ஸியிடம் தேவகி அந்த டாக்ஸியின் பின்னால் போகச் சொன்னாள். தேவகியின் டாக்ஸி டிரைவர் எல்லாம் தெரிந்துகொண்ட பாவனையில் பதிலே பேசாமல் முன் பக்கத்து டாக்ஸியைப் பின் தொடர்ந்தான். தேவகிக்கு டாக்ஸி எந்தச் சாலையில் எந்தப் பக்கம் போகிறது என்ற நினைவே எழவில்லை. அவள் கண்ணுக்கும் மனசுக்கும் தெரிந்ததெல்லாம் முன்பக்கத்து டாக்ஸியும், அதனுள் முன் பக்கத்து ஸீட்டிலும் பின் ஸீட்டிலும் உட்கார்ந்திருந்த இரு உருவங்களும்தான்.

ஒரு குலுக்கலுடன் கார் நின்றதும் தேவகி தன் நினைவுக்கு வந்து வெளியில் பார்த்தாள். அந்த இடம் மௌண்ட்ரோடின் ஆரம்பம் என்பதை உணர்ந்தாள். முன்னால் போன டாக்ஸியிலிருந்து இறங்கிய ராதாவும் அந்த ஆண்பிள்ளையும் எதிரிலிருந்த பூங்காவுக்குள் நுழைவதைக் கண்டாள். தானும் இயந்திரம் இயங்குவது மாதிரி டாக்ஸிக்காரனுக்குரிய ரூபாயைக் கொடுத்துவிட்டு அவர்களையே பின்தொடர்ந்தாள். அவளுக்கு ஒரு மயக்க நிலை. அந்த நிலை ஏதோ கனவின் தொடர்ச்சி மாதிரித் தோன்றியதேயன்றி நேரில் நடப்பதாகவே தோன்றவில்லை.

பூங்காவினுள் நுழைந்த தேவகி சிறிது தூரம் நடந்து மரங்களின் மறைவில் தள்ளியிருந்த பெஞ்சியில் உட்கார்ந்திருந்த அந்த ஆண்பிள்ளையின் முகத்தை எட்டி நின்று பார்த்ததும்,—

பார்த்த உணர்வு அவள் மூளையைத் தாக்கிய அந்தக் கணத்தில்—தன் உடல், உள்ளம், உலகம் யாவும் யுத்த களத்தில் பொழிந்த குண்டு மாரியில் தகர்ந்து எரியும் வேகத்தில் சிக்குவதை உணர்ந்தாள்.

அந்த ஆண்மகன்,—

எதற்குமே கவலையோ, சந்தோஷமோ பட முடியாமல் போயாவிட்ட தந்தையின் மனதில் ஒரு துளி சலனமாவது ஏற்படும்; கஷ்டம், துக்கம் என்ற இரண்டையே மாற்றி மாற்றி அனுபவித்துக் கொண்டிருந்த அம்மாவின் நினைவுகளில் ஒரு துளி நிம்மதி உண்டாகும்; படபடவென்று எதிலும் நிதானம், யோசனை இல்லாமல் பறக்கும் ராதாவுக்கும் பொறுப்பு என்ற ஒன்றை எதிர் நோக்கக்கூடிய காலம் வரும் — அவை எல்லாவற்றுக்கும் இதுதான் ஆரம்பம் என்ற ஒரே நினைவில் எந்த ஆண்மகன் தன்னைக் கைதூக்கி விடுவான் என்று நினைத்து அவன் கால்களில் விழுந்து வணங்கி, தவித்து, உருகி நின்றாளோ அந்தப் பாவி—

எந்தப் பாவியின் கண்ணுக்குத் தராசில் குற்றமற்ற ஒரு பெண்ணின் நிறையை விட ஓர் ஆயிரம் ரூபாய்க் காகித நோட்டின் நிறை அதிகமாகத் தெரிந்ததோ,—

அதே அவன்தான்!

தேவகியொரு வழக்கம் போல் தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டு, அடுத்தபடி யோசனை செய்யக் கூடிய நிதானம் ஏற்படவில்லை. தன் நினைவிழந்து, நிலையிழந்து, மீண்டும் மௌண்ட் ரோடு முனைக்கு வந்து, எதிர்ப்பட்ட டாக்ஸியில் ஏறி ஸ்டேஷனுக்கு வந்து ரயில் ஏறி, நினைவு மறக்காமல் பல்லாவரத்தில் இறங்கித் தாயின்மடியை நினைத்து வீட்டுக்கு ஓடி வந்தபோது,—

அம்மா ஒரு கையில் கடிதத்துடன் படியில் காத்துக் கொண்டு நின்றாள்.

அம்மா அம்மா என்று தன்னை மீறி வரும் குரலை அடக்க வகையறியாமல் ஓடிவந்த தேவகி அம்மாவைக் கண்டதும் அடங்கி விட்டாள்.

சாதாரண நாட்களாக இருந்திருந்தால் தேவகியின் கலவரத்தை அம்மா புரிந்து கொண்டிருப்பாள். ஆனால் அம்மா இருந்த மன நிலையில் இன்று தேவகியின் நிலையைப் பற்றி நினைக்க அவளுக்கு நேரமில்லை. கடிதத்தை நீட்டிய அம்மாவிடம் தேவகியே கேட்டாள்: ''என்ன கடிதாக, அம்மா? நீயே சொல்லிவிடு.''

அம்மா சொன்னாள்: ''மணி போட்டிருக்கிறான். ஜானத்துக்குக் குறைப் பிரசவம் ஏற்பட்டு ஆஸ்பத்திரியில் இருக்கிறாளாம். உன்னையாவது ராதாவையாவது இன்றைக்கு ராத்திரி கிளம்பி வரச் சொல்லி எழுதியிருக்கிறான்.''

சித்தியின் ஊருக்குப் போகலாம் என்று நினைத்ததும் தேவகிக்கு ஒரே கணத்தில் குதூகலம் எழுந்தது. அம்மாவுடன் கூடப் பிறந்த ஜானம் சித்தியின் கிராமம், தேவகிக்கும் ராதாவுக்கும் காஷ்மீர், ஊட்டி, குற்றாலம் எல்லாம் சேர்ந்த இடம். நல்ல வசதி படைத்தும் பெண் இல்லாக் குறை படைத்த சித்திக்குத் தேவகியிடமும் ராதாவிடமும் உயிர்தான்.







தன் நினைவுக்கு மீண்ட தேவகி சொன்னாள்: ''என்னால் இன்றைக்குக் கிளம்ப முடியாது, அம்மா. ஆபீஸில் அப்படி வேலை. ராதாதான் போகணும். அவள்தான் லீவு போடப் போவதாக ஒரு மாசமாகச் சொல்லிக்கொண்டிருந்தாள்.''

''யாரோ ஒருத்தி இன்றைக்கு ராத்திரியே கிளம்பணும். கடிதாசைப் பாரேன்...''

ராதாவும் வந்து சேர்ந்தாள். அவளைப் பார்த்த கணத்தில் தேவகிக்கு எரிமலையின் எதிரில் நிற்கும் உணர்வு எழுந்தது. அவள் இன்று ராத்திரி ஊருக்குப் போய்விடப் போகிறாள் என்றநினைவு தாற்காலிக சாந்தியாக எழுந்தது.

ஆனால் ராதாவோ கூடவேயே ஊருக்குக் கிளம்பச் சம்மதிக்கவில்லை. முக்கியமான சில வேலைகளை முடித்துக் கொண்டு இரண்டு நாட்களில் கிளம்புவதாகச் சொல்லிப் பார்த்தாள். எப்படியோ அவளைச் சமாதானப் படுத்தி அன்று இரவே கிளம்பும்படியாகச் செய்தாள். ஒன்பதரை மணி ரயிலுக்கு அப்பாவின் துணையுடன் தேவகியும் எழும்பூர் ஸ்டேஷனுக்குப் போனாள்.

ரயில் கிளம்ப பத்து நிமிஷங்கள் இருக்கும் போதுதான் அவர்களால் எழும்பூர் ஸ்டேஷனுக்கு வர முடிந்தது. ராதாவைப் பெண்கள் வண்டியில் ஏற்றிவிட்டு விட்டு அப்பா டிக்கட் வாங்கி வர வெளியில் சென்றார். அப்பொழுதுதான் ராதா தன்னிடம் தனியாக அகப்பட்டுக் கொண்டதால் சாயங்

பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் மீது
நளினி நம்பிக்கை வைத்தாள்,
நல்ல பலன் பெற்றாள்

# 7 நாட்களில் கண்ணாடிக் கன்னம், கண்டோர் வியக்கும் மாசுமறுவற்ற சருமம்

எனக்குக் கலியாணமே ஆகாதோ என்று மனம் புழுங்கினேன் ... எனக்கும் கலியாணம் ஆகும் என்ற நம்பிக்கையே போய்விட்டது. சிநேகிதிகளின் திருமணங்களுக்குச்சென்றுஎனக்கு அலுத்து விட்டது. மனதிலே அவநம்பிக்கை,தீராத துக்கம்!



இரண்டாவது முறைக்ரீமைத் தடவினால் சோப்பு நுரை புகமுடியாத சருமத்துவாரங்களுக்குள் க்ரீம் புகுந்து அங்கு அடைந்து கிடக்கும் அழுக்கை வெளியேற்றி விடுகிறது. மேலும், சருமத்தை மிருதுவாக்கி வரட்சியை ஒழிக்கிறது.



**"7 நாட்களில் எழில் பெறலாம்"** என்ற இலவச புத்தகத்தைப் பெற
தபால் செலவுக்கு 15 பைசா ஸ்டாம்பு வைத்து, இன்றே எழுதுங்கள்

என்னிடத்திலுள்ள குறைதான் என்ன? கண்ணாடியில் கூர்ந்து கவனித்தேன். வரிசை வரிசையாக பொரு பருக்கள், கரும்புள்ளிகள்... அழகைப் பாழாக்கியிருந்தன. ஆமாம் என் சருமமானது சொர சொரப்பாய் அழுது வடிகிறது என்று புரிந்து கொண்டேன். உடனே அதற்கான பரிகாரம் கண்டு கொண்டேன்.



7 நாட்களில் எழில்தரும் பாண்ட்ஸ் பராமரிப்பை மேற்கொண்டேன். பிரதி இரவும், பாண்ட்ஸ் கோல்டு க்ரீமை இரண்டு தரம் தடவிக்கொண்டேன். ஏதும் குறைகளில், முகத்தில் படிந்துள்ள பழைய பவுடரை சிறிதுகூட பாக்கி வைக்காமல் பாண்ட்ஸ் க்ரீம் சருமத்தில் ஊடுருவி சுத்தம் செய்துவிடுகிறது. அது சோப்பைப்போல எரிச்சலை ஏற்படுத்துவதில்லை.



7 நாட்களுக்குப் பிறகு—என்ன அதிசய மாறுதல்! 7 நாட்களில் எழில் தரும் பாண்ட்ஸ் பராமரிப்பு மூலம் என் முகம் வசீகரப் பொலிவுடன் விளங்கிற்று! சருமம் பட்டுப்போல் மிருதுவாகி விட்டது. ஆமாம்...எனக்குக் கலியாணம் கூட நிச்சயமாகியிருக்கிறது!



இனிமேல் சரும எழிலைக் காப்பதில் என்றுமே அக்கரையோடிருப்பேன். பாண்ட்ஸ் பராமரிப்புதான் என் சருமத்தை பொலிவுடனும், வசீகரத்துடனும் வைக்குமே!



காலத்திலிருந்து இத்தனை நேரமாக அழுத்தி வைத்துக் கொண்டிருந்த ஆத்திரம் மேலெழும்பத் தேவகி வெறிபிடித்தவள் போல அவளைப் பார்க்க ஆரம்பித்தாள். ஆனால் தேவகி சற்றும் எதிர்பாராதபடி ராதா மிக அமைதியுடன் பேச ஆரம்பித்தாள்.

''தேவகி, உன்னிடம் ஒரு சமாசாரம் சொல்லணும். அதை இத்தனை நாளாக உன்னிடம் சொல்லாமலே வைத்துக் கொண்டிருந்ததற்கு உன்னிடம் மன்னிப்புக் கேட்கணும். மேலும் இந்த விஷயம் முக்கியமாக உன்னைப் பாதிக்கிற விஷயமானதால் உன்னுடைய அநுமதி வாங்கிக் கொள்ளாமல் நான் இதில் இறங்கியது உனக்கு அவமானமாகக் கூட இருக்கும். வந்து....'' என்று எப்படி ஆரம்பிப்பது என்று தெரியாமல் தவிக்கும் ராதாவைப் பார்க்கப் பார்க்கத் தேவகிக்கு எரிச்சல் தான் அதிகமாகியது.

''என்னை மன்னித்துவிடு, தேவகி, உனக்கு, உன்னுடைய தன்மதிப்புக்கு நான் துரோகம் இழைத்தது மாதிரி கூடத் தோன்றும். ஆனால்....?

''அடேடே! தேவகியும் ராதாவுமா? எங்கே இப்படி?... ஊருக்கா? இரண்டு பேருமா?... எதுவரையில்? நாங்களும் வரலாமா?'' என்று முழங்கிக் கொண்டே இரண்டு மூன்று சிநேகிதிகள் வண்டிக்குள் ஏற, அவர்கள் கேள்விகளுக்குப் பதில் சொல்லி ஒருவாறு ஓய்வதற்குள் அப்பா டிக்கட்டுடன் வர, மணி அடிக்க, ரயில் கூவென்று கிளம்பியது. ராதா சொல்ல வந்த விஷயத்தைச் சொல்ல முடியவில்லை. எல்லா விவரங்களையும் தெரிந்து வைத்துக்கொண்டிருந்த தேவகிக்கும் ராதா சொல்லி முடிக்காதது குறையாகத் தோன்றவில்லை. ரயில் பிளாட்பாரத்தைத் தாண்டியதும் சில நாட்களுக்குப் பிறகு அன்றுதான் தேவகி நிம்மதியாக மூச்சு விட்டாள்.

## 4

ராதா ஊருக்குப் போய் ஒரு மாதம் ஆகிவிட்டது. சித்திக்கு இன்னும் உடல்நிலை சரியாகவில்லையாம். இன்னும் ஒரு மாதத்துக்குத் துணை வேண்டுமாம். தேவகியை வரச் சொல்லிக் கடிதம் வந்தது. அவளும் லீவு வாங்கிக் கொண்டு புறப்படத் தயாரானாள்.

அன்றைக்கு இரவு ரயிலில் தேவகி ஊருக்குப் போக வேண்டும். மறுநாள் ராதா வந்து விடுவாள். தேவகி குழம்பித் தவித்தாள். ஊருக்குப் போனதும் உடனேயே ஆற்றில் குளிக்கப் போகும் சாக்கில் ராதாவைத் தனியாக அழைத்துக் கொண்டுபோய்க் கண்டித்து, 'இனி ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். குடும்பத்துக்கு அவப்பெயர் தேடிவைக்காமல் இருக்க வேண்டும்' என்று கூறுவதென்று தீர்மானித்துக் கொண்டாள். தேவகிக்கு இப்போது முழுத் தைரியம் வந்துவிட்டது. ராதாவிடம் எப்படிப் பேசிக் கண்டிக்க வேண்டும் என்பதைப் பத்துத் தடவை சொல்லிப் பார்த்துக் கொண்டாள்.

பிற்பகல் மணி மூன்று இருக்கும். தபால்காரன் ஒரு கடிதத்தைத் தேவகியின் பெயரைச் சொல்லிக் கொடுத்துவிட்டுப் போனான். தன் பெயருக்கு ஆபீஸ் விலாசத்துக்குக் கடிதம் வரவே பதற்றத்துடன் அவள் பிரித்துப் பார்த்தாள். மேலே யிருந்த பெயரையும், கீழே யிருந்த கையெழுத்தையும், கடிதத்தின் முதல் இரண்டு வரிகளையும் படித்ததும் தேவகிக்கு நூறு தேள்களும் ஆயிரம் பாம்புகளும் ஒன்றாகப் பிடுங்குவது போல் இருந்தது.

''அன்புடைய தேவகிக்கு...'' என்று ஆரம்பித்திருந்த அந்தக் கடிதம் அந்த ராகவனிடமிருந்து தான் வந்திருந்தது.

''எனக்கு இப்போது கோயமுத்தூருக்கு மாற்றலாகி யிருப்பது உனக்குத் தெரிந்திருக்கும். ராதா உன்னிடம் எல்லாம் கூறியிருப்பாள் என நினைக்கிறேன். ஒரு மாதமாக நான்கைந்து தடவைகள் சென்னைக்கு வந்தும் ராதாவைப் பார்க்க முடியவில்லை. இந்தத் தடவை உன்னைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்று நினைத்து இதை எழுதுகிறேன். இன்று சாயங்காலம் ஆபீஸ் முடிந்ததும் மௌண்ட் ரோடு நேப்பியர் பூங்காவுக்கு வர முடியுமா? ராதா உன்னிடம் எல்லாவற்றையும் சொல்லியிருப்பாள் என்றாலும் உன்னையும் நேரில் பார்த்து உன் சம்மதத்தையும் கேட்க வேண்டும்.—ராகவன்.''

கடிதத்தைப் படித்து முடித்த தேவகி, அதை எட்டாக மடித்துக் கிழித்துக் குப்பைத் தொட்டியில் எறிந்தாள். 'ஒரு பெண்ணைத் தனியாக வரச் சொல்லி எழுதக் கூடிய தைரியம் உடையவன் எதற்கும் துணிந்தவனாகத் தான் இருப்பான். அவன் முகத்தில் விழிப்பதுகூடப் பாவம்தான்!'

மாலை ஆபீஸ் நேரம் முடிந்ததும் 'அவனைப் போய் ஒரு பார்வையா?' என்று முதலில் நினைத்தவள், பிறகு ராதாவைப் பார்ப்பதற்கு முன்னால் அவனையும் பார்த்து ஆத்திரம் தீரச் சாடிவிட்டுப் போகத் தீர்மானித்தாள். இத்தனை நாட்களாக இல்லாமல் இன்று தைரியத்தை யெல்லாம் திரட்டிக் கொண்டு பூங்காவுக்குள் நுழைந்தபோது தேவகி, தேவகியாக இல்லை.

அந்தப் பழைய பெஞ்சில் உட்கார்ந்து ஏதோ படித்துக் கொண்டிருந்த அவன் தேவகியைக் கண்டதும், ''ஓ...வா...'' என்று பரபரப்புடன் எழுந்து நின்றான்.

தேவகி வாயைத் திறக்கவில்லை. அவனை நிமிர்ந்து பார்க்கவும் இல்லை.

''உட்காரேன்...'' என்று பெஞ்சின் கோடியைக் காண்பித்துவிட்டு அவன் நின்று கொண்டே யிருந்தான்.

'நெஞ்சே, தைரியமாக இரு. பயம் என்ன? யாரிடம் பயம் வேண்டும்? பால் போலிருந்த தங்கையின் மனதைக் கலைத்த பாவியிடமா பயம்? இல்லை... எனக்குப் பயமே இல்லை... தேவகிக்குப் பயம் இருந்தாலும் ராதாவின் அக்காவுக்குப் பயம் இருக்கலாமா?'

''ராதா உன்னிடம் எல்லாம் சொல்லியிருப்பாள்...''

''அவன் சொல்லித்தான் எனக்குத் தெரிய வேண்டும் என்று இல்லை. நானே எல்லாம் தெரிந்து கொண்டேன்.''

''உனக்குத் தெரியுமா?... அப்போ ... நான் எடுத்துக் கொண்ட முறை ஒருவேளை தவறாக இருக்கலாம்... ஆனால் நீங்கள் எல்லாம் வீட்டில் இருக்கும் பெண்களாக இல்லாமல் வேலைக்காக வெளியில் வந்த பெண்களாக...''

எந்த வார்த்தை தேவகிக்கு வேம்பாகக் கசந்ததோ அந்த வார்த்தையை அவன் சொல்லிவிட்டான். தேவகி சீறி எழுந்தாள். ''நாங்கள் வேலைக்கு வந்துவிட்டோம் வெட்கம், மானம் எல்லாவற்றையும் துறந்து விட்டு. நீங்கள் எல்லாம் பார்க் என்றால் பார்க்குக்கு, பீச் என்றால் பீச்சுக்கு, சினிமா என்றால் சினிமாவுக்கு என்று உங்களுடன் ஓடி வர நாங்கள் வேலை என்ற போர்வையைப் போர்த்திக் கொண்டு விட்டோம். அது தானே உங்கள் நினைப்பு? அது இல்லை. இதோ நான் சொல்லுகிறேன். நாங்கள் வேலைக்கு வந்து நிற்பது உங்களைப் போலொத்தவர்களுடன் சம உரிமை கொண்டாடவோ அல்லது நாங்கள் ஏதோ தலைநிமிர்ந்து நிற்க வேண்டும் என்ற எண்ணத்தினாலோ இல்லை. தெரிந்து கொள்ளுங்கள். சமூகத்தில் வேர் பாய்ச்சிவிட்ட விஷம் போன்ற பழக்கத்தை விட்டுவிடத் தைரியம் இல்லாத உங்களைப் போன்ற கோழைகளால்தான் நாங்கள் நானூறு ஆண்பிள்ளைகளுக்கு நடுவில் எங்கள் உருவ லட்சணம், கால் அமைப்பு, கை அமைப்பு என்று பேசப்படும் நிலையிலும் ராதாவைப் போல் முன் பின் தெரியாதவர்களுடன் டாக்ஸியில் போய்ச் சந்தி சிரிக்கும் நிலையிலும் நிற்கிறோம். மனம் என்று ஏதாவது இருந்தால் யோசனை செய்து பார்த்துக் கொள்ளுங்கள். மற்றபடி இனிமேல் ராதாவைக் கூப்பிட்டால்; ராதா தேவகியைக் கூப்பிட்டால் தேவகி-இப்படி எல்லாரும் ஓடி வருவார்கள் என்று நினைக்க வேண்டாம். இனிமேல் ராதாவைத் தனியாகச் சந்திக்க முயன்றால் போலீஸில் சொல்லி நடவடிக்கை எடுக்கச் செய்வேன். தெரிந்து கொள்ளுங்கள். இதைச் சொல்லி விட்டுப் போகத்தான் வந்தேன். அவ்வளவுதான்!'' அவன் முகத்தைக்கூடப் பார்க்காமல் தேவகி விடுவிடுவென்று வெளியேறினாள்.

மழை பெய்து வெளிவாங்கிய வானம் போல் இருந்த அவள் மனத்தில் ஒரு தெளிவு பிறந்தது. தங்கையைப் பார்த்துத் திட்டுவதைவிட ஒரு மூன்றாவது மனிதனைப் பார்த்து ஆத்திரம் தீரக் கொட்டுவது சுலபமாக இருந்தது. இனிக் கவலையில்லை. ராதாவிடம் அமைதியாகவே சொல்லலாம். அம்மாவிடம் கூடச் சொல்லலாம்.

இரவு ரயில் பிரயாணம் தேவகிக்கு நிம்மதியாக இருந்தது.

## 5

*ர*யிலிலிருந்து இறங்கியதும் மணி சொன்ன செய்தி தேவகிக்குச் சற்று ஏமாற்றமாக இருந்தது. அது, ராதா முதல் நாள் இரவே நல்ல துணை கிடைத்ததென்று அவர்களுடன் சென்



''உன்னிடம் மிகச்சிறப்பாக இருப்பதை உலகுக்கு அளி; மிகச் சிறந்தது உனக்குத் திரும்பி வரும்'' என்ற மேற்கோள் வாசகம் கொண்ட பள்ளியில், அந்த மாணவன் படித்துத் தேறியவன். அச்சிறுவன் ஒன்பது வயதில் செய்த வேலை: டெக்ஸாஸ் நகர சலூன் ஒன்றில் காலணி துடைப்பது!

அதன் பின்னர் பதினைந்து வயதில் உயர்நிலைப் பள்ளியில் தேர்வு பெற்ற பின் சாலை அமைக்கும் தொழிலாளர் குழுவில் பணி! சம்பளத்தில் கிடைக்கும் ஊதியத்தைச் சேமித்துக் கொண்டே கலிபோர்னியா வந்து சேர்ந்தான். வழியில் கிடைத்த வேலைகளை யெல்லாம் செய்தான்.

இது மட்டுமா? இல்லை. அச்சிறுவன் செய்த வேலைகளின் பட்டியல் வளர்ந்தது. லிப்ட் இயக்கும் வேலை, மோட்டார் வண்டி கழுவுதல், ஹோட்டலில் எடுபிடி வேலைகள்... இப்படிப் பல வேலைகளைச் செய்து கொண்டே கல்வி கற்று வந்தான். தகுந்த கல்வி இல்லாவிடில் வாழ்க்கையில் முன்னேற முடியாது என்பதை உணர்ந்திருந்தான், அந்த ஊக்கம் குறையா மாணவன். அப்படியும் வருவாய் பற்றாக்குறை.

ஓய்வு நேர வாயிற் காப்போன், வீட்டுக்கு வீடு ஏறி விற்கும் விற்பனையாளன், கல்லூரித் தலைவருக்குக் காரியதரிசி—இப்படிப் பல விதமாகவும் பணியாற்றி, தன் இருபத்து இரண்டாவது வயதில் விஞ்ஞானத்தில் பி. எஸ்ஸி. பட்டம் பெற்றான் அந்த மாணவன்.

வாழ்க்கைப் போராட்டத்தில் அங்குலம் அங்குலமாக வெற்றி பெற்ற அந்த மாணவன் யார் தெரியுமா?

அமெரிக்காவின் முப்பத்தி ஆறாவது ஜனாதிபதியாக இன்று பதவி வகிக்கும் லிண்டன் பேன்ஸ் ஜான்ஸன் அவர்கள்தான்!

ஆதாரம்: 'அமெரிக்க ஜனாதிபதி'
தகவல்: ஏ. சுவாமிநாதன்.

**வாழ்க்கையில் வெற்றி!**

ஊருக்குத் திரும்பிவிட்டாள் என்பதுதான். நல்ல வேளை; அவனை முதல் நாள் சந்தித்து விட்டு வந்தது நல்லதாகப் போய்விட்டது. இல்லாவிட்டால் இப்போது ராதாவையும் பார்க்க முடியாத நிலையில் மிகவும் சிரமமாயிருக்கும் என்று தேவகி நினைத்துக் கொண்டாள்.

கிராமவாசத்தில்தான் எவ்வளவு நிம்மதி! காலைவேளையில் தெளிந்த நீரோட்டத்தில் அமிழ்ந்து குளித்தெழலாம். ஆபீஸுக்குப் போக வேண்டும் என்ற அவசரத்தில் ஈரத் தலையை அப்படியே பின்னிக் கொண்டு கிளம்ப வேண்டாம், எதிலுமே ஒரு பரபரப்போ அவசரமோ இல்லை. கறிகாய்களை நூறு கிராம், இருநூறு கிராம் என்று பெரிய பெயரில் வாங்கி ஒரு கறிக்குக்கூடக் காணாத கஷ்டம் இல்லை. கூடை கூடையாக வயல் கரைகளிலிருந்து ஆட்கள் கொண்டு வரும் கறிகாய் வகைகளில் எதைச் சமைப்பது என்று புரியாத தவிப்பும், பிற்பகலில் ஒரு கவலை இல்லாமல் ஊஞ்சலில் ஆடி ஆடித் தூங்கும் அமைதியும், கோயிலில் ஆளுயரக் குத்து விளக்கின் ஆடாத அசையாத ஜோதியில் புன்னகை புரியும் அம்பிகையின் சந்நிதியில் நிற்கும் நிம்மதியும் சேர்ந்து கிராமவாசம் தேவகிக்குச் சொர்க்கவாசமாக இருந்தது. மாலை வேளைகளில் அவளைப் பார்த்துப் பேச வரும் கிராமப் பெண்கள் அவள் சென்னையில் உத்தியோகம் பார்க்கிறாள் என்பதிலும் அவளை ஏதோ ஒரு பெரிய அந்தஸ்துக்கு உயர்த்தி வைத்து 'ஆ'வென்று வாய் திறந்து நின்றபடி அவளது ஒரு சொல்லுக்குக் காத்திருந்தார்கள்.

ஒரு மாதம் ஓடி ஒளிந்தது.

மீண்டும் சென்னைக்குத் திரும்பியதும் பழைய ஆபீஸ் வாழ்க்கை முறைகூட ஒரு மாத மாறுதலினால் சற்றுப் புதுமையாகவே இருந்தது.

நான்கைந்து நாட்கள் கழித்து ஒரு நாள் சாயங்காலம் தேவகி வீட்டுக்குத் திரும்பி வந்து அம்மா கொடுத்த டிபனைச் சாப்பிட்டு விட்டு மொட்டை மாடிக்குப் போய் 'அப்பாடா' என்று உட்கார்ந்தாள். சிறிது நேரம் கழித்து மாடிக்கு வந்த ராதாவை அவள் பார்த்தும் கவனிப்பாரும் அதைப் பாரும் எதுவும் பேசாமல் கையிலிருந்த புத்தகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அப்போது ராதா தன்னையே உற்று நோக்கிக் கொண்டிருப்பதை உணர்ந்து, நிமிர்ந்து பார்த்தவளுக்கு ராதாவின் பார்வை விசித்திரமாக இருந்தது. வெகு நேரம் அவள் பேசவில்லை. கடைசியில் திடுமென்று ராதா கேட்டாள். "நான் ஊருக்குப் போயிருந்த போது அவர் உன்னைத் தனியாகச் சந்தித்தாரா?"

தேவகிக்கு முதலில் தூக்கிவாரிப் போட்டது. "யார், ராதா? என்ன இது?" என்று வியப்புடன் கேட்டாள்.

"யார் என்று உனக்குத் தெரியாதா? இந்தா!" என்று சொல்லி ஒரு கல்யாணப் பத்திரிகையைத் தேவகியிடம் எடுத்துக் கொடுத்தாள் அவள்.

"யாருடைய பத்திரிகை இது?" என்று சொல்லிக் கொண்டே அதைப் பிரித்த தேவகி, மணமகன் பெயரைப் பார்த்து விட்டு ராதாவை நிமிர்ந்து நோக்கினாள். அந்தக் கணத்தில் அவள் கண்களில் தோன்றிய உணர்ச்சி ஆத்திரமா, கோபமா என்று சொல்ல முடியவில்லை.

மௌனமாக நின்ற தேவகியிடம், ராதாவே மீண்டும் கேட்டாள். "அவர் உன்னைச் சந்தித்தாரா—?"

தேவகிக்கு இப்போது தன் தங்கையே தன்னைக் குறுக்கு விசாரணை செய்வதைப் பார்த்து எரிச்சல் வந்தது. "உம்" என்றாள்.

"நீ அவரை எங்கே பார்த்தாய்? என்ன சொன்னாய்?"

"நான் அவரைப் பார்க்கவில்லை. காறித் துப்பினேன். ராதா, உன்னிடம் நான் பேசத் தயாராக இல்லை. உனக்கு அவரைப் பிடித்திருந்தது என்றும் அவருடன் கண்டபடி காரில் சுற்றலாம் என்று எண்ணிக் கொள்ளாதே! நம் குடும்பம் அவ்வளவு கேவலமான குடும்பம் இல்லை. தெரிந்ததா?"

"தேவகி—"

"முதலில் நான். பிறகு நீ; நீ ஊரில் இல்லா விட்டால் மறுபடியும் நான். இரண்டு பேருமே கிடைக்கா விட்டால் வேறு எவளோ ஒருத்தி! இப்பொழுது கேட்கிறேன். எனக்கு எல்லாம் தெரியும். முன்பின் தெரியாத ஆண் பிள்ளை ஒருவனுடன் ஒரே டாக்ஸியில் போக உனக்கு அவமானமாக இல்லை? அவனைத் தனியாகப் பார்க்கில் சந்தித்துப் பேசும்போது உன் மனசும் உடம்பும் துடிக்க வில்லை?"

"தேவகி —"

"போதும் ராதா! இதைப் பற்றி இன்னமும் உன்னுடன் நான் பேசத் தயாராக இல்லை. ஒரு வழியாகக் கல்யாணம் என்று ஆகி அவன் ஒழிந்தான். இதோ பார் ராதா. ஏதோ இல்லாத கொடுமை என்ற ஒன்று நம்மையெல்லாம் வேலையை நம்பி வீட்டை விட்டு வெளியே போகச் செய்திருக்கிறது. என்னையும் அம்மாவையும் தலை குனியச் செய்து விடாதே ராதா...."

இருவருமே கண்களில் கண்ணீர் தளும்பச் சிறிது நேரம் உட்கார்ந்திருந்தனர். ராதா தான் மறுபடியும் ஆரம்பித்தாள். "நீ ஒன்றையுமே புரிந்து கொள்ளவில்லை, தேவகி. நான் அவருடன் டாக்ஸியில் போனதையும் பார்க்கில் பேசுவதையும் எங்கேயோ நின்று பார்த்து விட்டுத் தவறாக நினைத்து விட்டாய். ஆனால் உண்மையில் நடந்தது என்ன என்று தெரியுமா?"

"................"

"நான் எதற்காக அவருடன் சுற்றினேன் தெரியுமா? என் ஆபீஸிலேயே பலர் என்னைப் பற்றி இழிவாகப் பேசுவது தெரிந்தும் நான் ஏன் அப்படி நடந்து கொண்டேன் தெரியுமா? உனக்காக. ஆம், உனக்காக."

"................"

"ஆமாம், தேவகி! அவர் உன்னை வந்து பார்த்து விட்டுப் போனதற்குச் சில நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் யதேச்சையாக




# சில ஆகாரங்கள் உங்களுக்கு ஒத்துக்கொள்ள வில்லையா?

அனேக ஜனங்கள் ஆகார க்ரமக் குறைவால் அஜீரணம், அல்லது மலச் சிக்கல் முதலியவைகளால் அவதிக்குள்ளாகிறார்கள். அப்பொழுது உங்களுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மெக்னீஷியா தேவைப்படுகிறது.

ஆகார க்ரமக் குறைவால் உங்களுக்கு ஏற்படும் புளிப்பான ஏப்பம், வயிற்றில் ஏற்படும் எரிச்சல், குமட்டல் முதலியவற்றை ஒரு நொடியில் நிவர்த்தி செய்கிறது.

மலச் சிக்கல், அதனாலேற்படும் சோர்வு முதலிய உபாதைகளை நீக்கி, பூரண உடல் நலம் பெறுவதற்கு பிலிப்ஸ் உதவுகிறது.

அதனால் அடுத்த முறை அதிகப்படியான உணவு உட்கொள்ள நேரிட்டால், உடனடியாக பிலிப்ஸ் மில்க் ஆப் மெக்னீஷியா உபயோகிக்கவும். அது பலனளிக்கும்!




# பிலிப்ஸ்

## மில்க் ஆப் மெக்னீஷியா

மான்யுபாக்சரர்: ரிஜிஸ்டர்ட் யூஸர்

டேய்ஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்) பிரைவேட் லிமிடெட்

62, பண்டல் ரோட், கல்கத்தா-19

பீச் ஸ்டேஷனில் அவர் என்னைப் பார்த்தார். அவருடைய நிலைமை விளக்கிச் சொன்னார். அப்புறம் என்ன சொன்னார் தெரியுமா? 'உன் அக்காவை எனக்குப் பிடிக்கவில்லை என்று நான் சொல்ல வில்லை. ஆனாலும் உன் தைரியமும் பேச்சும் எனக்கும் அம்மாவுக்கும் பிடித்திருக்கின்றன. நீ என்ன சொல்கிறாய்?' என்று கேட்டார். 'அக்காவுக்குக் கல்யாணம் ஆகாமல் என் கல்யாணத்தைப் பற்றி எப்படி யோசிக்க முடியும்?' என்றேன். அதற்கு அவர் 'நான் காத்திருக்கிறேன்' என்றார். 'காத்திருந்து பிரயோசனம் இல்லை. தேவகியிடம் என்ன குறை? என்னைப் பற்றிக் கல்யாணம் என்ற நினைவில் நான் யோசிக்கவே முடியாது என்று சொன்னேன். கடைசியில் அவர் உன்னையே கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதித்தார். அவர் மறுபடியும் நம் அப்பாவைப் பார்த்து, விட்ட பேச்சைத் தொடர்வதற்கு முன்னால் உன்னையும் ஒரு தடவை தனியாகப் பார்த்து உன் சம்மதத்தை உன் வாயாலேயே கேட்டுத் தெரிந்து கொள்ள நினைத்தார். நான் ஊருக்குக் கிளம்பினேனே, அன்றுதான் அவரைப் பார்க்கில் சந்தித்து உன்னைச் சந்திக்கவும் ஏற்பாடு செய்வதாக வாக்குக் கொடுத்துவிட்டு வந்தேன். ஆனால் நீயும் அம்மாவுமோ, நான் வீட்டுக்கு வந்ததும் வராததுமாக உடனேயே மூட்டை கட்டி என்னை ஊருக்கு அனுப்பி விட்டீர்கள். எழும்பூர் ஸ்டேஷனிலாவது உன்னிடம் முழுதும் சொல்லி உன்னைத் தயார்ப்படுத்தி வைக்க வேண்டும் என்று நினைத்தேன்......''

''ராதா.....!'' என்ற ஒரு சொல்லைத் தவிர தேவகியிடமிருந்து வேறு வார்த்தையே வரவில்லை.

ராதா பத்திரிகையுடன் வந்த கடிதத்தையும் தேவகியிடம் கொடுத்தாள்:

''கல்யாணப் பத்திரிகையை உனக்கு அனுப்பாமல் இருக்கமுடியவில்லை. இரண்டு தடவை நம்பிக்கைவைத்து இரண்டுதடவையும் தோல்வி அடைந்து விட்டேன். பார்த்தால் பசுவாக இருக்கும் உன் சகோதரி பாய்ந்தால் புலியாக இருப்பாள் என்று எனக்குத் தெரியவே இல்லை. அன்றைக்குப் பார்க்கில் அவள் கத்தின கத்தலில் எட்டி நின்றவர்கள்கூட வேடிக்கை பார்க்க ஆரம்பித்து விட்டார்கள். எப்படியோ ஆரம்பித்து எப்படியோ முடிந்து விட்டது. பெண்கள் வேலைக்குப் போவது என்பது என்னதான் அவசியத் தேவை என்றாலும் அது எப்படி இயற்கைக்கு விரோதமோ, அப்படித்தான் அவர்களைத் தனியாகச் சந்தித்து அவர்கள் மனநிலையை அறிந்து கொள்வதும், இயற்கைக்கு விரோதமாகி விட்டது. எப்படி யிருந்தாலும் பத்திரிகையை உங்களுக்கு அனுப்பி இறைவன் அருள் உங்கள் இருவருக்கும் கிடைக்க வேண்டும் என்று என்னால் பிரார்த்திக்காமல் இருக்க முடியவில்லை. ஏனென்றால், நான் மேற்கொண்ட முயற்சி இயற்கைக்கு மாறுபட்டதானாலும் நான் நேர்மைக்கு மாறானவன் என்று என்னைப் பற்றி நானே நினைத்துக் கொள்ள முடியவில்லை.

—ராகவன்''

திருமணம் என்ற நிகழ்ச்சி எவ்வளவுதான் படிப்பு, வேலை என்ற மாற்று உணர்ச்சிகளினால் மங்கிப் போனது போல் காட்சியளித்தாலும் அது தானாகவே நெருங்கி வந்து, கைக்குள்ளேயே சிக்கியும் எப்படியோ தப்பி, எங்கோ நழுவிவிட்டதைக் கண் முன்னாலேயே கண்ட அந்த இரு கன்னியரும் மொட்டை மாடியின் குளிர்ந்த காற்றில் உஷ்ணப் பெருமூச்சுகளாக விட்டு விட்டுத் தங்கள் உள்ளச் சுமையைக் குறைக்க முயன்று கொண்டிருந்தனர்.

---

தங்களுக்குச் சொந்தமான ஒரு மாந்தோப்பை யாருக்குக் குத்தகை விடுவது என்பது பற்றிய சர்ச்சையில் ஒரு நாள் நாலு சகோதரர்கள் இறங்கினார்கள். அந்தச் சர்ச்சை சிறிது நேரத்துக் கெல்லாம் சண்டையாக மாறி, கடைசியில் ஒருவரை யொருவர் அடித்துக் கொள்வதில் வந்து நின்றது.

ஒரு மரத்தின் கிளையில் உட்கார்ந்தபடி அந்தச் சண்டையை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ஒரு கிளி, ''மாமரமே, மாமரமே! இந்த வேடிக்கையைப் பார்த்தாயா?'' என்றது.

''எந்த வேடிக்கையை?'' என்று கேட்டது மாமரம்.

''கீழே நடக்கும் வேடிக்கையைத்தான்!''

''ஓ! அதுவா? அது எப்போதும் நடப்பதுதானே? அதில் என்ன வேடிக்கை இருக்கிறது?'' என்றது மாமரம்.

''ஏன் இல்லை? உங்களில் ஒரு மரத்துக் காய் புளித்தால் எல்லாக் காய்களுமே புளிக்கின்றன; இன்னொரு மரத்துக் காய் இனித்தால் எல்லாக் காய்களுமே இனிக்கின்றன. அதே மாதிரி ஒரு தாய் வயிற்று மக்களான இவர்களும் ஏன் ஒரே குணத்துடன் இருக்கக் கூடாதாம்?'' என்று கேட்டது கிளி.

மாமரம் சொல்லிற்று:

''அப்படி இருந்தால் மரத்துக்கும் மனிதர்களுக்கும் இடையில் என்ன வித்தியாசமாம்?''



## குண பேதம்!

— விந்தன்



# பாஷாங்க ராகம்

தி. ஜானகிராமன்

சிறப்புச் சிறுகதை

''...என் தாயாருக்கு நீங்கள் அனுப்பிய அனுதாபச் செய்தி கிடைத்தது. 'நிறைந்த சங்கீத அறிவுடன், ரசிக சிரோமணியாகத் திகழ்ந்தார் தங்கள் கணவர் ஸ்ரீ பலராமன். பயமின்றியும், பாரபட்சமின்றியும் அவர் சங்கீத விமர்சனம் செய்து வந்ததே, சங்கீதமே மூச்சாக அவர் வாழ்ந்த லட்சிய நோக்குக்குச் சான்றாகும். அவர் மறைவைச் செவியுற்று இசையுலகம் துயரில் ஆழ்ந்து கிடக்கிறது. அன்புக் கணவரைப் பிரிந்து துயரெனும் இருளில் தவிக்கும் தங்களுக்கும் தங்கள் குழந்தைகளுக்கும் தன் ஆழ்ந்த அனுதாபத்தை எங்கள் பிருங்கி சங்கீத சபை தெரிவித்துக் கொள்கிறது' என்று எழுதியிருக்கிறீர்கள்.

அம்மா அதைப் படித்து விட்டுச் சிறிது நேரம் எங்கோ பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். ''நன்றி, என்று ஒரு வார்த்தை பதில் எழுதிப் போட்டு விடட்டுமா?'' என்று கேட்டேன். ''இத்தனை தப்பு இருக்கிற கடுதாசுக்கு விவரமாகத்தான் எழுதிப் போடேன்'' என்று சொல்லிப் போய்விட்டாள். போகுமுன் வாசல் படியில் நின்று, ''இந்தக் கடுதாசு உனக்குச் சரியாகப்படறதா ?'' என்று கேட்டாள்.

மறுபடியும் படித்து, ஒவ்வொரு வார்த்தையாக எடை போட்டுப் பார்த்தேன். அநேகமாக எல்லாமே தவறு என்று தோன்றிற்று. அம்மாவிடம் அதைச் சொல்லியும் விட்டேன். ''அப்பா என்ற பொய்யைக் கழுத்தை முறிச்சுப் போடு'' என்று சொல்லிவிட்டு வாசற்படி இறங்கிப்போனாள்.

மறுபடியும் உங்கள் கடிதத்தைப் படித்தேன். அப்பாவின் கெட்டிக்காரத்தனத்தை நினைத்துச் சிரிப்பு வந்தது. முரட்டு ரசிகர்களான பிருங்கி சபையார் கண்ணில் மண்ணைப் போட்டு விட்டாரே என்று தோன்றிற்று. அப்பா ரசிகரும் இல்லை, சிரோமணியுமில்லை. பயந்து பயந்து தான் பொழுதைப் போக்கினார் அவர். அவருடைய லட்சியம் சங்கீதமல்ல, பக்ஷணம்தான். காலட்சேப பாகவதர்கள் அடுக்குகிற அறுபது சுவை ஸ்வரங்களுக்குச் சுத்தம், சாதாரணம், அந்தரம், சதுச்ருதி, த்ரிச்ருதி, ஷட்ச்ருதி, கோமளம், தீவிரம் என்றெல்லாம் அடைமொழிகளுடன் வேறுபாடுகள் இருப்பது போல், (ஒவ்வொரு சுவைக்கும் பன்னிரண்டு வகைகள் உண்டு என்று அவர் கட்சி) உண்டி வகைகளை உண்பதுதான் அவருடைய பரம புருஷார்த்தம். அம்மாவுக்கும் அவருக்கும் இடையே எந்தவித அன்பும் மலர்ந்திருந்ததாகத் தெரியவில்லை. இருந்தால் மொட்டிலேயே கருகியிருக்க வேண்டும். துயரெனும் இருளில் அம்மாவோ நாங்களோ தட்டித் தடவி நடக்கவில்லை. நான் மனைவியையும் சங்கீதத்தையும் விசேஷ பாடமாக எடுத்துக் கொண்டு ஆனர்ஸ் படித்துக் கொண்டிருக்கிறேன். என் தம்பி கெமிஸ்டாக ஒரு கம்பெனியில் வேலை பார்க்கிறான். நானும் அவனும் லில்லி பாரிலாவில் குடியிருக்கிறோம். அம்மா — கோரேகாவில் அன்புக் கணவரோடு — இந்த நாள் கணவரோடு — சுகமாக வாழ்ந்து கொண்டிருக்கிறாள். அப்பாவின் மனைவியாக இல்லை. போலீஸ்காரர்கள் வந்து அவரைப் பைத்திய ஆஸ்பத்திரிக்கு அழைத்துக்கொண்டு போய்ச் சேர்த்த பிறகுதான் அம்மாவுக்கு ஆறுதல் கிடைத்தது; அன்பும் கிடைத்தது. மூன்று வருஷங்கள் கழித்துச் சட்டப்படி விவாக ரத்து செய்து கொண்டு வேறு கலியாணம் செய்து கொண்டு விட்டாள்.

மாதா பிதா பாவம் மக்கள் தலையிலே என்பார்கள். அந்தப் பாவத்தை என் அப்பா தம் தலையில் சுமந்து கொண்டு அலைந்தார். கடைசியில் அது அவர் தலைக்குள் இருப்பதையே பாதித்துவிட்டது. அவருடைய பிதா (என் தாத்தா) செய்த பாவம் பிள்ளைக்குச் சங்கீதம் கற்பிக்க முயன்றது. மாதா (என் பாட்டி) செய்த பாவம் அதைத் தடுத்து நிறுத்தாமல் போனது. அதனால் ஒரொரு வேளை அப்பாவை நினைக்கும் போது வருத்தமாயிருக்கும்.

அம்மா இப்போது சாதாரண மனுஷியாகி விட்டாள். இதுவரை பார்யா தர்மம், ஸ்திரீ தர்மம், இல்லாள் கடமை என்று புத்தகங்களில் எழுதியிருக்கும் பெண்மணியாகிச் இருந்தாள். இப்போது நிமரென்று நினைத்துக் கொண்டு சாதாரண மனுஷியாகி விட்டாள்.



தாத்தாவுக்கு மூன்று பிள்ளைகள். முதல் இரண்டு பிள்ளைகளும் திவ்வியமாகப் பாடுவார்களாம். பள்ளிக்கூடத்துத் தலைமை ஆசிரியராக இருந்த தாத்தா, சங்கீதத்திலும் கரை கண்டவர். கரையைக் கண்டு விட்டாலும் எப்போதும் அதிலேயே நீந்திக்கொண்டிருப்பாராம். பிள்ளைகள் பாடுவதைப் பார்த்து உடம்பே வெடிக்கும்போல் பூரித்துக் கொண்டிருப்பாராம். தக்க வயது வந்ததும் சங்கீத இலக்கண இலக்கியங்களையெல்லாம் கரைத்துப் புகட்டி விடுவோம் என்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்தாராம். ஆனால் அவர் இதயமே வெடிக்கிற சம்பவம் நிகழ்ந்தது. அந்த முதல் இரண்டு பிள்ளைகளும் ஒரு சாதாரண ஆற்றில் 'நீந்தப்' போய், உயிரை ஆற்றிடம் தந்து, உடம்பாக எங்கோ அகப்பட்டார்களாம்! தாத்தாவுக்குத் துயரம் தாங்கவில்லை. தம் சங்கீத சொத்தை அவர் இனி மேல் யாருக்கு எழுதி வைப்பார்? மூன்றாவது பிள்ளைக்குத்தானே? வேறுயாரிருக்கிறது? எனவே, என்னுடைய அப்பாவுக்கு ஏழு வயதிலிருந்தே சங்கீதம் சொல்லிக் கொடுக்கத் தொடங்கினார். வாழ்வின் அநித்தியத்தை எண்ணி, சங்கீத இலக்கண சாஸ்திரங்கள், வரலாற்று நூல்கள் எல்லாவற்றையும் அவசரம் அவசரமாகப் பாடம் சொன்னார். என் அப்பாவுக்குப் பாட்டு வரா விட்டாலும் கடம் நன்றாக வரும். எத்தனை பெரிய புத்தகமானாலும் கடம் போட்டு விடுவார். கேட்ட இடத்தில் தலையில் பிரம்ம தண்டத்தை வைத்தாற் போல் கடகடவென்று ஒப்பிப்பார். பாடத்தான் வரவில்லை. தாத்தா அவரை அடிபோ அடி என்று அடித்தார். நன்னங்கை என்ன, முஷ்டி என்ன, பாக்குவெட்டி என்ன, புத்தகம் என்ன, டம்ளர் என்ன, டபரா என்ன—இப்படிப் பல ஆயுதங்களை அவர் மீது கண்மூடிக் கொண்டு பிரயோகம் செய்வார். இப்படி வெகு காலம் வரையில் இந்த சிட்சை நடந்தது. இதற்கிடையில் என் அப்பாவுக்குக் கல்யாணமும் நடந்தது. ஆனால் இசைப் பயிற்சியும் தொடர்ந்த வண்ணமே இருந்தது. அதனுடைய பிரிக்க முடியாத அங்கமான வசவுகளும் தொடர்ந்து பொழிந்து கொண்டிருந்தன. எத்தனை பொழிந்தும் விளைச்சலில்லை. கட்டாந்தரையில் சங்கீதம் எப்படி முளைக்கும்? அப்பா சங்கீத சாஸ்திரங்களை நெட்டுருப் போட்டதனைத்தும் பாத்திரில் எருவாகக் குவிந்திருந்தது. ஆனால் பாத்தி கருங்கல். பாட்டு வரவில்லை. தாத்தா அடிக்கடி பொறுமைகளிட்டு ஓய ஆரம்பித்தார். "அட, பாஷாண்ட சனியனே!" என்று அடிக்கடி பிள்ளையை ஒரு புது முறையில் விரக்தியுடன் திட்ட ஆரம்பித்தாராம். "நீ எங்கேடா இங்கே வந்து பிறந்தே?" என்று பெருமூச்சு விடுவாராம்.

இதை என் அம்மா கேட்டுக் கொண்டிருந்தாள். அவள் சின்னப் பெண். சாந்திக் கல்யாணம் ஆகவில்லை. ஆனாலும் புருஷன் வீட்டுக்குப் பெண்ணை ஒரு மாசம் கொண்டு விடுவதும் அழைத்துப் போவதும் அந்தக் காலத்து வழக்கம். "பாஷாண்ட சனியனே!" என்றால் என்ன என்று அவளுக்கு அப்பொழுது புரிய வில்லை. பாஷாணம் என்பதை அப்படித் தவறிச் சொல்கிறாரோ என்று தோன்றுமாம். கடைசியில் ஒரு நாள், "பாஷாண்ட ராக்ஷசப் பயலே.... ஒழி" என்று ஆசீர்வாதத்துடன் சங்கீதப் பயிற்சிக்கு மங்களம் பாடி முடித்து விட்டாராம் தாத்தா.

தாத்தா பிறகு அதிக காலம் ஜீவித்திருக்கவில்லை. ஒரு நாள் இவ்வாழ்வை நீத்தார். நீக்கும் போது அவரால் பாட முடிய வில்லை. பிள்ளையைப் பார்த்துக் கண்ணீர் வடித்தாராம்.

அவர் போனதும் என் அப்பா 'கூகூ' என்று பச்சைக் குழந்தை மாதிரி அழுதாராம். தம் தந்தையார் கடைசியில் பார்த்துப் பார்த்துப் பேச முடியாமல் கண்ணீர்விட்டதின் அர்த்தத்தை ஆராய முனைந்தார். கண்டு பிடித்து விட்டார். "என் கோட்டை யெல்லாம் தகர்ந்து விட்டதே" என்று தான் அவர் வெம்பியிருக்க வேண்டும் என்று அப்பாவுக்குப் புரிந்து விட்டது. அந்தக் கணமே, இனி வேலைக்குப் போவதில்லை, சங்கீதத்துக்கே உழைப்பது என்று தீர்மானம் செய்து விட்டார்.

சங்கீதத்தைப் பற்றியே பேச ஆரம்பித்தார் என் தந்தை. வீட்டில் பேசுவார். வெளியில் பேசுவார். ஹோட்டலில் பேசுவார், ரயிலடியில் பேசுவார். நண்பர்களோடு பேசுவார். சங்கீதக் கச்சேரிக்கு யாராவது நிர்ப்பந்தமாகக் கூப்பிட்டுப் போனால், வெளியே உட்கார்ந்து சங்கீதத்தைப் பற்றிப் பேசிவிட்டு வந்து விடுவார். அதனால் அவரைப் பார்த்து எல்லோரும் பயப்பட ஆரம்பித்தார்கள். 'வயலோ இடமோ போகட்டும். மேலே விழுந்து பிடுங்காமல் போனால் சரி' என்று

சங்கீத வித்வான்கள் கூட ஒளிந்தார்கள். அதற்காக அவருக்கு நண்பர்களில்லாமல் போய்விடுவார்களா? அவரைப்போலவே நாலு பேர்கள் சேர்ந்து கொண்டார்கள். காசுள்ள ஆசாமி என்றால் விடுவார்களா? அவரோடேயே சாப்பாட்டுக்கும் வந்து விடுவார்கள். இரண்டு கறி, கூட்டுகள், பிட்லை, ஆமவடை பாயஸம் இப்படி அம்மா சாப்பாடு பண்ணிப் போடுவாள். அந்தச் சிரமங்களைக் கூட அவள் சட்டை செய்யவில்லை. கூடத்திலிருந்து வருகிற அப்பா பேசுகிற மாவு மிஷின் குரலையும் நண்பர்களின் குரலையும்தான் அவளால் சகிக்க முடியவில்லை. சில சமயம் குஷி தாங்காமல் அப்பா பாடிக்கூடக் காட்ட ஆரம்பித்து விடுவார். அம்மாவின் முகத்தில் அப்போது ஒரு பேயறைந்த பீதி வந்து படர்வதைப் பார்த்தால் பாவமாக இருக்கும். நண்பர்கள் வந்தாலும் வராவிட்டாலும் அப்பாவுக்கு நாலு கறியில்லாமல் சாப்பிடத் தெரியாது. அப்பளத்தைச் சுட்டால் பிடிக்காது. காலையில் இட்டிலி அல்லது பொங்கல் காப்பி, எட்டு மணிக்கு ஒரு காப்பி, பத்து மணிக்கு இரண்டு பிஸ்கட் காப்பி, பன்னிரண்டு மணிக்குச் சாப்பாடு, இரண்டு மணிக்குக் காப்பி, நான்கு மணிக்கு டிபன் காப்பி, ஆறு மணிக்குக் காப்பி, எட்டு மணிக்குச் சாப்பாடு, பத்து மணிக்கு பட்சணம், பன்னிரண்டு மணிக்கு ஓமப்பொடி, ஓமப்பொடியோடு இஞ்சி இடித்த கொத்தமல்லிக் காப்பி. நடுநடுவே சேவராட்டல் டிபன் வேறு. எப்படி இந்த மாதிரி சாப்பிட முடிகிறதென்று அம்மா பயந்து போய் விட்டாள். வர வர அந்தப் பயம் எப்படி இனிமேல் இத்தனையும் பண்ணிப் போடப் போகிறோம் என்ற மலைப்பாக மாறி விட்டது. ஏனென்றால், அப்பாவின் சொத்து எப்பொழுதும் குட்டி போட்டுக் கொண்டேயிருக்கிற பணக்காரச் சொத்து இல்லை. தாத்தாவின் பிராவிடண்ட் பணம், வசிலிருந்த வீடு, சாப்பாட்டு நிலம் எல்லாம் இந்தச் சாப்பாட்டிலேயே கரைந்து போய் விட்டன.

இப்போது சங்கீத - வித்வான்களுக்குக் கடிதம் எழுத ஆரம்பித்தார்: உங்களைப் போல் பாடுகிறவர்களை விரல் விட்டு எண்ணி விடலாம் என்று ஒரு நூறு பேருக்குக் கடுதாசு போட்டு விட்டார். சிலர் நன்றி தெரிவிக்க நேரிலேயே வந்தார்கள். சிலரிடம் இவரே போனார். எதற்கு? கடன் வாங்க. ஓர் இருபது பேரிடம் பலித்தது. ஆனால் அதற்குள் சங்கீதக் காரர்களுக்கு அடிக்கடி கூடிப் பேசுகிற சந்தர்ப்பங்கள் இருப்பதால், "எனக்கு மட்டும் எழுதியிருக்கிறார்" என்று அவர்கள் குடுமியில் அப்பா சுற்றியிருந்த பூ வாடி விட்டது. பயந்து கொண்டிருந்தவர்கள் இப்போது சிரிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

நாலு கறி, கூட்டு பச்சடி, ஒரு கறியாகவும் வற்றல் குழம்பாகவும் குறைந்து விட்டன.

"என்னமை! உங்க அப்பாவாத்துச் சமையல் மாதிரி ஆயிட்டுதே!" என்று ஆரம்பித்தார் அப்பா.

உண்மையில் அம்மா இப்போது அவள் அப்பா அம்மா வீட்டிலிருந்து சாமான் சரஞ்சாவெல்லாம் வரவழைத்துக் கொண்டிருந்தாள். அதுதான் எத்தனை நாட்கள் நடக்கும்? அவள் அப்பா அம்மா மட்டும் என்ன சிரஞ்சீவிகளா? அவர்களும் போய்ச் சேர்ந்தார்கள். அம்மாவின் அண்ணன் தம்பிகள் சும்மா இருந்தால் அவர்களுடைய மனைவிகள் சும்மா இருப்பார்களோ ?

"உங்க அப்பன் மாதிரின்னு தெனைச்சிண்டிருப்பேளோ" என்று அம்மாவைப் பார்த்து அடிக்கடி குத்திக் காட்டிக் கொண்டேயிருப்பார் அப்பா.

"உங்கப்பாவுக்கு நானும் அவர் மாதிரி பணம் பணம்னு பறக்காம இருக்கேனேன்னு குறை? பணம்னு சம்பாதிக்காவிட்டாலும் வரவா போறவா குறைச்சல் இல்லே. பத்து பணக்காரனுக்குச் சமமா காய்தா பண்ணுவேனே மாப்பிளை, அப்படின்னு வேறே ஆதங்கம். செத்துப் போகிற வரைக்கும் திரிசமனும் ஜாடையுமா இதைச் சொல்லிக் காமிச்சிண்டேயிருந்தார். இப்பதான் அவர் ஆத்மா சாந்தியடைஞ்சிருக்கும். இப்ப நிஜமாவே நான் இல்லாமல் கஷ்டப்படறேனேல்லியோ?" என்றார் அப்பா ஒரு நாள். அதைக் கேட்டு அம்மா பிழிந்து பிழிந்து அழுதாள். வெகு நாட்கள் பொறுத்துக் கொண்டேயிருந்தாள். கடைசியில் ஒரு நாள் திடீரென்று ஆவேசம் வந்தாற்போல் ஒரு கூச்சல் போட்டாளே பார்ப்போம். "போரும், அப்பாவைப் பத்தி இனிமே பேச வாண்டாம்!" என்று சீறின அந்தக் கூச்சல் ஏழு வீட்டுக்குக் கேட்டது. அப்பா அப்படியே வெல வெல வென்று தொய்ந்து போனார். சற்று நேரம் பேசாமல் நின்றார். பிறகு வாசல் பக்கம் போய்விட்டார் அவர்.

அம்மா இப்போது சாதாரண மனுஷியாகி விட்டாள். இதுவரை பார்யா தர்மம், ஸ்திரீ தர்மம், இல்லாள் கடமை என்று புத்தகங்களில் எழுதியிருக்கும் பெண்மணி மாதிரி இருந்தாள். இப்போது திடீரென்று நினைத்துக் கொண்டு சாதாரண மனுஷியாகி விட்டாள்.

அப்போதுதான் விஜயராகவன் அப்பாவுக்குச் சிநேகிதம் ஆனார். அப்பா மாதிரி அவர் அழுக்காக இருக்க மாட்டார். அழுக்கு வேட்டி கட்ட மாட்டார். கருக்கு கருக்கென்று பேச மாட்டார். சும்மாச் சும்மா தின்று கொண்டேயிருக்க மாட்டார். இருந்தாலும் அப்பாவோடு சிநேகிதமாயிருந்தார். அவர் ஒரு நாளைக்குக் கூடத்தில் அப்பாவிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

"நீங்க எத்தனை நாட்கள் சார், இப்படியே இருக்கப் போறேள்? ஏதாவது சம்பாதிக்க வழி பண்ணிக்க வேண்டாமா?"

"எனக்கு என்னய்யா, இப்ப குறை? நான் சந்தோஷமாகத்தான் இருக்கேன்."

"சம்பாத்தியம்......?"

"அதுதானே? நான் உண்மைக்காகப் பாடு படறேன். இந்த மாதிரி மனுஷாள்ளாம் பட்டினி கிடந்துதான் செத்துப் போயிருக்கா. கலையோட சரித்திரத்தை எடுத்துப் பார்த்தீர்னா தெரியும்."

"கல்யாணத்தைப் பண்ணிண்டு, ஒரு குடும்பத்தை உண்டாக்கிப்பிட்டு — "



"அதுக்கு நான் என்ன பண்ணுவேன்? ஒ அவாளுக்கு இதையெல்லாம் தாங்கிக்கி பலமில்லேன்னு நான் என்ன செய்ய றது?"

"நீ வாழ்ந்தே" என்றாள் உள்ளே காப்பி போட்டுக் கொண்டிருந்த அம்மா. இருபது பலம் காப்பிப் பொடியை அன்று காலையில் தான் விஜயராகவன் கொண்டு வந்து கொடுத்துவிட்டுப் போனார்.

"கடனுக்கு லாயர் நோட்டீஸ் நாலஞ்சு பேர்கிட்டேயிருந்து வந்துட்டுதே."

"வரட்டுமே. இருந்தால்தானே கொடுப் பேன்...."

"கடனைத் திருப்பிக் கொடுக்க முயற்சி பண்ண வாண்டாமா?"

"திருப்பித் தரும் யோசனையோடு நான் வாங்கலியே, விஜயராகவன், பணம் வாங் கினால் திருப்பிக் கொடுத்துடணும் என்கிற நேர்மை எல்லாம் பாமர மனுஷாளுக்கு ஏற்பட்ட சட்டமில்லையோ?"

"உவா" என்று உள்ளே குமட்டினாள் அம்மா.

"பெரிய கலைஞர்கள், மேதாவிகள் எல்லாம் தான் இதெல்லாம் பார்க்க மாட்டார்கள் என்று சொல்லுகிற வழக்கம்..."

"அப்படி இங்கே ஒண்ணும் இல்லேன்னு சொல்றீமாக்கும்! நீ ஒப்புக்காட்டா என் னய்யா? நான் கலைஞன் இல்லேன்னு ஆயிடுமா?" என்றார் அப்பா.

"இதைக் கொண்டு மாமாகிட்ட கொடுத் துட்டு வா" என்று காப்பியைக் கொடுத் தாள் அம்மா. கொடுத்துவிட்டு வந்தேன். பிறகு அப்பாவுக்கும் காப்பி கொடுத்தாள். அதையும் கொடுத்துவிட்டு வந்தேன்.

"ஐயோ, ரதி! சர்க்கரையே போடலியே!" என்று அப்பாவின் குரல் கத்திற்று.

சர்க்கரை டப்பாவை எடுத்ததும், "வைம், இழே!" என்று உருட்டி விழித் தாள் அம்மா. உடனே கூடத்து நிலையண்டை போய் நின்று கொண்டாள். "கலைஞருக்குச் சர்க்கரை என்னத்துக்கு?" என்று ஒரு சிரிப்புச் சிரித்தாள். இதைச் சொல்லச் சிரிப்பா னேன் என்று குழம்பின எனக்கு அந்தச் சிரிப்பைக் கேட்டு நடுநிசியில் இருட்டின நிசப் தத்தில் ஏதோ உறுமலைக் கேட்பது போல் இருந்தது. அம்மா உள்ளே போய்விட்டாள்.

ஒரு நாளைக்கு நான் சமையல் அறைக்கு அப்பால் உள்ள திறப்பில் உட்கார்ந்து பாடம் படித்துக் கொண்டிருந்தேன். விஜயராகவ மாமாவோடு அம்மா கூடத்தில் பேசிக்கொண் டிருந்தாள். அரை மணி கழித்து அப்பாவின் குரல் கேட்டது. அம்மா உள்ளே வந்தாள்.

"கழுகுக்கு மூக்கிலே வேர்க்கிறாப்பல இருக்கே இது?" என்று அப்பாவின் குரல் கேட்டது.

"என்ன?" — விஜயராகவ மாமாவின் குரல்.

"நான் இல்லாத சமயம் பார்த்தே வரீமேன்னேன்?"

"வந்தா என்ன?"

"வந்தா என்னவா!.... கெட் ஔட்."— அப்பாவின் குரல். அம்மா நிலையண்டை விரைந்தாள். நானும் போய் நின்றேன். விஜயராகவ மாமா நாற்காலியை விட்டு எழுந்திருக்க வில்லை. அப்பாவையே அசை யாமல் பார்த்துக் கொண்டிருந்தார். மர வட்டையையோ, எட்டுக்கால் பூச்சியையோ பார்க்கிற மாதிரி இருந்தது. அப்பா அம்மா வைப் பார்த்தார். விறுவிறு வென்று செருப் பைக்கூட மாட்டிக் கொள்ளாமல் வாசலில் இறங்கிப் போய் விட்டார். விஜயராகவ மாமா படத்தில் எழுதின சமுத்திர அலை மாதிரி உட்கார்ந்திருந்தார். ஐந்து நிமிஷங்கள் கழித்துச் சமுத்திர அலை அசைந்தது. எழுந்து வெளியே போய் விட்டது.

ஆறு மணிக்கு அப்பா வந்தார். சமையல் அறைக்கு வந்தார்.

"ஓகோ — நான் வருவேன்னு தெரிஞ்சு போயிட்டுதாக்கும்?" என்று பொதுவாகச் சுவரைப் பார்த்துக் கொண்டு சொன்னார்.

"இந்தக் கிறுதுக்குப் பேச்செல்லாம் வாண்டாம். இன்னிக்கு ரண்டிலே ஒண்ணு தீரணும்" என்றாள் அம்மா.

"அப்படியா?.... என்னத்துக்கு விஜய ராகவன் வெறுமனே நான் இல்லாதபோது வர்றான்?"

"என்னத்துக்கா? சொல்லட்டுமா?"— என்று ஓரே ஒரு வாய்க்கடையால் சிரித்தாள் அம்மா.

"பயமுறுத்தறியே."

"அது உங்க வேலேன்னு. நான் பாடகன் இல்லே, உங்களைக் கண்டு பயப்படறதுக்கு. நீங்கதான் இப்ப பயப்படப் போறேள்."

"சும்மா மிரட்டாதே. அவன் எதுக்கு வரான் அதைச் சொல்லு, கேட்கட்டும்."

"பாஷாங்க ராகத்துக்கு வேற ஸ்வரம் எதுக்கு வரும்?"

"—"

"எதுக்கு வரும்னு கேட்டால் சொல்லுங்க ளேன்."

அப்பா நிமிர்ந்து ஒரு நிமிஷம் பார்த்தார். பார்த்துக் கொண்டேயிருந்தார்.

''சொல்லுங்களேன்.''

''ரக்திக்கு'' என்று மெதுவாகச் சொன்னார் அப்பா.

''இப்ப புரிஞ்சுதா? அந்நிய ஸ்வரம் எதுக்கு வரும்? ராகத்துக்கு ரக்தி கொடுக்க வரும். அதை இன்னும் போஷிக்க வரும். இப்ப நாலு மாசமா குடும்ப போஷணை விஜயராகவன்னாலேதான் நடக்கிறது. நாலு மாசமா நீங்க திங்கற அரிசி, குடிக்கிற காப்பி எல்லாம் அவன் வாங்கிப் போட்டு துன்னோன்..... இந்தனை சாஸ்திரம் படிச்சும் வீட்டிலே இருக்கிற பாஷாங்க ராகமே புரியலே'' என்று அம்மா தோளில் கன்னத்தை இடித்துக் கொண்டாள்.

அப்பா முகத்திலும் தலையிலும் ஓங்கி ஓங்கிப் போட்டுக் கொண்டார். நான் தடுக்கப் போனேன். ''நில்லு'' என்று அதட்டினாள் அம்மா. அப்பா நோக நோகப் போட்டுக் கொண்டுவிட்டு. ''நீ உன் பொண்ணு எல்லாம் பாஷாங்கம்தாண்டி. இராதவி'' என்று பல்லைக் கடித்துவிட்டு மறுபடியும் வாசலுக்குப் போய் விட்டார்.

அப்பாவுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. ''பாஷாங்க ராகம் பாடாதேன். குடும்பத்துக்குக் கெடுதல் — கெடுதல்'' என்று வாசலில் நின்று கூப்பாடு போட்டுக் கொண்டிருந்தார். அழுக்கு வேட்டியைக் கிழித்தும் கொள்ளத் தொடங்கி விட்டார். தற்செயலாக வடக்கேயிருந்து வந்திருந்த அப்பாவின் அத்தான் வீட்டில் இருக்கிற நிலைமையைப் பார்த்தார். அவரை வடக்கே தாம் வேலை பார்க்கிற ஊருக்கே அழைத்துப் போய்விட்டார். மந்திரவாதிகளைக் கூப்பிட்டுப் பார்த்துப் பயனில்லாமல் பைத்திய ஆஸ்பத்திரியில் சேர்த்து விட்டார். அப்பாவுக்குத் தெளியவில்லையாம். பைத்திய ஆஸ்பத்திரியிலேயே ஐந்து வருடங்கள் இருந்து அவர் அங்கேயே இறந்து விட்டதாகத் தெரிந்தது. அப்பாவின் அத்தானுக்கு அவர் மேல் மிகவும் பிரியம். அத்தை பிள்ளைகள் அப்படித்தானிருப்பார்கள். அவர்தான் பத்திரிகைக்கு அவர் காலமான செய்தியைக் கொடுத்திருப்பார் போலிருக்கிறது. எங்களுக்குக்கூட அப்படித் தான் சேதி தெரிந்தது. நீங்கள் போட்ட அனுதாபக் கடுதாசு எங்கெங்கோ சுற்றித் தாறுமாறாக முத்திரை வாங்கிக் கொண்டு முந்தாநாள்தான் வந்தது. அப்பாவை அவர் அத்தான் அழைத்துப் போன அடுத்த மாசமே நாங்கள் பம்பாய் வந்து விட்டோம்.

இத்தனை நீளமாகக் கடுதாசி எழுதின தற்கு மன்னிக்க வேண்டும். மேதைக்கும் பைத்தியத்துக்கும் இடையே உள்ள வரம்புக் கோடு மிக மெல்லியது என்று சொல்லுகிறது வழக்கம். ஆனால் கோடே இல்லாத மாதிரி நீங்கள் குழம்பி விட்டதால் அம்மாவின் உத்தரவுப்படி எழுதினேன். பெற்ற அப்பாவைப் பற்றி இத்தனை கேவலமாக எழுதக் கூடாது. என்ன செய்கிறது? வருத்தமாகத் தான் இருக்கிறது. ஆனால் அந்த அப்பாவிடம் நானும் தம்பியும் பட்ட வேதனை.....

எனக்கு அம்மாவும் வேண்டும். அப்பாவும் வேண்டும். ஒன்றுதான் உருப்படியாக இருந்தது. அது என் தலைவிதி.

இப்படிக்குத் தங்கள்,
**ரகுபதிப்ரியா**

பின்குறிப்பு : அம்மா கோரேகாவிலிருந்து இன்று காலை வந்தாள். இந்தப் பதிலைக் காட்டினேன். அவளும் இரண்டு வார்த்தை எழுத விரும்புகிறாள்.

நமஸ்காரம்..... குழந்தை சொன்னதெல்லாம் சரிதான். ஆனால் பலராமனுக்குச் சித்தம் கலங்குவதற்கு முன்னும் ஒன்று நடந்தது. என் மேல் அவ்வளவு சந்தேகப்பட்டுக் கோபமும் கலக்கமுமாகப் போனவர் சாப்பாட்டுக்கு மட்டும் வேளா வேளைக்கு வந்து கொண்டிருந்தார். பிறகுதான் நான் எழுதி அவருடைய அத்தானை வரவழைத்தேன்.... குழந்தை சொன்னது ரொம்ப சரி. என் மாமனார் செய்த பாபத்தை அவர் தலையில் சுமந்து கொண்டு அலைந்தார். அதற்கு நாங்கள் எவ்வாறு பிணையாக முடியும்?

தங்கள்,
**விஜயா—விஜயராகவன்**



# வீட்டிலோ, வெளியிலோ... ஆயுட்கால ஆனந்தத்தை அளிக்கும் உறுதுணை—பை!

வீட்டிற்குள்ளோ, வெளியிலோ ஒரு பை ரேடியோ எடுத்துச் செல்லுங்கள்! வருடக்கணக்காக உடனிருந்து ஆனந்தமளிக்கும் ரேடியோ, பை! பொருத்தமாக மாட்ச் செய்யப்பட்ட ஒலி அமைப்பின் காரணமாக, பை ரேடியோ, மிகத் தெளிவான ஒலியீட்டைத் தருகிறது. வருடக்கணக்காக அப்பழுக்கற்று இயங்குவதற்கென இதன் ஒவ்வொரு பாகமும் மிக நுணுக்கமாகத் தயாரிக்கப்பட்டிருக்கிறது. பை ரேடியோவின் நவீன சீரமைப்பு (ஸ்டீம்லைண்ட் ஸ்டைலிங்) உங்கள் இல்லத்தை அழகுமிளிரச் செய்கிறது. ரேடியோ மற்றும் டெலிவிஷன் துறையில், சிறந்த அகில உலகப் புகழ்பெற்றது, பை.

உங்கள் அருகாமையிலுள்ள பை வியாபாரியிடம் சென்று பை ரேடியோக்களையும், டிரான்ஸிஸ்டர்களையும் வைத்துக் கேட்டுப் பாருங்கள். நீங்கள் அவற்றை விரும்புவீர்கள்.

மாடல் 3320 போர்டேபிள் ட்ரான்ஸிஸ்டர், 9 டிரான்ஸிஸ்டர் டயோடுகள், 3 பாண்டுகள், அதி நுட்பம் வாய்ந்த ஒலிபெருக்கி, ஃபெர்ரைட் மற்றும் டெலஸ்கோபிக் ஏரியல்கள், 2-டோன் வார்ப்படம் செய்யப்பட்ட காபினெட், எர்த்திங் (நிலத்தொடர்பு) மற்றும் வெளிப்புற ஏரியல்களைப் பொருத்துவதற்கான ஸாக்கெட்டுகள். விலை ரூ. 328/-* தோல் உறை விலை ரூ. 20/- மேலும், டேபிள் டிரான்ஸிஸ்டர்கள், ஏசி மற்றும் ஏசி/டிசி மெயின்கள்.

* விலைகள் கலால்வரி மாத்திரம் அடங்கியவை. விற்பனை வரி மற்றும் இதர உள்ளூர் வரிகள் தனி.

ஏகபோக விநியோகஸ்தர்கள்: **ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையன்ஸஸ் லிட். பை ரேடியோ டிவிஷன்,** பம்பாய், கல்கத்தா, மதராஸ், டெல்லி, பெங்களூர், செகந்திராபாத், பாட்னா.

**பை லிமிடெட்,** கேம்பிரிட்ஜ், இங்கிலாந்து, அவர்களின் சார்பில் லைசென்ஸ் எக்கோ ரேடியோ அண்ட் எஞ்ஜினியரிங் கோ. லிட்., பம்பாய் I அவர்கள் பை ரேடியோக்களைத் தயாரிக்கின்றனர்

Shilpi GRA 286 TAM







# STEPPED STEEL





# TUBULAR POLES

**KALINGA TUBES LTD.**

33. CHITTARANJAN AVENUE,

CALCUTTA—12.

KALPANA.KT.SRG



# ஊர் வம்பு

* தபால் இலாகாவின் தமிழ்த் தொண்டு
* கதர்க் கண்காட்சி

'இம்பர் நாட்டுச் செல்வ' மெலாம் எங்களுக்கு வேண்டாம், 'உம்பர் நாட்டுக் கற்பகக்கா' கூட வேண்டாம்; 'இராமன் திருக் கதையில் கம்பநாடன் கவிதையைக் களிக்கும்' பாக்கியமே வேண்டும் என்று தமிழ் மக்கள் ஏங்குவது கவிச் சக்கரவர்த்தி கம்பரிடம் உள்ள ஈடுபாட்டைக் காட்டுகிறது. இந்தக் கவிச் சக்கரவர்த்திக்குத் தபால் இலாகாவினர். தபால் தலை






வெளியிட்டுத் தேமதுரக் கம்பன் புகழ் உலகமெல்லாம் பரவவகை செய்திருக்கிறார்கள். கம்பர் பிறந்த ஊர், இருந்த காலம், அவரது திருவுருவம் ஆகியவற்றையெல்லாம் தபால் இலாகாவினர் ஆராய்ச்சியாளரைக் கேட்டுத் தெரிந்து வெளியிட்டிருக்கிறார்கள். கம்பர்மேடு அவர் வாழ்ந்த இடம். ஒன்பதாம் நூற்றாண்டு அவர் வாழ்ந்த காலம். ஆமருவிப் பெருமான் கோவிலில் கவிச் சக்கரவர்த்திக்கும் அவரது மனைவியாருக்கும் சிலையெடுத்து வணங்கினர் பண்புடைய தமிழ் மக்கள். இந்தச் சிலையிலிருந்து ஓர் ஓவியர் எழுதிய கம்பர் திருவுருவமே தபால் தலையை அலங்கரிக்கிறது. கம்பரது தலையை வெளியிடுமாறு சென்னை முதன்மந்திரியைக் கோரிய போஸ்ட் மாஸ்டர் ஜெனரல், ''கம்ப ராமாயணம் மற்ற ராமாயணங்களிலிருந்து பிரசித்தியும் மகிமையும் பெற்றிருப்பது கம்பர் பக்தியோடு இயற்றிய பாங்குதான்'' என்று போற்றினார்.

இத்தனை சிறப்பாகத் தபால் இலாகா கம்பனின் நினைவைப் போற்றி விழா நடத்தியதே என்று சந்தோஷப்பட்டுக் கொண்டே மறு நாள் காலையில் தினசரிப் பத்திரிகையைப் புரட்டினால், ஒரு பைசா ஸ்டாம்புகளை அச்சடிப்பதில் தபால் இலாகா ஏற்ற யோசனை இன்றி நடந்து கொண்டதன் விளைவாக மக்களின் வரிப் பணத்தில் ரூ. 90,000 நஷ்டமாகியிருக்கிறது என்ற செய்தி கண்ணில்பட்டுத் தொலைக்கிறதே, என்ன செய்ய?

தமிழ் நாடு சர்வோதய சங்கத்தினர் சென்னை, ஹிந்தி பிரசார சபையில், இரண்டு நாட்கள் கதர் – கிராமக் கைத்தொழில் காட்சி நிகழ்த்தினர். சிதம்பரம் கதர் ஸ்ரீபால கிருஷ்ணபிள்ளை அவர்களது நன் முயற்சியினால், காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் இக்காட்சியைக் காண வந்திருந்தார்கள். பூச்சிகளைக் கொல்லாமல் அஹிம்ஸை முறையில் பட்டு வஸ்திரங்கள் தயாராவதைக் கண்டு மகிழ்ந்தார்கள். அஹிம்ஸையின் உருவமான காந்தியடிகளின் இந்த ஆக்கப் பணி, இயந்திர மயமாக்கும் திட்டங்களைக் காட்டிலும் மனித சமுதாயத்துக்கு எப்படிப் பெருதவி புரியக்கூடும் என்பதை உணர்த்தி, எல்லோரும் ஓய்வு நேரங்களில் நூல் நூற்க வேண்டும். அப்படி நூற்கும் பொழுது ராம நாமம் போன்ற ஆண்டவனின் திருநாமங்களைக் கூறிக் கொண்டே நூற்றால் இரட்டைப் பலன்கள் உண்டு என்றார்கள். காந்தியடிகள் ராமராஜ்யக் கனவு கண்ட நம் நாட்டில், ராமனின் நினைவு நாளான ராமநவமிக்குக்கூட அல்லவா விடுமுறை இல்லாமற் போய் விட்டது என்று வேடிக்கையாகக் குறிப்பிட்டார்கள்.

அறஞ்செய விரும்பு, ஆறுவது சினம் என்னும் முதுரைகளுக்கு அழகான விளக்கம் கூறி இளைய ஸ்வாமிகள், 'அஹிம்ஸையே பெரும் தருமம். அது கைவரக் கோபம் போக வேண்டும். எனவே, கோபத்தை முதலில் அடக்க வேண்டும். அது மற்ற அறங்களை நல்கும்; பொறுமையைப் புகட்டும். அந்தப் பொறுமையைப் பெற நூல் நூற்புத் தொழில் பெரிதும் உதவும்' என்று கனிவுடன் எடுத்துக் கூறினார்கள்.

இரு பெரியவர்களது ஆசியையும் பரிபூர்ணமாகப் பெற்றுள்ள சர்வோதய சங்கத்தின் பணி மீண்டும் நம் நாட்டை அறவழியில் இட்டுச் செல்லும் என்று நம்பலாம். இரண்டு நாட்களுக்கே நடைபெற்ற இக்காட்சியை இன்னும் சில தினங்களுக்காவது நீடித்திருந்தால், மக்களின் மனத்தில் பழைய நல்ல நினைவுகள் துளிர்க்க உதவியிருந்திருக்கும்.



# ராலிஃபேன் உங்கள் இல்லத்தின் எழிலுக்கு எழில் சேர்ப்பது ஏன்?



## ஒரே வார்த்தையில் பதில்— நாகரீகப்பாங்கு!

### அழகு நவீன அமைப்பு

வேறெந்த மின்விசிறியிலும் மேலான மெலிவழகும், நவீனக் கோல வடிவும் உடையது ராலிஃபேன். பெருமையோடு உமதில்லத்திலே வைத்துக் கொள்ள எழில் மயமான மின்விசிறியாகும்!

### வசீகர வர்ணங்கள்

ராலிஃபேன் நாலு வசீகர வர்ணங்களிலே வருகிறது— நீலம், பச்சை, தந்த நிறம், பழுப்புச் சாம்பல் —எந்த அறைக்கும் கண்ணூட்டும் வர்ணங்கள்.

மேலும் கிடைப்பவை: ஒயிலான மேஜை ராலிஃபேன் மற்றும் எக்ஸாஸ்ட் ஃபேன்.

ராலிஃபேன் பற்றிய முழு வர்ணப் பிரசுரத்தினை இலவசமாகப் பெற, இக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்பவும்: ராலீஸ் இந்தியா லிமிடெட், 21, ரேவலின் ஸ்ட்ரீட், பம்பாய்-1.

பெயர்: ______________________

விலாசம்: ______________________

______________________

மறவாதீர்கள்: ஒவ்வொரு ராலிஃபேனும் உற்பத்திப் பழுதின்மைக்கு 2-ஆண்டு உத்தரவாதமுடன் வருகின்றது

குளுமை இன்பத்
தென்றல் தவழவே

# ராலிஃபேன்

ராலி க்ரூப்பின் தயாரிப்பு.



# வெற்றித் திருநகர்

## அகிலன்

### முன் கதைச் சுருக்கம்

மாலிக்காபூரின் படையெடுப்பால் சீரழிந்த தமிழ் நாட்டை அவரது ஆட்களிடமிருந்து மீட்டு, விஜயநகரத்தின் பாதுகாப்பின் கீழ்க் கொண்டு வந்திருந்தார்கள், கிருஷ்ணதேவராயரின் முன்னோர்கள். வெளிப் பகையிலிருந்து பாதுகாக்க விஜயநகரம் இருந்த காரணத்தால், உறையூரிலிருந்து ஆட்சி செய்த சிற்றரசன் வீர சோழன் உட்பகையை வளர்த்துப் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து மதுரையைக் கைப்பற்றிக் கொண்டான்.

நாடிழந்த சந்திரசேகர பாண்டியர் சக்கரவர்த்தி கிருஷ்ணதேவ ராயரிடம் முறையிடுவதற்காக விஜயநகரம் நோக்கிச் செல்கிறார். வழியில் அவரைச் சந்தித்த விஜய நகரத்து வீர இளைஞன் விசுவநாதன் அவரைப் பத்திரமாக விஜயநகரத்துக்கு அழைத்துச் செல்வதற்கான ஏற்பாடுகளைச் செய்து விட்டுத் தான் மட்டிலும் முன்னால் விரைகிறான்.

விசுவநாதனின் தந்தை நாகமநாயக்கர் விஜய நகர சாம்ராஜ்யத்தின் தளதிகாரி. அவர் நண்பர் சாளுவ நரசிம்மரோ அப்போதுதான் அமைச்சராக உயர்த்தப்பட்டவர். வீரரான நாகமநாயக்கருக்குத் தம் நண்பர் சாளுவநரசிம்மரின் விவேகத்தில் மிகுந்த நம்பிக்கை.

விசுவநாதன் தன் உள்ளத்தைச் சாளுவ நரசிம்மரின் குமாரி லட்சுமியிடம் வெகுநாட்களாகவே பறி கொடுத்திருந்தான். அவளுக்கும் இவனிடம் காதல் பிறக்கிறது.

சந்திரசேகர பாண்டியர் வீரசோழனைப் பற்றிச் சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயரிடம் முறையிடுகிறார். தெற்கே தோன்றிய உட்பகையை அடக்கிப் பாண்டிய நாட்டை வீரசோழனிடமிருந்து மீட்டுச் சந்திரசேகரபாண்டியரிடம் கொடுத்து வரும்படி விசுவநாதனின் தந்தை நாகமநாயக்கரை மதுரைக்கு அனுப்பி வைக்கிறார்.

வடக்கே பாபரை முறியடிப்பதற்காகத் தமது அண்டை நாடுகளான பாமினி நாடுகளை ஒன்று திரட்ட முயல்கிறார் சக்கரவர்த்தி. அவருடைய அமரநாயக்கர்களே அந்த முயற்சி வெற்றி பெறாத படி செய்து விடுகிறார்கள். அதனால் மனம் வருந்திய சக்கரவர்த்தி தாமே தனியாக வடக்கே படை நடத்திச் செல்ல நினைத்த சமயத்தில் பாபர் டில்லியைக் கைப்பற்றி அதன் சுல்தானைக் கொன்றுவிட்டார் என்ற செய்தி கேட்டு அதிர்ச்சி அடைகிறார். அந்த அதிர்ச்சியோடு அவர் குதிரையில் விரைந்து குன்றுகளிடையே சென்ற போது, குதிரையிலிருந்து விழுந்து விபத்துக்குள்ளாகிறார்.

அதுவரையிலும் கிருஷ்ணதேவ ராயரின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக விளங்கி வந்த நாகம நாயக்கர் சாளுவரின் அரசியல் சூழ்ச்சிக்குப் பலியாகிறார். தம்முடைய குமாரன் மீது அவர் கொண்ட பாசம் அவர் கண்களை மறைக்கிறது. விசுவநாதன் தமிழ் நாட்டில் தனி ஆட்சியை நிலைநாட்டி அரசாள வேண்டும் என்பதற்காக, நாகமநாயக்கர் சக்கரவர்த்தியின் ஆணையை மீறிச் சந்திரசேகர பாண்டியரிடம் ஆட்சியை ஒப்புவிக்க மறுக்கிறார். சந்திரசேகர பாண்டியர் மீண்டும் விஜயநகரத்துக்கு வந்து நாகமநாயக்கரின் துரோகத்தைச் சொல்லி முறையிடுகிறார்.

சக்கரவர்த்தி சபை கூட்டுகிறார். நாகமர் மீது படையெடுத்துச் சென்று அவரைக் கொன்று விட்டோ, சிறைப்படுத்தியோ நாட்டை மீட்டுப் பாண்டியரிடம் கொடுக்கக் கூடிய அமரநாயக்கர்களை முன்வரும்படி கூறுகிறார்.

அப்போது தன் தந்தையாரோடு போரிடச் செல்வதற்கு விசுவநாதனே முன்வருகிறான்.

விசுவநாதன் படை மதுரைநகர் நோக்கி விரைகிறது. முதலில் அவன் அரியநாதமுதலியாரை அனுப்பிச் சமாதானத்துக்கு வழி தேடுகிறான். கடைசியில் போர்முனையில் தந்தையும் தனயனும் சந்திக்கின்றனர். என்ன நடக்குமோ? மேலே படியுங்கள்.

## அத்தியாயம் பத்து

## போரின் முடிவு

வைகை நதியின் இருபுறத்துக் கரைகளிலும் பொங்கும் வெள்ளமெனப் படைகள் குவிந்திருக்க, அவற்றை நடத்தி வந்த தலைவர்களான விசுவநாதனும் நாகமநாயக்கரும் இடையில் எதிரெதிரே நின்று, ஏதுமறியாது தவித்துக்கொண்டிருந்தனர். அவர்கள் மட்டிலும் வாளோடு வாள் மோத விட்டிருந்தால் மறு கணமே அந்த ஆற்றங்கரை படுகளமாக மாறியிருக்கும். ஆற்றிலும் அப்போது நீர்ப் பெருக்கில்லை. அதற்குப் பதிலாக அங்கே குருதி வெள்ளம் கரை புரண்டு ஓடத் தொடங்கியிருக்கும்.

''விசுவநாதா!'' என்று நாகம நாயக்கர் அழைத்த அந்த மந்திரச் சொல்லால் விசுவநாதன் அப்படியே கட்டுண்டு கிடந்தான். அதிலிருந்து மீண்டு விடுவதற்காக அவன் உள்ளம் துடிதுடித்துக் கொண்டிருந்தது.

பகை வீரனைச் செயலிழக்கச் செய்வதற்காகப் பழங்காலத்துப் போர்க்களங்களில் இப்படிச் சில அஸ்திரங்களைப் பிரயோகம் செய்வார்களாம். 'அப்படிப்பட்ட மாய அஸ்திரமா அந்தச் சொல்?'

விசுவநாதன் தன் வீரர்களைத் திரும்பிப் பார்த்தான். அவர்கள் போர்வெறி கொண்டு அவனுடைய ஆணைக்காகக் காத்திருந்தார்கள். காஞ்சி நகர்க் கோயிலில் தான் வழிபட்டு வந்த இறைவனைத் தியானித்துக் கொண்டு, ''இது போர்க்களம்! சாம்ராஜ்யத்தின் ஊழியன் என்ற முறையில் அதன் பகைவரோடு போரிட வந்திருக்கிறேன்'' என்று தனக்குள் கூறிக் கொண்டு,

"தொடங்குவோம், போரை!" என்று முழங்கியவாறே வாளை உருவினான்.

நாகமநாயக்கரின் முகம் திடீரென்று மாறியது. குரூரமாக அவர் விசுவநாதனை உற்று நோக்கவே, அவரது தேகம் முழுவதும் பதற்றம் கண்டது. தம்மையறியாமல் அவர் அடிபட்ட வேங்கையாக மாறிக் கொண்டு வந்தார். அவரது வலது கரமும் உடைவாளின் பிடியை இறுகப் பற்றியது.

அப்போது நிதானமாக அவர்களுக்கருகே வந்து நின்று, "ஒரு வேண்டுகோள்! தங்கள் இருவரிடமும் ஒரு வேண்டு



கோள்!" என்று கேட்டுக் கொண்டார் அரியநாத முதலியார்.

"என்ன?" அதட்டும் குரலில் கேட்டார் நாகம நாயக்கர்.

"போர் நடப்பதை நான் தடுக்கவில்லை; தவிர்க்க முடியாதென்றால் அது நடந்துதான் தீர வேண்டும். ஆனால் போர் நடத்தும் முறையைப் பற்றி ஓர் ஆலோசனை கூற அனுமதிக்க வேண்டும்."

முதலியார் கூறலானார்:

"வீரர்களில் பெரும்பாலோர் உற்றார் உறவினர்கள். நாம் எல்லாருமே விஜயநகரத்தைச் சேர்ந்தவர்கள். இதுவே பெரும் போராக மூண்டு விட்டால், எண்ணற்ற வீரர்கள் களத்தில் தங்களைப் பலி கொடுக்க வேண்டிய நிலை ஏற்படும். ஒவ்வொரு குடும்பமும் பகை உணர்ச்சியால் சீரழியத் தொடங்கும். ஆகவே, தாங்கள் இருவர் மட்டுமே வாட் போர் செய்து, அதன் முடிவை ஏற்றுக் கொள்வதாக இருந்தால் அழிவுகள் குறையும். இது போன்ற நிகழ்ச்சிகளை முன்பு நம் சக்கரவர்த்திகளும் ஆதரித்திருக்கிறார்."

"அதற்கு நான் சித்தமாக இருக்கிறேன்!" என்று உறுமினார் நாகம நாயக்கர்; "இவன் உடன்படுகிறானா என்று கேளுங்கள்!"

விசுவநாதன் உடனடியாகப் பதிலளிக்கவில்லை. அவன் யோசனை செய்தான். பெரும் போர் நடத்துவதைவிட முதலியாரின் இந்த ஆலோசனை அவனுக்குப் பெரியதொரு சோதனையாகவே தோன்றியது.

"ஆமாம், இந்த ஆலோசனையை இவன் ஏற்றுக்கொள்ளுவதானாலும் எனக்குத் தடையில்லை" என்றார் நாகமநாயக்கர்; "போரின் முடிவை இவன் மட்டுமல்ல, இவனுடைய சக்கரவர்த்திகளும் ஏற்றுக் கொள்ள வேண்டும். என்றோ ஒரு நாள் இருட்டு நேரத்தில் தலைநகரத்தின் எல்லையில் நடைபெற்ற வாள்

விச்சாக இது இருக்காது. இதில் இவன் தோற்றுவிட்டால், இவனும் இவனுடைய படை வீரர்களும் — ஏன் நீங்களும்கூட — என்னிடம் சரணடைந்துவிட வேண்டும்!''

நாகமநாயக்கர் அப்போதே தமக்கு முழு வெற்றியும் கிடைத்து விட்டது போல் அவ்வளவு நம்பிக்கையோடு பேசினார். விளையாட்டுப் போரில் முன்பு நாம் அலட்சியமாக நடந்து கொண்டதால் விசுவநாதன் வெற்றியடைந்து விட்டானென்று தோன்றியது. ஆகவே, இம்முறை விழிப்போடு வாள் வீசினால் வெற்றி தமக்கே கிடைக்கும் என்ற உறுதி பிறந்து விட்டது அவருக்கு. மேலும் அவர் எதிர்பார்த்தபடி சேரநாட்டு உதயமார்த்தாண்டன் உதவியோடு வராததால், இதை அவர் தமக்குக் கிடைத்த வாய்ப்பாகவே கருதினார்.

விசுவநாதன் மறுமொழி கூறத் தயங்கியதால், ''என்ன சொல்லுகிறாய்? அஞ்சுகிறாயா?'' என்று நேரடியாகவே அவனிடம் கேட்டார். ''தோற்றால் உனக்கு ஒன்றும் இழுக்கு நேர்ந்து விடாது. என்னிடந்தானே தோல்வி பெறுகிறாய்?''

''தங்கள் சித்தம்! ஆனால் தோல்வி தங்கள் பக்கமிருந்தால், தாங்களும் படைகளோடு சக்கரவர்த்திகளிடம் சரணடைந்து விட வேண்டும்'' என்றான் விசுவநாதன்.

தன்னிடம் சரணடைய வேண்டுமென்று கூறாமல் சக்கரவர்த்திகளிடம் சரணடைய வேண்டுமென்று அவன் கூறிய பண்பு அவரையே ஒரு கணம் ஆட்டிப் படைத்து விட்டது.

''தோற்றால்தானே?'' என்று கூறி நகைத்தார் நாகம நாயக்கர்.

போர் புரிய வந்த வீரர்களிடம் செய்தி பரவியவுடன், அவர்கள் போர் உணர்ச்சியை மறந்துவிட்டு, வேடிக்கை பார்க்க வந்தவர்களாக மாறினார்கள். நெருக்கு நேர் நிற்க வந்தவர்கள் பெரியதொரு வட்டம் அமைத்துக் கொண்டு நெருங்கி நிற்கத் தலைப்பட்டனர். வெளிப்படையான பெரும் போர்க்களமாக அது மாறாவிட்டாலும் வீரன் ஒவ்வொருவனும் தன் தலைவரின் வெற்றியில் நாட்டம் கொண்டு உணர்ச்சிவயப் பட்டிருந்தான்.

தொடங்கியது வாட்போர்: இரண்டு மின்னல்கள் எதிரெதிராக நெளிந்து, சரேலெனப்



பாய்ந்து. ஒன்றன்மீது ஒன்று மோதி இடிகளாக இடித்தன. தீப்பொறிகள் சிதறி விழுந்தன.

நாகம நாயக்கர் இப்போது பல முறை பகைவர்களிடம் தமக்கு வெற்றி தேடித் தந்த அந்தப் போர்த் தந்திரத்தைக் கையாண்டார். எடுத்த எடுப்பிலேயே பகைவனுக்கு மோதி அச்சமூட்டும் வகையில் பாய்ந்து, மூர்க்கத்தனமாக அவனிடம் மோதி, அவனது உள வலிமையைச் சிதற அடிக்கும் முறை அது. முதல் தாக்குதலிலேயே அவருக்கு எப்போதும் பாதி வெற்றி கிட்டி விடுவது வழக்கம். அவ்வளவு கொடுமையாக அவன் மீது பாய்ந்து விடுவார். அவரது விழிகள், வீச்சுக்கள், அங்க அசைவுகள் யாவுமே எதிர்த்து நிற்போரைக் கலகலக்க வைத்து விடுவது உண்டு.

இப்போதும் அதே முறையைத்தான் அவர் கையாண்டார். விசுவநாதனே அவரை அந்தக் கோலத்தில் அதற்கு முன்பு கண்டதில்லை. அவனைக் கண்டதுண்டமாக வெட்டிப் போட்டுக் கழுகுகளுக்கு உணவாகப் போடும் ஆவேசம் அது. 'போர் என்று வந்து விட்டால் அவர் தம்மை அறவே மறந்து விடுவார்' என்று விசுவநாதன் பலர் சொல்லக் கேள்வியுற்றிருக்கிறான். அந்தக் கூற்று மெய்யாகி விட்டது. அவர் தம்மை மறந்தாரே தவிர, தம்முடைய தற்காப்பையும் மறக்கவில்லை; வெற்றியையும் மறக்கவில்லை.

தோற்றத்தில் அவர் மெலிந்தது கண்டு அவர் மீது அநுதாபம் கொண்டது எவ்வளவு தவறு என்பதை நொடிப்பொழுதில் கண்டுகொண்டான் விசுவநாதன். அவருடைய சக்தி முழுதும் அப்போது அவரது வலது கரத்துக்குத் திரண்டு வந்துவிட்டது. அயராமல், சளைக்காமல், கண்ணிமைக்காமல் அவர் முன்னேறி வந்து வாள் வீசினார்.

தொடக்கத்தில் விசுவநாதன் தடுமாறி விட்டான். அவனுடைய தற்காப்பே அவனுக்குப் பெரும் பாடாகப் போய்விட்டது. நாகம நாயக்கரின் ஒவ்வொரு வீச்சுக்கும் அவருடைய வீரர்களின் பக்கத்திலிருந்து எக்காளம் எழுந்தது. மேலும் மேலும் முன்னேறித் தாவி வந்து, அவனைப் படாத பாடு படுத்தி வைத்தார் நாகம நாயக்கர். விசுவநாதனின் வீரர்கள் சோர்ந்து போய்த் தலை கவிழ்த்துக் கொண்டார்கள். விசுவநாதனை அவனுடைய தந்தையின் வாள் வீச்சு ஒரு புறமும் அவரைச் சார்ந்தவர்களின் வாய் வீச்சு மறுபுறமும் கூர்முனைகளாய்க் குத்தத் தொடங்கின.

நாகமரின் வாள் முனையைத் தடுத்துக் கொண்டிருந்த அதே நேரத்தில், அவன் தன்னுடைய சிந்தனை முனையையும் கூராகத் தீட்டிக் கொண்டு வந்தான். எதிர்ப்புறத்து எக்காளங்களும், ஏச்சுக்களும், கூச்சல்களும் சேர்ந்து அவனுடைய சிந்தனைக் கூர்மைக்கு உரைகல்லாக அமைந்தன.

திடீரென்று அவருக்குப் போக்குக் காட்டி, எந்த விநாடியிலும் தனக்குத் தோல்வி ஏற்படலாம் என்பது போல் ஒரு நிலையை ஏற்படுத்தினான். அரியநாத முதலியாருக்கே அப்போது அந்த நிலையைத் தாங்க முடியவில்லை. அப்படி ஓர் ஆலோசனையை வெளியிட்டதற்காக அவர் தம்மையே நொந்து கொண்டார். நாகம நாயக்கருக்கு மற்றொரு வகையில் விசுவநாதன் மீது அளவற்ற ஆத்திரம் ஏற்பட்டது. அவன் முன்னேறித் தாக்கவில்லையே தவிர, ஒரு வீச்சுக்கூடத் தன்னைத் தாக்காத முறையிலல்லவோ தடுத்துக் கொண்டு வருகிறான்!

'இனி அவனை விட்டுப் பயனில்லை' என்று தமது எஞ்சிய சக்தி முழுவதையும் திரட்டிக் கொண்டு, அவனை விரட்டி விரட்டியடித்தார் நாகமநாயக்கர். அவரது தேகத்தில் வைகை நதி புகுந்து விட்டது போல் மயிர்க்கால்கள் வழியே வேர்வை கொட்டியது. மேல்மூச்சுக் கீழ்மூச்சு வாங்கத் தொடங்கினார் நாகமநாயக்கர்.

சரேலென்று முன்னேறி அவரைத் தாக்கி, அது வரையில் நிலவிய போக்கை அவருக்கு எதிராகவே திருப்ப முனைந்தான் அவன். அவரைக் களைப்படையச் செய்வதற்காக அவன் செய்த சூழ்ச்சி நாகமருக்கே அப்போது தான் புலப்பட்டது. தம்மைக் காத்துக் கொள்ளும் நிலைக்கு அவர் வந்து கொண்டிருந்தார்.

''தாங்கள் களைத்து விட்டீர்கள்; போரை நாளைக்குத் தொடர்ந்து நடத்தலாமா ?'' என்று கேட்டான் விசுவநாதன்.

''நீ உன்னை இராமன் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய் போலிருக்கிறது! இராமன் தசரதனிடம் போர் புரியவுமில்லை. 'இன்று போய் நாளை வா' என்று நீ சொல்லும்படி நான் இராவணனுமல்ல'' என்றார் நாகம நாயக்கர்.

## அத்தியாயம் பதினொன்று

# குணக் குன்றேறினான்

நாகம நாயக்கருக்கே வெற்றி கிடைக்கும் என்று அதுவரையில் நம்பச் செய்த சூழ்நிலை திடீரென விசுவநாதனுக்குச் சாதகமாகத் திரும்பவே, அது வரையில் சோர்ந்து போயிருந்த அவனுடைய வீரர்கள் ஆனந்த ஆரவாரம் செய்யத் தொடங்கிவிட்டார்கள்.

விசுவநாதனுக்கு அவனுடைய வீரர்களின் செய்கை ஆத்திரமூட்டியது. தந்தைக்கெதிராக வாளைச் சுழற்றி வீசியபடியே, அவனுடைய வீரர்கள் பக்கம் திரும்பித் தன் விழிகளால் ஆணையிட்டான். ஆரவாரம் அடங்கியது. முழு மூச்சோடு நாகம நாயக்கர் மீது பாயத் துணிந்து விட்டான்.

நாயக்கர் இளைத்தார்; தடுமாறினார்; என்றாலும் தமது பிடியை நழுவ விடவில்லை. பிடிவாதத்தை நழுவ விடவில்லை.

எப்படி அது நடந்ததென்றே யாருக்கும் தெரியவில்லை. எல்லாமே மின்வெட்டும் நேரத்தில் நடந்து முடிந்து விட்டன. அவருடைய மணிக்கட்டில் பாய்ந்த விசுவநாதனின் வாள் வீச்சு, அவர் வாளைக் கீழே நழுவவிட்டு விழச் செய்தது. அவருடைய தோளில் அவன் வாள் முனை பாய்ந்து, அங்கிருந்து செங்குருதி கொட்டியது. — நாகம நாயக்கர் தரையில் சரிந்து விழுந்தார்.

தன் கைவாளையும் அதோடு வீசி எறிந்து விட்டு, ''அப்பா!'' என்று கதறியபடியே அவர்மேலே விழுந்து விம்மினான் விசுவநாதன். இடதுபுறத் தோளில் அவருக்கு ஏற்பட்டிருந்த விழுப்புண் மிகவும் ஆழமான புண்தான். சற்று விலகி அவன் வாள் பாய்ந்திருக்குமானால், அதோடு அவர் உயிரும் பறந்திருக்கும்.

நினைவிழந்து, செயலிழந்து, ஆற்று மணலில் ரத்தம் பெருக்கெடுத்தோடக் கிடந்தார் நாகம நாயக்கர். விசுவநாதனின் கண்ணீரும் நாகம நாயக்கரின் செங்குருதியும் ஒன்று கலந்தன. சில விநாடிகளுக்குப் பிறகு நாகம நாயக்கர் மெல்லத் தம் விழிகளைத் திறந்து விசுவநாதனின் முகத்தை உற்று நோக்கினார். அவருடைய வலது கரம் அன்பின் மேலீட்டால் அவன் கழுத்தை வளைத்தது.

''மகனே! உன் வெற்றியை நான் வாழ்த்துகிறேன்!'' என்று ஆனந்தக் கண்ணீர் பொங்க அவனை வாழ்த்தினார். மெல்லத் தம் விழிகளால் அவனுடைய கண்ணீரைத் துடைத்தபடியே புன்னகை பூத்தார்.

மதுரை அரண்மனைக்கு அவரைத் தூக்கிச் சென்றார்கள். துரிதமாகச் சிகிச்சைகள் நடைபெறுவதற்கு ஏற்பாடு செய்தான் விசுவநாதன். உயிருக்கு அபாயமில்லை என்று கூறினார்கள் மருத்துவர்கள். அவருக்கென்று ஒரு தனி மாளிகையை ஒதுக்கி, அவர் உடல் நலம் தேறுவதற்காக எல்லா வசதிகளையும் அவன் செய்து கொடுத்தான். அதே சமயம் அவனுடைய வீரர்கள் அந்த மாளிகையைச் சுற்றிலும் காவலுக்கு நிறுத்தப்பட்டிருந்தனர். — நாகம நாயக்கர் சிறைப்படுத்தப் பட்டிருந்தார்.

பாண்டிய நாட்டின் நிலையைத் தெரிந்து கொள்வதற்காகப் பலரிடம் ஆலோசனைகள் நடத்தினான் விசுவநாதன். மதுரை நகரத்தையும் அதன் சுற்றுப்புறங்களையும் அரியநாத முதலியாரோடு சுற்றிப் பார்த்து வந்தான். நாட்டின் வட பகுதியில் நிலவிய வாழ்க்கையைப் படையெடுத்து வந்த போதே அவன் கவனித்து வந்திருந்தான். பொதுவாகத் தமிழ் நாடு முழுதுமே அப்போது சரியான ஆட்சி முறை இல்லாததனால் தத்தளித்துக் கொண்டிருந்தது. தென்பாண்டிப் பகுதியில் தென்காசியிலிருந்து ஆட்சி நடத்திய திருவல்லபன் மட்டிலும் ஓரளவு அமைதியையும் செழிப்பையும் அங்கே கண்டிருந்தான்.

சந்திரசேகர பாண்டியர் நல்ல பண்புகள் கொண்டவராக இருந்தும் வலிமையற்றவர் என்பது அவனுக்கு விளங்கி விட்டது. நாடாளும் பொறுப்புகளை ஏற்றுத் துணிவோடு செயல் புரியக் கூடிய ஆற்றல் அவருக்கில்லை. அவருக்குப் பின் ஆட்சிப் பொறுப்பேற்கக் கூடிய குமாரராகனும் அவருக்குப் பிறக்கவில்லை. இந்தக் காரணங்களையெல்லாம் பாண்டிய நாட்டில் அங்கங்கே சிற்றரசர்களின் நிழலில் வாழ்ந்தவர்கள் நன்றாகத் தெரிந்து கொண்டிருந்தார்கள். தெற்கே கயத்தாற்றில் வாழ்ந்த ஐந்து சகோதரர்கள் தங்களைப் பஞ்ச பாண்டியர் எனக் கூறிக் கொண்டு சந்திரசேகரருக்கு எதிராகத் திரண்டிருந்தார்கள். பரமக்குடியில் ஆட்சி செய்த தும்பிச்சி நாயக்கரும் பாண்டியருக்கு அடங்க மறுத்தார். இவ்வாறு நாடெங்கும் பரவியிருந்த சிறு தலைவர்கள் தங்கள் மனப் போக்குப்படி யெல்லாம் நடந்து கொள்ளத் தலைப்பட்டிருந்தார்கள்.

உட்பகை, பொறாமை, செருக்கு இவை அங்கே தலைவிரித்தாடின. சிறியோர் தங்களைப் பெரியோராக நினைத்துக் கொண்டு மக்களைத் துன்புறுத்தி வந்தனர். நாட்டின் எல்லைப் பகுதிகளில் கள்வர் பயம் தலைவிரித்தாடியது. உழவும் செழிக்கவில்லை; வாணிபமும் வளர்ச்சியுறவில்லை.—'இவ்வளவு தொல்லைகளையும் முறியடித்து நாட்டில் நல்லாட்சியை நிலைநிறுத்தும் ஆற்றல் சந்திரசேகர பாண்டியருக்கு இருக்கிறதா?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டான் விசுவநாதன்.

பிறகு அவரையே நேரில் அழைத்து வைத்துக்கொண்டு பேசினான்:

''இங்கு உள்ள நிலைமையைத் தெரிந்து கொண்டுதான் நான் பேசுகிறேன். இங்கே நல்லாட்சி நிலவவில்லை. தங்களுடைய சிற்றரசர்கள் தங்களுக்கு அடங்கி நடக்கவில்லை. அதோடு அவர்கள் மக்களுக்காவது ஊழியம் செய்து, அவர்களை நன்றாக வாழ வைக்கிறார்களா என்றால் அதுவும் இல்லை. குடி மக்கள் அனைவரும் தங்களுக்கு ஊழியம் செய்யப் பிறந்தவர்கள் என்ற செருக்கோடு நடமாடுகிறார்கள். இவர்களை அடக்கி ஒடுக்கி ஓர் ஒழுங்கும் கட்டுப்பாடும் இங்கு நிலவச் செய்ய வேண்டும். குடிமக்களுக்கு ஊழியம் செய்வதே அரசின் கடமை என்ற இலட்சியமுள்ள சக்கரவர்த்தியின் ஊழியன் நான். தங்கள் விருப்பப்படி நாட்டை மீட்டு விட்டேன். — இதைத் தங்களால் ஆட்சி செய்ய முடியுமா?''

சந்திர சேகர பாண்டியர் திகைத்தார். தம்மை விட வயதில் இளையவனாகிய விசுவநாதன் நாட்டுக்கு வந்து சில தினங்களே நடமாடியவன், அதற்குள் அதன் நிலையை உணர்ந்து கொண்டான். அவருக்கே அதைச் சுட்டிக் காட்டி, அவரிடமிருந்தே அதற்கு விடையும் கேட்டுவிட்டான். (தொடரும்)

பொன் மொழி :

கோபக்காரன் மீண்டும் தன் பேரிலேயே கோபம் கொள்ள வேண்டியதாகிறது, புத்தி தெளிவு ஏற்பட்ட போது!

ஓர் அறிஞர்:



# சந்துருவுக்கு ஒரு வழி

பி.எஸ். ராமையா

'உனக்கு அவரை நன்றாகத் தெரியுமாமே, அண்ணா! அவரிடம் சொல்லிச் சந்துருவுக்கு ஒரு வழி செய்யக் கூடாதா நீ?'' என்று கனிவுடன் கேட்டாள் என் உடன் பிறந்தாள்.

சந்துருவும் ''நீங்கள் சொன்னால் நிச்சயமாக நடந்து விடும், மாமா. அவருக்கு உங்களிடம் அவ்வளவு மதிப்பு. அவருடைய மகன் கோபுவே சொல்லியிருக்கிறான்'' என்றான். அவன் தொடர்ந்து, ''புதிதாகத் தொடங்கியிருக்கும் ஒரு கம்பெனியிலும் அவர் ஒரு டைரக்டர். அந்தக் கம்பெனிக்கு இப்போது தான் ஆள் சேர்க்கிறார்கள். அவர் ஒரு வார்த்தை சொன்னால் உடனே வேலையாகி விடும்'' என்றான்.

திரு ஜகந்நாதனை எனக்கு நன்றாகத் தெரியும். அவர் என்னிடம் பழகும் முறையைக் கண்டு நானே கூச்சப்பட்டிருக்கிறேன். என்னை யாரோ ஓர் உயர்ந்த பிறவியாகக் கருதுவது போலப் பேசுவார், நடந்து கொள்வார். ஆனால் அவர் வைத்திருக்கும் அந்த மதிப்பில் அவரிடம் போய் என் மருமகனுக்கு ஒரு வேலை போட்டுக் கொடு என்று கேட்பதற்கு இடமுண்டா என்றுதான் தயங்கினேன்.

ஜயத்தின் குடும்ப நிலைமை மனத்தைக் கலக்குவதாக இருந்தது. அவளுடைய கணவர் காலமான போது, ''சந்துரு பி. எஸ்ஸி. படிக்கிறான். இன்னும் ஒரு வருஷத்தில் முடித்து விடுவான். அவன் மாதம் இருநூறு ரூபாய் சம்பாதிக்காமலா இருந்து விடுவான்? அவள் காலம் நிம்மதியாக ஓடிவிடும்'' என்றுதான் கருதினேன்.

ஆனால் மகாதேவன் காலமாகிப் பதினைந்து நாட்களானவுடன் அவருக்கு நிறையக் கடன்தான் இருக்கிறது. பையன் படிப்பைக்கூட முடிக்க இயலாது என்று அறிந்து அதிர்ச்சி அடைந்தேன். என் சொந்தக் குடும்பச் சுமையுடன் அந்தக் குடும்பத்தின் சுமையையும் நானே ஏற்றுக் கொண்டேன். சந்துரு பி. எஸ்ஸி.யை முடித்து வர வழி செய்தேன்.

அவன் படிப்பை முடித்து மூன்று ஆண்டுகளாகி விட்டன. இன்னும் அவனுக்கு ஒரு வேலை குதிர்ந்து வரமாட்டேன் என்கிறது. இடையில் இரண்டு தடவைகள் ஏதோ வேலைகளில் சேர்ந்தான். இரண்டும், 'டெம்ப்ரரி'. நூறோ இருநூறோ பணத்துடன் வீட்டுக்குத் திரும்பி விட்டான்.

அவனுக்கு நிலையான வேலை ஏதாவது கிடைத்தால் என் உடன்பிறந்தாள் நிலைமை திருந்திவிடும் என்பதைவிட என்னை அழுத்திக் கொண்டிருந்த பெரும் பளுவில் பாதி இறங்கி விடுமே என்ற எண்ணம்தான் என்னைத் திரு ஜகந்நாதனிடம் போய்க் கேட்டு விடுவது என்ற முடிவுக்குக் கொண்டு வந்தது.

சந்துருவையும் அழைத்துக் கொண்டு போனேன். போகும் வழியில் அவன், ''கோபு என்னுடன் கல்லூரியில் படித்த போது அவனுடைய தந்தைக்கு என் அப்பாவைப் பற்றித் தெரியும் என்று சொல்லி யிருக்கிறான். ஆனால் எப்படி என்ற விவரம் அவனுக்குத் தெரியவில்லை. ஏதோ பேச்சில் என்னைப் பற்றிச் சொன்னபோது அவர், 'யார் அவன் சந்துரு?' என்று கேட்டாராம். அவன் அப்பா பேரைச் சொல்லி 'அவருடைய மகன்' என்றானாம். அவர் 'எந்த மகாதேவன்? சங்கிலிபுரம் மகாதேவனா?' என்று கேட்டாராம். அவன் ஆம் என்றவுடன், அவர் 'மகாதேவனுக்குக் கல்லூரியில் படிக்கும் மகன் இருக்கிறானா?' என்று கேட்டாராம். இப்போது நீங்களும் சொன்னால் அவர் கட்டாயம் உதவி செய்வார் என்றுதான் படுகிறது'' என்றான்.

நாங்கள் போனபோது திரு ஜகந்நாதன் பங்களாவில்தான் இருந்தார். பெரிய பங்களா. முன்னால் விசாலமான தோட்டம். நவீன பாணியில் பல நிற கிட்டிகளைக் கொண்டு ஆக்கப்பட்ட கட்டிடம்.

முன் வாயில் தாழ்வாரத்தை அடைந்தவுடன் என்னை நன்றாக அறிந்திருந்த அவருடைய காரியதரிசி ராமதாஸ் மலர்ந்த முகத்துடன் வந்து, ''வாருங்கள். இருக்கிறார். வெளியே புறப்பட இன்னும் அரை மணி நேரமாவது ஆகும். நீங்கள் வந்திருக்கிறீர்கள் என்று சொல்லுகிறேன்'' என்று பேசிக் கொண்டே வந்தவன் என்னுடன்



சிறப்புச் சிறுகதை

திரு ஜகந்நாதனை எனக்கு நன்றாகத் தெரியும். அவர் என்னிடம் பழகும் முறையைக் கண்டு நானே கூச்சப்படுகிறேன். என்னை யாரோ ஓர் உயர்ந்த பிறவியாகக் கருதுவது போலப் பேசுவார், நடந்து கொள்வார்.......

இப்போது நான்தான் அவரை ஓர் உயர்ந்த பிறவி, எனக்குக் கிடைக்க முடியாத நட்பு என்று கருதி அவருடன் பழகுகிறேன், அவரிடம் பேசுகிறேன்........

இருந்த சந்துருவைப் பார்த்த வுடன், ''என்ன விஷயமாகப் பார்க்க வந்திருக்கிறீர்கள் என்று சொன்னால் நல்லது'' என்றான். அவன் முகமலர்ச்சியும் மாறி விட்டது.

''இது என் உடன் பிறந்தாள் மகள் சந்திரமௌலி. அவரைப் பார்க்க வந்திருக்கிறேன் என்று மட்டும் சொல்லுங்கள்'' என்றேன் நான்.

ராமதாஸ் எங்களை முன் தாழ்வாரத்திலேயே உட்கார்ந் திருக்கச் சொல்லிவிட்டு உள்ளே போனான். நான் சந்துருவிடம், ''ராமதாஸைக்கு உன்னைத் தெரி யுமா?'' என்று கேட்டேன். அவன் தெரிந்திருக்க இடமே இல்லை என்றான்.

இரண்டு நிமிஷங்களில் திரும்பி வந்து ராமதாஸ் ''வாருங்கள்'' என்று எங்களை மாடிக்கு அழைத் துக் கொண்டு போனான்.

நான் அந்தப் பங்களாவுக்கு எத் தனையோ தடவை போயிருக்கி றேன். ஆனால் அதற்கு முன் ஒரு தடவைகூட அங்கே பளிச்சிட்டுக் கொண்டிருந்த செல்வச் செழிப்பு என் மனத்தில் பதியவேயில்லை.

திரு ஜகந்நாதன் தொழில் வர்த்தகத் துறையில் மிக மிக உயர்ந்த எல்லையை எட்டிப் பிடித்திருப்பவர் என்பது எனக்கு மிக நன்றாகத் தெரியும். எட்டுக் கம்பெனிகளில் அவர் டைரக்டர். இரண்டில் டைரக்டர் போர்டின் தலைவரும்கூட. ஒரு தடவை என்னிடம் பேசிக் கொண்டிருந்த போது அவர் லட்சக் கணக்கில் வருமான வரி கட்ட வேண்டியிருந்ததைப் பற்றியும் பேசியிருக்கிறார்.

அன்று சந்துரு என் உடன் இருந்ததனாலோ, அல்லது அவனுக்கும் அவன் தாய்க்கும் தேவையான மாதம் இரண்டு அல்லது மூன்று நூறு ரூபாய்களைப் படியளப்பது திரு ஜகந்நாதனுக்கு ஒரு பெரிய பாரமாக இருக்குமா என்ற எண்ண ஓட்டத்தின் பயனாகவோ அவருடைய இல்லத்தில் தாண்டவமாடிய செல்வத்தின் ஒளி என் கண்களைக் கூச வைத்தது.

திரு ஜகந்நாதன் வழக்கம் போல் ரொம்ப மரியாதை யுடனும் மகிழ்ச்சியுடனும் எங்களை வரவேற்று, ''ஒரு பத்து நிமிஷத்துக்கு முன்னால் வந்திருக்கக் கூடாதா? இருவரும் சேர்ந்து பலகாரம் சாப்பிட்டிருக்கலாமே. முதலில் அந்த வேலை முடியட்டும். உட்காருங்கள்'' என்று உபசரித்தார்.

நாங்கள் உள்ளே நுழைந்தபோது அவருடைய பார்வை சந்துருவின் புறம் ஒருமுறை ஓடித் திரும் பியது. அதன் பிறகு நாங்கள் காப்பியை முடிக்கும் வரையில் அவர் அவன் பக்கம் பார்க்கவேயில்லை.

அந்த உபசரிப்பு நிறைவேறியவுடன் அவர் சந்துருவை இரண்டாவது முறையாகப் பார்த்துவிட்டு என்னிடம், ''இந்த நேரத்தில் நீங்கள் இங்கே வந்தது இதுதான் முதல் தடவை. சொல்லுங்கள். நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டார்.

நான் திடுக்கிட்டு விட்டேன். நான் அவரிடம் உதவி கோரி, தயவை நாடித்தான் வந்திருக்கிறேன் என்பதை அவர் எப்படிக் கண்டுகொண்டிருப்பார்! அவசரமாகச் சந்துருவைப் பார்த்தேன். அவன் தோற்றத்திலும் உடையிலும் அவர் அப்படி ஊகிக்கும்படி ஏதும் தெரிய வில்லை என் கண்களுக்கு. ஒருவேளை அவன் யார் என்பது





அவருக்குத் தெரிந்திருக்கலாம்... அதனுல் சந்துரு அவரை அதற்கு முன்னல் நேருக்கு நேர் பார்த்ததில்லே; அறிமுகம் கிடையாது என்று சொல்லியிருக்கிறுன்.

சந்துருவை அவருக்கு அறிமுகம் செய்து வைத்தேன். "இவன் என் உடன்பிறந்தாள் மகன் சந்திரமௌலி. இவன் தந்தையை உங்களுக்குத் தெரியுமென்று தோன்றுகிறது. சங்கிலிபுரம் மகாதேவன். அவர் காலமாகி நான்கு ஆண்டுகள் ஆகிவிட்டன. இவன் பி. எஸ்ஸி. தேறியிருக்கிறுன். இவனேப் பற்றித்தான் வந்திருக்கிறேன்" என்றேன்.

ஜகந்நாதன் சந்துருவிடம், "அவருக்கு எத்தனே குழந்தைகள்? நீதான் மூத்தவனு?" என்று நேரடியாகக் கேட்டார்.

சந்துரு, "ஆமாம். ஒரு தங்கை இருக்கிறுள். அப்பாவே அவளுக்குக் கலியாணம் செய்து வைத்து விட்டார். அவள் கணவருடன் நாகபுரியில் இருக்கிறுள்" என்றுன்.

ஜகந்நாதன் என்னிடம், "எனக்கு மகாதேவனே ரொம்ப நன்ருகத் தெரியும். அவன் இந்த ஊரிலேயேதான் இருக்கிறுன் என்பதும் தெரியும். நாளுகவே அவனேப் போய்ப் பார்க்க வேண்டும் என்றுகூட இரண்டொரு தடவை நினேத்ததுண்டு. எப்படியோ அந்த நினேப்பு செயலாகவில்லே" என்ருர்.

அவர் பேசிக் கொண்டிருந்தபோது அவருடைய மனைவி பாக்கியலட்சுமி உள்ளே வந்தாள். அந்த அம்மாளுக்கு என்னே நன்ருகத் தெரியும். என்னேக் கண்டவுடன் முகமலர்ச்சியுடன் கைகூப்பி, "வாருங்கள். சௌக்கியமா?" என்று கேட்டுவிட்டுத் தன் கணவரிடம் "நீங்கள் வெளியே புறப்பட இன்னும் அரை மணி நேரமாகுமா? சுமித்ரா வீட்டுக்குப் போக வேண்டுமாம். வண்டியை அனுப்பலாமா?" என்று கேட்டாள்.

ஜகந்நாதன், "அனுப்பேன். பத்து நிமிஷம் கழித்துப் போனுல் போச்சு" என்ருர். பாக்யம் திரும்பினுள் போவதற்கு. அவர், "பாக்யம்! அதோ அந்தப் பையன் சங்கிலிபுரம் மகாதேவன் மகன். இவருடைய உடன்பிறந்தாளேத்தான் அவர் கலியாணம் செய்து கொண்டிருந்தாராம்" என்ருர்.

பாக்யலக்ஷ்மி சந்துருவை நிமிர்ந்து பார்த்தாள். நாலேந்து விநாடிகள் வரை அவனே எடை போடுவது போல் அளந்து பார்த்து விட்டு, "கொஞ்சம், கொஞ்சம் முகஜாடை இருக்கிறது. ஆனல் பார்த்தவுடனே கண்டு கொள்ளும்படி இல்லே. உன் பேரென்ன?" என்று கேட்டாள்.

சந்துரு பெயரைச் சொன்னவுடன், "உங்கள் அப்பா போய்விட்டாராமே,- அம்மா எல்லாம் சௌக்கியமா?" என்று விசாரித்தாள். பிறகு, "நான் போய்ச் சுமித்ராவை அனுப்பி வைக்கிறேன்" என்று சொல்லிவிட்டுப் போனுள்.

பாக்யலக்ஷ்மி உள்ளே போனவுடன் நான், "இவன் விஷயமாகத்தான் உங்களேப் பார்க்க..." என்று தொடங்கினேன்.

அவர் இடைமறித்து, "மகாதேவனும் நானும் பள்ளித் தோழர்கள். சங்கிலிபுரத்திலிருந்து மூன்று மைல் தொலேவில் எங்கள் கிராமம். நானும் சங்கிலிபுரம் உயர்தரப் பள்ளியில்தான் படித்தேன். பள்ளிப் படிப்புக்குப் பிறகு இருவரும் பிரிந்து விட்டோம். அவனுடைய தந்தையிடம் வசதி இருந்தது. மகாதேவன் கல்லூரிப் படிப்புக்குப் போய்ச் சேர்ந்தான். எனக்கும் மேலே படிக்க ஆசை தான். ஆனல் எங்களுக்கு அதற்கு வசதி இல்லே. எனவே, நான் சென்னேக்கு வந்து சேர்ந்தேன். இங்கே வந்தவுடனேயே மவுண்ட் ரோட்டில் ஒரு வெள்ளேக்காரன் கம்பெனியில் குமாஸ்தாவாகச் சேர்ந்தேன். தட்டெழுத்தும் சுருக்கெழுத்தும் கற்ருல் சம்பளம் உயரும் என்று புரிந்துகொண்டு அவற்றைக் கற்றேன். சம்பளம் உயர்ந்தது. உயர்வு என்ருல் இந்தக் காலத்தில் போல நூறும் இருநூறுமல்ல. எனக்குத் தொடக்கச் சம்பளம் மாதம் முப்பது ரூபாய். அதையெல்லாம் கற்றுத் தேர்ந்தவுடன் அது ஐம்பதாக உயர்ந்தது. அந்த நாளில் மாதம் ஐம்பது ரூபாய் சம்பாதிப்பவனுக்கு இந்த நாளில் ஒரு தாசில்தாருக்கு உள்ள மதிப்பு இருந்தது.

"மகாதேவன் கல்லூரிப் படிப்பை முடித்து விட்டுச் சர்க்கார் வேலேயில் சேர்ந்திருக்கிறுன் என்று அறிந்தேன்.

"மகாதேவனுக்கு ஓர் அத்தை மகள் இருந்தாள். அவனுடைய தந்தைக்கு உடன் பிறந்த சொந்தத் தங்கையின் மகள். அந்தப் பெண்ணே அவனுக்கு மணம் முடித்து வைக்க விரும்பினுர் அவனுடைய தந்தை.

"அந்தப் பெண்ணின் பெயர் அலமேலு. அவள் பிறந்த நேரத்தின் கோளாரே, வேறு எதுவோ அவளுக்குத் துடைகாலி என்று ஒரு பட்டப் பெயர் ஒட்டிக் கொண்டுவிட்டது. அவள் பிறந்த இரண்டாம் நாள் அவளுடைய தாய் இறந்து விட்டாள். அவளுடைய மூன்ருவது வயதில் அவளுடைய தந்தை எங்கேயோ தடுக்கி விழுந்து அடிபட்டு அதனுலேயே காலமாகி விட்டார்.

"அலமேலு அவளுடைய சிறிய தகப்பனுர் வீட்டில் போய் வளர்ந்தாள். அவள் போய்ச் சேர்ந்த ஒரு மாதத்துக்குள் அந்தச் சிற்றப்பா வீட்டில் திருடர்கள் புகுந்து நகை நட்டுக்களேயெல்லாம் அள்ளிக் கொண்டு போய்விட்டார்கள். அவளுடைய சித்தி 'இந்தத் துடைகாலி வீட்டில் காலடி வைத்த வேளே தான் இப்படி நேர்ந்து விட்டது' என்று அலமேலுவைக் காரணம் காட்டினுள். அவள் சூட்டியதுதான் அலமேலுவுக்குத் துடைகாலிப் பட்டம். அலமேலுவின் சிற்றப்பா மனத்திலும் அந்தக் கருத்து உறுத்தியிருக்கலாம். ஆனுலும் அவர் அதற்காக அலமேலுவைக் கைவிட இசையவில்லே. 'நம்முடைய அனுக்கிரகைக்கு அவள் என்ன செய்வாள்? நம்மை விட்டால் அவளுக்கு வேறு கதி யார் இருக்கிறுர்கள்?' என்று அவர் தம் மனைவியை அடக்கினுர். அவருடைய மனைவி, அலமேலுவை அவளுடைய மாமன் வீட்டுக்குத் தள்ளிவிட, அதாவது மகாதேவனின் தந்தையிடம் அனுப்பிவிட

# வீடுகளுக்கும் மற்றும் உணவு விடுதிகளுக்கும் ஓர் அரிய சாதனம்

# லீக்கோ நவீன வீட்டு எரி பொருள்

சிக்கனமானது • மற்ற எரிபொருள்களைவிட அதிக அனலை ஈந்து நீண்ட நேர வெப்பத்தை கொடுக்கிறது • புகையாதது • எந்தரக கரி அடுப்பினிலும் உபயோகப்படுத்தவல்லது.



சிறிய 'லீக்கோ' துண்டுகளை எடுத்துக் கொள்ளவும்.



பிறகு மெல்லிய அடுக்காக அடுப்பினில் பரப்பி வைக்கவும்.



வழக்கமான முறையில் எரிய வைக்கவும்.



சில நிமிடங்கள் கழித்து நன்றாக சுடர் விட்டவுடன் மேலும் வேண்டிய அளவு 'லீக்கோ' சேர்த்துக் கொள்ளவும்.

நெய்வேலி லிக்னைட் கார்ப்பொரேஷன் லிமிடெட், நெய்வேலி-1.






FDS NLC 640 TM

எவ்வளவோ முயன்றான். சித்தப்பா உறுதியாக இருந்து விட்டார்.

''அந்தப் பெண்ணைத்தான் மகாதேவனுக்குக் கல்யாணம் செய்து வைக்க விரும்பினார் 'அவனுடைய தந்தை. தன் தங்கையின் மகள். தாய் தந்தையை இழந்தவள். அவளைக் கைவிடுவது தவறு, பாவம் என்று கருதித்தான் அவர் அந்த முடிவுக்கு வந்தார். அந்தப் பெண்ணின் பிறவியிலிருந்த வேளைக் கோளாறு பற்றி மகாதேவனுக்கும் தெரியும். இருந்தும் தந்தையின் சொல்லை மீற முடியாமல் அதற்கு இசைந்தான்.

முகூர்த்தத்துக்குத் தேதி வைத்த அடுத்த வாரமே அவன் வேலையில் ஏதோ தவறு கண்டு பிடிக்கப்பட்டு, அவனுக்கு 'சஸ்பெண்ட்' உத்தரவு வந்து விட்டது. 'நிச்சயமாக இது என் தவறு இல்லை. என் மேல் பொறாமையினால் இலாகாவில் யாரோ இதை ஜோடித்திருக்கிறார்கள்' என்று அவன் விளக்கம் எழுதினான். மேலதிகாரியிடம் போய் முறையிட்டான்.

''அந்த நிகழ்ச்சி அலமேலுவின் வாழ்க்கையைப் பாதித்தது. அவளை மணம் செய்து கொள்ள இசைந்த குற்றத்துக்குத்தான் எனக்கு இப்படி ஒரு தண்டனை கிடைத்திருக்கிறது. அந்தத் துடைகாலி எனக்கு வேண்டாம்' என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டான் மகாதேவன்.

''மகாதேவனுடைய அந்தக் கருத்தில் உண்மை இருந்தது என்று கருதும்படி அவனுடைய வேலைக்கு வந்த விபத்து தானாக விலகி விட்டது. ஆறு மாத விசாரணைக்குப் பிறகு அவனுடைய வேலையில் காணப்பட்ட தவறுக்கு அவன் எந்த வகையிலும் பொறுப்பில்லை என்று முடிவு கட்டப்பட்டு, அவனை மறுபடியும் வேலையில் சேர்த்து கொள்ளும்படி உத்தரவு வந்தது.

''அலமேலுவை மணம் செய்துகொள்ளாமல் விலகிக் கொண்டதால்தான் அந்த விபத்து விலகி விட்டது என்று அவன் கருதினான். ஆனால் அவனுடைய தந்தை 'அதற்கும் அந்தப் பெண்ணுக்கும் என்னடா சம்பந்தம்? ஏதோ வேளைக் கோளாறு. அவளை நாம் கைவிடுவது பாவம். நீதான் அவளைக் கலியாணம் செய்து கொண்டாக வேண்டும். அவள் என் சொந்தத் தங்கையின் மகள்' என்று வாதாடி வற்புறுத்தினார். ஆனால் மகாதேவன் கண்டிப்பாக முடியாதென்று மறுத்து விட்டான்.

''கடைசியில் தன்னுடைய பெற்றோர்கள், உறவினர்கள் எல்லாரையும் பகைத்துக் கொண்டு அவன் உங்கள் உடன்பிறந்தாளை மணந்து கொண்டான்'' என்று சொல்லி நிறுத்தினார் ஜகந்நாதன்.

நான், ''ஆமாம், என் தந்தைதான் ஜயத்துக்கு வரன் தேடி மகாதேவனைக் கண்டு பிடித்தார். கலியாணத்துக்கு அவனுடைய உறவினர்களில் யாருமே வரவில்லை. என் தந்தையும் ஒரு விபரீதப் போக்குக்காரர். அவனுடைய மனிதர்கள் யாரும் வரவில்லை என்பதை அவர் பாராட்டவே யில்லை.

## சுவர்க்கமும் நரகமும்!



ஒரு நாள் சுவர்க்கத்தில் ஓர் அழகிய ஏரிக் கரையில் பகவான் புத்தர் உலாவிக் கொண்டிருந்தார்.

உலாவிக் கொண்டிருந்த பகவான் திடீரென என்ன நினைத்தாரோ! ஸ்படிகம் போன்ற நீர் நிறைந்த அந்த ஏரியின் நீர்ப்பரப்புக்குக் கீழே பாதாளத்தில் நரகம் [illegible] தெரிந்தது. அங்கே பாபாத்மாக்கள் தங்கள் துஷ்கர்மங்களின் பலன்களை அனுபவித்துக் கொண்டிருந்தனர். அங்கே அல்லல்பட்டுக்கொண்டிருந்த காந்தாதா என்ற ஒரு பிரபல கொள்ளைக்காரன் மீது பகவானின் பார்வை நிலைகுத்தியது.

காந்தாதாவைப் பகவானுக்கு நன்கு தெரியும். அவன் தன் வாழ்வு முழுவதையும் கொள்ளையடிப்பதிலும் நிரபராதிகளைக் கொலை செய்வதிலும் செலவிட்டான். ஆனால் இவ்வளவு கொடியவனாக இருந்தும் ஒரு நாள் ஒரு சிலந்திப்பூச்சியின் உயிரைக் காப்பாற்றினான். அது இவ்விதம் நடந்தது.

ஒரு நாள் கொள்ளையடித்து முடித்துவிட்டுப் பெருமிதத்துடன் காட்டு வழியே திரும்பிக்கொண்டிருந்தான் காந்தாதா. அவன் திரும்பிய வழியில் இரண்டு செடிகளை இணைத்து ஒரு சிலந்தி வலை பின்னிக் கொண்டிருந்தது. இந்தச் சிலந்திக் கூட்டைப் பிய்த்துச் சிலந்தியையும் நசுக்கக் கையோங்கிய காந்தாதா திடீரென என்ன நினைத்தானோ, தன் கையை இழுத்துக் கொண்டான். சிலந்தியையோ சிலந்தி வலையையோ தொடாது ஒதுங்கிச் சென்றான்.

இவ்விதம் அவன் செய்த ஜீவகாருண்யச் செயல் ஒன்று பகவானுக்கு நினைவு வரவே, அவனை நரகத்திலிருந்து எவ்விதம் வெளியேற்றலாம் என யோசித்தார். அப்பொழுது அவர் அருகே சிலந்தி கட்டிய பழைய வலை ஒன்று இருந்தது. அதன் நூலைப் பிரித்து நரகத்தை நோக்கித் தொங்க விட்டார் பகவான்.

உடனே அந்த நூலைப் பற்றி விறுவிறுவென சுவர்க்கத்தை நோக்கி அவன் ஏறத் தொடங்கினான்.

ஒரே மூச்சில் பாதித் தூரம் ஏறி வந்து விட்டான். அப்பொழுது சிறிது நேரம் இளைப்பாற வேண்டும் என அவனுக்குத் தோன்றியது. ஏறுவதை நிறுத்திக் கீழே நரகத்தை நோக்கினான். என்ன! நரகத்தில் யாருமே இல்லையே! - அங்கிருந்தவர்கள் எல்லாம் அவனைப் பின்பற்றி அந்த நூலின் வழியாக மேல் நோக்கி ஏறி வந்து கொண்டிருந்தார்கள். இதைப் பார்த்த காந்தாதாவுக்குக் கோபம் பொங்கி வந்தது.

'நீங்கள் எல்லாம் இங்கே ஏன் ஏறி வருகிறீர்கள்? கீழே இறங்குங்கள். இல்லாது போனால் நூலை அறுத்து விட்டுவிடுவேன். பாவிகளே! இறங்குங்கள்! இறங்குங்கள்!...' என அவன் கத்தினான். அவ்வளவுதான். இவ்விதம் அவன் கூறியதும் நூல் திடீரென்று அறுந்தது. காந்தாதா உள்ளிட்ட எல்லோரும் மடமடவென நரகக் குழியில் சரிந்து விழுந்தார்கள்.

இதைப் பார்த்த பகவான் மிகவும் வருந்தினார். அவர் கண்கள் இறுக மூடிக்கொண்டன.

- அ. ராம்கோபால்

(ஜப்பானிய பௌத்த திராவிடக் கதை)

மணத்தை நிறைவேற்றி வைத்து விட்டார். கலியாணமாகிப் பல ஆண்டுகள் ஆகியும் கூட மாப்பிள்ளையின் உறவினர்கள் யாரும் அவருடன் ஒட்டவேயில்லை'' என்றேன்.

அதுவரை வாயே திறவாமல் உட்கார்ந்திருந்த சந்துரு, அவன் உள்ளே நிகழ்ந்த உணர்ச்சிப் போராட்டத்தைக் காட்டும் குரலில் ஜகந்நாதனிடம் ''அந்த அலமேலுவின் கதி என்னவாயிற்று? அப்பாவும் கைவிட்ட பிறகு அவளுக்குக் கலியாணமே ஆகியிருக்காது இல்லையா?'' என்று கேட்டான்.

ஜகந்நாதன் புன்னகையுடன், ''அவள் பிறவியில் துடைகாலி என்பது அவருடைய உறவினர்களுக்கு மட்டும்தானே தெரியும்? அதை மறைத்து வைத்து அவளை ஒருவனுக்குக் கட்டி வைத்து விட்டார்கள். ஒருவனுக்கு என்ன? எனக்கேதான் கட்டிக் கொடுத்தார்கள்'' என்றார்.

நானும் சந்துருவும் திடுக்கிட்டுப் போனோம். சந்துரு தன்னை மறந்து குரலை உயர்த்தி, ''உங்களுக்குக் கலியாணம் செய்து வைத்தார்களா! உங்களுக்கா?'' என்று கூவினான்.

ஜகந்நாதன், பதில் சொன்னார் : ''ஆமாம், நான்தான் கலியாணம் செய்து கொண்டேன். ஆனால் அவளைப் பற்றிய அந்த விவரத்தை அறிந்து துணிச்சலுடன், தியாகம் காட்டிச் செய்து கொண்டதல்ல. என் மனைவி பாக்யலக்ஷ்மிதான் அந்த அலமேலு. உன் தந்தை மகாதேவன்தான் முன்னின்று முயன்று இவளை நான் மணந்து கொள்ள வகை செய்தார்.

''மகாதேவன் உன் தாயை மணந்து நாலைந்து மாதங்களுக்குப் பிறகு சென்னைக்கு வந்திருந்தார். என்னைத் தற்செயலாகச் சந்தித்தார். இருவரும் பள்ளித் தோழமைக் காலம் பற்றி அளவளாவிக் கொண்டோம். மகாதேவன் என்னிடம், 'நீ ஏன் இன்னும் கலியாணம் செய்து கொள்ளாமலிருக்கிறாய்? என் அத்தை மகள் ஒருத்தி இருக்கிறாள். நியாயமாக நான்தான் அவளைக் கலியாணம் செய்து கொண்டிருக்க வேண்டும். அவளுடன் நான் உடன்பிறந்தவன் போலப் பழகி விட்டேன். அதனால் மனம் இடம் கொடுக்கவில்லை. அவளை நீ கலியாணம் செய்து கொண்டு விடேன்' என்றார்.''

சந்துரு உணர்ச்சிப் படபடப்புடன், ''அப்பா உங்களிடம் அப்படியா சொன்னார்? அந்தக் காரணத்துக்காகத்தான் அலமேலுவைத் தான் மணந்து கொள்ள இயலவில்லை என்று சொன்னார்?'' என்று கேட்டான்.

ஜகந்நாதன், தொடர்ந்தார் : ''ஆம். நீயே அவளை ஏன் மணந்து கொள்ளவில்லை என்று நான் கேட்கக்கூட இல்லை. நாமாகவேதான் சொன்னார். அப்போது என் தந்தையும் காலமாகி விட்டார். என் தாய் எனக்குப் பன்னிரண்டு வயதாக இருக்கும்போதே தவறி விட்டாள். ஆகையால் 'பெண்ணைப் பிடித்திருந்தால் செய்து கொள்கிறேன்' என்று சொல்லி விட்டேன்.

''மகாதேவன் அந்தப் பெண்ணை அவளுடைய சித்தப்பாவுடன் சென்னைக்கே வரவழைத்தார். நான் போய்ப் பார்த்தேன். எனக்குப் பிடித்துப் போய் விட்டது. அவளை மணந்துகொள்ள இசைந்தேன். திருப்பதியில்தான் எங்கள் கலியாணம் நடந்தது. அலமேலுவின் சித்தப்பா முனைந்து நின்று சென்னையில் ஒரு வீட்டில் ஒண்டுக் குடித்தனத்துக்கு இடம் பிடித்து எங்கள் குடும்பத்தை நிறுவி விட்டு ஊருக்குப் போனார்.''

என் மனக் குறுகுறுப்பை என்னால் அடக்க முடியவில்லை. ''உங்கள் மனைவியின் பிறவி வேளைக் கோளாறு உங்களையும் பாதித்ததா? அந்த அம்மாளுக்கு அப்படி ஒரு...'' என்று தயங்கினேன்.

ஜகந்நாதன் சிரித்தார். ''ஏன் தயங்குகிறீர்கள்? அவளுக்கு அப்படி ஒரு சாபக்கேடு இருந்தது என்பது எனக்கு எப்போது தெரிந்தது என்று தானே கேட்க விரும்புகிறீர்கள்? அவளுடைய உறவினரால் நேர்ந்த ஒரு தீமை என்று நான் அதைக் கருதவில்லை. எங்கள் மணம் நடந்து ஒரு மாதத்துக்குள் நான் என் வேலையை விட்டு விலக வேண்டிய ஒரு நெருக்கடி நேர்ந்தது. கம்பெனியில் நியாயமாக எனக்குக் கிடைத்திருக்க வேண்டிய ஒரு வேலை உயர்வை, சிபாரிசுகளின் விளைவாக எனக்குப் பின்னால் வந்து சேர்ந்தவருக்குக் கொடுத்து விட்டனர். நான் பரபரத்து வேலையை விட்டு வெளியே வந்து விட்டேன்.

''அப்போதுதான் அலமேலுவே தன் மேல் ஒட்டிக் கொண்டிருந்த பட்டத்தைப் பற்றிச் சொன்னாள். அவள் கண்ணீருடன், 'உங்கள் கம்பெனியில் உங்களுக்குக் கிடைக்க வேண்டிய உயர்வை உங்களுக்கு இல்லாமல் செய்தவர் மேல் ஒரு குற்றமும் இல்லை.



இன்று மாலை சூரியன் மறைவதற்குள் நீங்கள் ஓடி முடிக்கும் நிலம் முழுவதும் உங்களுக்கே சொந்தம். ஆனால் சூரியன் மறைவதற்குள் புறப்பட்ட இடமான அதே ஆரம்ப நிலைக்குத் திரும்பி வந்துவிடவேண்டும்' என்று அறிவித்தார் ஒருவர். பேராசைக்காரன் ஒருவன் ஓடினான், ஓடினான், கண்ணை மூடிக் கொண்டு ஓடினான். பல மைல் தூரம் கடந்துவிட்டான். நேரம் ஓடி விட்டதை உணர்ந்து திரும்பி ஓடி வந்தான். மெல்ல மெல்ல சூரியனும் மறைந்து கொண்டிருந்தான். சூரியன் மறைவதற்குச் சில வினாடிகளே இருந்தன. இந்த மனிதனும் நிலையைத் தொடுவதற்குச் சில கஜங்களே இருந்தன. இன்னும் ஒரு வினாடி.... மூச்சைப் பிடித்துக் கொண்டு தொட்டு விட்டான். சூரியனும் மறைந்தான். வெற்றி பெற்றுவிட்டதாகவும், அவன் ஓடிய நிலம் முழுவதும் அவனுக்குச் சொந்தம் என்றும் அறிவித்தார்கள். ஆனால் -- அதைக் கேட்க அந்த மனிதன் இல்லை! எட்டடி நிலத்தில் தன்னை வைத்துக் கொண்டு இதோ உயிர் துறந்து கிடந்தான் அவன்!

-டால்ஸ்டாய் கதை

என்னுல் உங்களுக்கு வந்த துர்ப்பாக்கியம் தான் இது'' என்று சொல்லிக் கதறி அவள் கதையை முழுதும் சொன்னுள்.

''அதைக் கேட்டு என் மனமும் ஒரு நொடி கடகடத்துப் போய் விட்டது. ஆனுல்.... அதைத் தெய்வச் செயல் என்றுதான் சொல்ல வேண்டும், கொஞ்ச நேரத்தில் நானே சமாளித்துக் கொண்டு என் உள்ளத்தைப் பிடித்து நெரிக்க முயன்ற பய உணர்ச்சியை உதறி எறிந்து வெளிப்பட்டு விட்டேன்.

''அலமேலுவுக்கு ஆறுதல் சொன்னேன். ஆனுல் உண்மையில் பயத்தால் ஆடிப் போயிருந்த என் மனத்துக்கு நானே சொல்லிக்கொண்ட தேறுதல்தான் அது. 'மற்றவர்கள் அதை நம்பினுல் நம்பட்டும். அவர்கள் நம்புவது உண்மையாகவே இருந்தாலும் நான் அதை எதிர்த்துப் போராடப் போகிறேனே தவிர அதற்குப் பயந்து ஓடப்போவதில்லை. நானுகவேதான் இந்த வேலையை விட்டு விட்டு வந்தேன். அதில் உனக்கு ஒரு சம்பந்தமும் இல்லை. இருந்தாலும் இந்த வேலையுடன் அது எல்லாம் தீர்ந்து விட்டது. இதிலிருந்து நம் வாழ்வின் ஏறுமுகம் தொடங்கிவிட்டது. நான் சாதித்துக் காட்டுகிறேன் பார். ஒருவன் வாழ்க்கையில் முன்னேறி உயர்வதற்கு அவனுடைய நெஞ்சு உறுதி, வீம்பு, உழைப்பு மற்றவர்களுடன் பழகும் சமர்த்து, முக்கியமாக நாணயம் ஆகியவைதான் உதவியாக அமைகின்றன என்பதை நான் நிரூபித்துக் காட்டுவேன். அதற்கு ஆரம்பமாக இந்த நிமிஷத்திலிருந்து உன் பெயர் பாக்கியலக்ஷ்மி. வாழ்க்கையில் பெறக்கூடிய எல்லாப் பாக்கியங்களையும் கூட்டி வைக்க வந்துள்ள லக்ஷ்மி நீ'' என்று படபடப்புடன் பேசினேன்.

''அதற்கு அடுத்த நாள் தொடங்கியது தான் என் வாழ்க்கைப் பந்தய ஓட்டம். இன்னும் ஓடிக்கொண்டேதான் இருக்கிறேன்'' என்று சொல்லி முடித்தார்.

அரை நிமிஷம் வரை எங்களில் யாருமே பேசவில்லை. அவரவர் உள்ளத்தில் எழுந்த சிந்தனைகள், உணர்ச்சிகளின் சுழல்களில் சிக்கி மௌனமாக உட்கார்ந்திருந்தோம். அந்தச் சிந்தனைச் சுழல்களின் இடையில் என் மனத்தில் 'அந்த மகாதேவனின் மகனுக்கு நீங்கள் தான் வாழ்வுக்கு வகை செய்ய வேண்டும் என்று கேட்பது சரிதானு, பொருந்துமா?' என்ற எண்ணம் சீறிக் கொண்டு எழுந்தது. சந்துருவைத் திரும்பிப் பார்த்தேன். அவன் மனத்திலும் அந்த மாதிரியான எண்ணம் எழுந்திருக்க வேண்டும். அவன் சட்டென்று எழுந்து நின்றுன்.

ஜகந்நாதன், ''உட்காரு. இதை நான் உங்களிடம் சொன்னதற்குக் காரணம் இருக்கிறது. உன்னுடைய மாமா உன்னை அறிமுகம் செய்து வைத்த குரலிலேயே அவர் உனக்காக என்னிடம் உதவி கோரி வந்திருக்கிருர் என்பதை ஊகித்துக் கொண்டேன். உன் தந்தையின் மேல் எனக்குச் சிறிதுகூடக் கோபமோ வருத்தமோ இல்லை. மெய்யாகவே நான் அவருக்கு நன்றிக் கடன் பட்டிருப்பதாகவே நினைத்திருக்கிறேன். இந்தச் செல்வம் அவ்வளவும் என் மனைவியினுல்




## சரக்கூடம்

இலக்கியம் ஒரு காலக் கண்ணுடிதானே? மிகப் பெரிய நவீனமானுலும் ஒரே ஒரு சிறந்த கதா பாத்திரத்தைக் கொண்டு விளங்குமானுல் அந்த ஒரு கதாபாத்திரத்துக்காகவே அந்த நவீனம் பல நூற்றுண்டு காலம் நிலைத்திருக்கும் என்பது எத்துணை உண்மை?

ஸ்ரீமதி ரெஜினு எழுதிய இந்நாவலை அன்றுட வாழ்வின் அடிப்படையில் நல்ல நடையோடு நெஞ்சில் நிலைத்து நிற்கக் கூடிய அநுபவம் முதிர்ந்த மொழிகளோடு அமைந்த அழகிய இலக்கியக் கோயில் என்று அறிமுகப்படுத்துகிறேன். அதன் அஸ்திவாரத்தின் வலிமையை (கதையை) நவீனத்தைப் படித்துப் பார்ப்பவர் அறிந்துகொள்ளுவது நல்லது. இந்த நவீனத்தில் பலரகப்பட்ட கதாபாத்திரங்கள் வருகின்றனர். குற்றம் செய்வதையே தொழிலாகக் கொண்டு சிறைக்குச் செல்லும் ராமையா முதல் நவீன நாகரிகத்தின் பிடியில் சிக்கி சுழலும் ரம்யா வரை ஒவ்வொரு பாத்திரமும் வாசகர் நெஞ்சை விட்டு நீங்காத இடம் பெறுவர் என்று பதிப்பகத்தார் முன்னுரையாகக் கூறினுலும் நம் நினைவில் எழுன்று கொண்டிருக்கும் ஒரு பாத்திரம் மீனுதான்.

உள்ளத்து உணர்வுகளைத் தூண்டிவிடும் அழகிய கட்டங்கள் பல உண்டு இந்த நவீனத்தில். நவீனத்தைப் படித்து முடித்த பின்னரும் நினைவுகள் நவீனத்திலேயே சுழலுகின்றன.

'My never failing friends are They' என்று ஆங்கிலக் கவிஞன் சதே (Southey) புத்தகத்துக்கு விளக்கம் கொடுத்தாற் போல இந்த நவீனம் நம் மனத்துக்கு ஒருவித நிறைவைத் தருகிறது.

-எம். மோகன்

வெளியீடு: பரமேஸ்வரா பிரசுரம், நவுஸதாபாத்

~~~~~~~~~~~~~~~~~~~~

வந்த அதிர்ஷ்டம் என்று நான் நம்புகிறேன்'' என்று சொல்லிவிட்டு என்னிடம், ''சொல்லுங்கள், நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டார்.

சந்துருவுக்கு ஒரு வேலை கிடைக்க வழி செய்ய வேண்டுமென்பதை நான் அவரிடம் எப்படிச் சொன்னேன், என்ன சொன்னேன் என்பது எனக்கு இன்றுவரை நினைவில் வரவில்லை. என் மனம் அப்படிக் குழம்பிப் போயிருந்தது. சந்துரு அவர் வாங்கிக் கொடுத்த வேலையில்தான் இருக்கிறன்.

நான் முன்பு ஜகந்நாதனுடன் பழகும் போது இருந்த மனக் கூச்சம் போய்விட்டது. அதற்குப் பதில் இப்போது வேறு விதமான கூச்சம் சேர்ந்திருக்கிறது. இப்போது நான் தான் அவரை ஓர் உயர்ந்த பிறவி, எனக்குக் கிடைக்க முடியாத நட்பு என்று கருதி அவருடன் பழகுகிறேன், அவரிடம் பேசுகிறேன்.
~~~~~~~~~~~~~~~~~~~~



# பள்ளி நினைவுகள்



## அகந்தை அழிந்தது !

தமிழாசிரியர் என்னை அத்தனை மாணவர்களுக்கும் முன்னால் கண்டித்து விட்டார். பல பொது நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டதால் நான் பள்ளியில் ரொம்பப் பிராபல்யமானவன். அப்படியிருக்க இத்தனை பேர்களுக்கு முன் என்னை அவமானப்படுத்துவதா என்று எனக்குச் சினம் பொங்கியது.

மறுநாள் நான் சில மாணவர்களுடன் பள்ளிக்கு வந்து கொண்டிருந்தேன். அந்த ஆசிரியர் என் எதிரில் வந்து கொண்டிருந்தார். நான் அவரைக் கவனியாதவன்போல் வணக்கம் செலுத்தாது சென்று கொண்டிருந்தேன். அவர் திடீரென்று என்னை வந்து வணங்கி, ''ஐயா! வணக்கம்!'' என்றாரே பார்க்கலாம். வெலவெலத்துவிட்டேன். என்னுடைய அகந்தை அன்றோடு சொல்லிக் கொள்ளாமல் ஓடிவிட்டது.

செ. இராஜையின் கண்ணன்
சென்னை–1

## 'டவரி'ல் ஓடியது

பேராசிரியர் தர்மலிங்கம் என்றாலே பள்ளி மாணவர்கள் அனைவரும் நடுநடுங்குவார்கள். அவர் வகுப்பில் நுழையு முன் அமைதி குடிக்கொண்டு விடும். அவரது கணீர் என்ற குரல் மட்டும் கேட்டுக் கொண்டிருக்கும். வகுப்பில் ஏற்படும் ஒரு சிறு அசைவும் அவரது கூர்மையான விழிகளிலிருந்து தப்பியதில்லை.

ஒரு நாள் அவர் கடின நீரை மென்னீராக்க உதவும் முறைகளுள் ஒன்றான 'பெர்மியூடிட்' முறையை விளக்கினார்.

பெர்மியூடிட் டவரில் (Permutit tower) பெர்மியூடிட் என்ற பொருளும் கூழாங் கற்களும் அடுக்கடுக்காக வைக்கப் பட்டிருக்கும். கடின நீரை அந்த டவரின் வழியாகப் பாய்ச்சும்போது அது கூழாங்கற்களின் வழியாகவும், பெர்மியூடிட்டின் வழியாகவும் சென்று டவரின் அடியில் உள்ள குழாயின் வழியாக மென்னீராக வெளிவரும். 'இப்போது டவரில் நீர் ஓடுகிறது என்று வைத்துக் கொள்வோம்' என்று கூறியவர் வகுப்பின் ஒரு மூலையை முறைத்து நோக்கியவாறு நிறுத்தினார். அங்கு உட்கார்ந்திருந்த சேகர் குனிந்து பெஞ்சுக்கடியில் எதையோ துழாவியபடி இருந்தான். பேராசிரியர் பேச்சு நின்றதற்குத் தான்தான் காரணம் என்று உணர்ந்த அவன் பயந்து எழுந்து நின்றான். 'இப்போது டவரில் என்ன ஓடுகிறது?' என்று கோபமாகக் கேட்டார் பேராசிரியர். சிறிதும் தயக்கமின்றிச் சேகர், ''குழந்தையும் தெய்வமும் சார்!'' என்று கூறியதும் வகுப்பே சிரிப்பில் ஆழ்ந்தது. 'டவர்' என்று எல்லோராலும் அழைக்கப்படும் சினிமாக் கொட்டகையாகிய 'நியூ டவரி'ல் அப்போது ஓடிய சினிமா ''குழந்தையும் தெய்வமும்!'' பேராசிரியர் தம் கோபத்தையும் மறந்து சிரிப்பில் ஆழ்ந்தார்.

-நந்தை இரகுநாதன்

## ஏமாந்தார்கள் !

ஒரு புது ஆசிரியை எங்கள் பள்ளிக்கு வந்திருந்தார். என் தோழிகள் அந்த ஆசிரியை நம் வகுப்புக்கு வர மாட்டார் என்றனர். நான் அவர் நம் வகுப்புக்கு வருவார், வராவிடில் ஐஸ்கிரீம் பந்தயம் என்றேன். என் தோழிகளே ஜயித்தனர். மறுநாள் ஐஸ் கிரீம் வாங்கிக் கொடு என்றனர். நான் அதற்கு 'வீல்' எனக் கத்தினேன். அவர்கள் பயந்து விட்டனர். எல்லோருமாக ஏன் கத்துகிறாய் எனப் பரபரப்புடன் கேட்டனர். நான் தோற்றுவிட்டேன். அதனால் 'ஐஸ்கிரீம்'' — நான் கத்தினேன்'' என அவர்களிடம் சொன்னேன். ஏமாந்துவிட்ட அவர்களுடைய முகம் போன போக்கைப் பார்க்க வேண்டுமே, பரிதாபம்!

சத்யா ராஜன்
பூனா–16

## கவரிமான்

எங்கள் தமிழ் ஆசிரியை வயது முதிர்ந்தவர். திறமை வாய்ந்தவர். அப்போது அவர் ஓய்வுபெற ஓரிரு ஆண்டுகளே எஞ்சியிருந்தன. தன் வாழ்நாள் முழுதும் தன் குடும்ப நலனுக்காகத் திருமணம் செய்துகொள்ளாமலே சென்றிட்ட அவரை ஒரு தியாகி என்று கூடச் சொல்லலாம்.

கம்ப ராமாயணத்தில் ஒரு சிறு பகுதி எங்களுக்குப் பாடமாக இருந்தது. ரசிகமணி டி.கே.சி. யின் விளக்க உரைகளுடன் அதை அவர் நயத்துடன் விளக்குவார். ஆயினும் அவரை வெறுத்த மாணவிகளும் இருந்தனர்.









காரணம் அவர் சற்றுக் கண்டிப்பானவர். மாணவிகளின் தவறுகளை உடனடியாக எடுத்துக் காட்டித் திருத்திவிட வேண்டும் என்று நம்பியவர்.

முழு வருடப் பரீட்சை வந்தது. தமிழ்ப் பரீட்சை இனத்தன்று புத்தகத்தையே வகுப்புக்குக் கொண்டு வந்து விடையை ரகசியமாகக் 'காப்பி' அடித்துக் கொண்டிருந்தாள் மாணவி ஒருத்தி. அந்த ஆசிரியையை வெறுத்த குழுவைச் சேர்ந்தவள். அவள் செய்த காரியத்தைத் தமிழாசிரியை கவனித்து விடவே உணர்ச்சி வசப்பட்டு அவள் கன்னத்தில் ஓங்கி வைத்ததுடன் தொடர்ந்து பரீட்சை எழுத அனுமதி தர மறுத்தார்.

விஷயம் தலைமை ஆசிரியர் வரை போயிற்று. மாணவியை அந்த ஆசிரியை அடித்ததற்குக் காரணம் கேட்கப்பட்டது. தமிழாசிரியை உடனடியாக வேலையை ராஜிநாமாச் செய்துவிட்டார்.

அது தெரிந்து நாங்கள் ஓடினோம். தவறு செய்த பெண்ணின் சார்பாக மன்னிப்பு வேண்டினோம். அதற்கு அவர் சொன்னார்: 'இங்கு படிக்கும் மாணவிகள் அனைவரும் என் குழந்தைகள். அவர்களுக்குத் தாயாகவே என்னைப் பாவித்துக் கொண்டு நடந்து கொள்ளுகிறேன். ஒரு தாயின் உரிமையுடன் தான் அவர்களைக் கண்டித்துத் திருத்த முயலுகிறேன். என் இருபது வருஷ சர்வீஸில் இப்படி ஒரு சம்பவம் நடந்ததுமில்லை. என்னை விசாரணைக்கு வேறு யாரும் கேள்வி கேட்கும்படி வைத்துக் கொண்டதுமில்லை. இன்று அப்படி ஒரு நிலைமை ஏற்பட்டதற்குக் காரணம் என்னை நான் மறந்ததுதான். உடல் மட்டுமின்றி உணர்ச்சிகளும் கட்டு மீறிப் போனது வயோதிகம் முற்றிவிட்டதன் அறிகுறி. குறிப்பிட்ட மாணவியின் மீது எனக்கு வருத்தமில்லை. அவளை நான் அப்போதே மன்னித்து விட்டேன்.''

நான் திரும்பு முன் என் கையெழுத்துப் புத்தகத்தை நீட்டினேன். 'அன்பும் தெய்வமும் ஒன்று. சகல ஜீவராசிகளிடமும் அன்பு செலுத்துவதுதான் ஆண்டவனுக்குச் செய்யும் தொண்டு. அன்பு உலகை ஆளும். அதிகாரத்தினால் முடியாது!' இதுதான் அவர்கள் எழுதிக் கொடுத்த வாசகங்கள்.

அந்த ஆசிரியை வேலையை விட்டு விலகிய ஒரு வாரத்துக்கெல்லாம் மாரடைப்பினால் காலமான செய்தி வந்தது. நாங்கள் அடைந்த துயரம் அளவிடற்கரியது.

- லட்சுமி ரமணன்
கங்காநகர்

## ஆக்கலும் அழித்தலும்

விஞ்ஞான ஆசிரியர் பாடம் நடத்த ஆரம்பித்தார். ''வஸ்துக்களை ஆக்கவோ அழிக்கவோ முடியாது. ஒரு வஸ்துவை மற்றொரு வஸ்துவாக மாற்றலாம்'' என்பதைப் பற்றிச் சொல்லிவிட்டு, அதற்கு விளக்கமாக 'Nothing is lost when a candle burns' என்பதைச் சொன்னார். குறும்புக் குப்புசாமி 'ஏன் ஸார், மெழுகுவத்தி எரிந்தால் கைப்பொருள் நஷ்டமாக ஆகவில்லையா ஸார்!' என்றான். 'கைப்பொருளைப் பற்றிச் சொல்லவில்லை. வத்தியாக விளங்கும் பொருளைப் பற்றித்தான் குறிப்பிடுகிறேன்' என்றார். 'வத்தி வைத்தால் ஏற்படும் நஷ்டம் கொஞ்சம் நஞ்சம் இல்லை, ஸார்!' என்றான். உடனே, பையன்கள் யாவரும் சிரித்து விட்டனர். ஆசிரியர் தடுமாற்றத்துடன், இதைச் சோதனையால் காட்டுகிறேன்'' என்றார். சோதனை வேண்டாம் ஸார். யாவருக்கும் தெரிந்த விஷயம்தானே என்றான். சோதனை இல்லாமல் விஞ்ஞானம் படிப்பதில் பிரயோசனம் இல்லை என்று மெழுகுவத்தியை ஏற்றி வைத்தார். அப்பொழுது காற்றடித்து வத்தி கீழே விழுந்து பக்கத்தில் இருக்கும் புஸ்தகம் தீப்பற்றிக்



கொண்டது. ஒரே பரபரப்பாகப் போய்விட்டது. குப்புசாமி ஓடிப் போய், தீயை அணைத்து, 'ஸார்! சோதனை வேண்டாம் என்றேன். கேட்கவில்லை நீங்கள். வத்தி எரிந்ததால் புத்தகம் நஷ்டமாகி விட்டதே ஸார்!' என்றான்.

பா. ஜயராமன்,
மாயூரம்

## கவிதை பிறந்தது

பள்ளி இறுதி வகுப்பு. தமிழாசான் யாப்பிலக்கணம் பற்றி விளக்கி வந்தார். ஓரிருவர் தவிர ஏனைய மாணவர்கள் கண்ணொடு வழி முகத்தினராய்ச் செவி மடுத்தவண்ணம் இருந்தனர்.

கோபாலன் எனப் பெயர் கொண்ட சேட்டை மிகுந்த மாணவன், 'தமிழாசானை அம்பலத்தில் நிறுத்துகிறேன்' என்று பக்கத்தில் கிசுகிசுத்து விட்டு எழுந்து நின்றான்.

'ஐயம் என்னவோ?' தமிழாசான் கேட்டார்.

'ஓர் ஐயம் ஐயா' என்ற கோபாலன் தொடர்ந்தான்: 'யாப்பு அணி, தளை' என்று பிராணனை விடுகிறீரே, இவற்றால் நம் வாழ்க்கைக்கு ஏதேனும் பயன் உண்டா? இதை நீங்கள் இவ்வளவு காலமாய்க் கட்டிக் கொண்டு மாரடிக்கிறீர்களே, ஒரு கவி புனையும் திறன் பெற்றிருக்கிறீர்களா? அப்படி இல்லாதபோது அவற்றை ஏன் படிக்க வேண்டும்?' என்று பொரிந்து தள்ளி விட்டு அமர்ந்தான்.

'எது பற்றி இயற்ற வேண்டும்?' தமிழாசான் அமைதியாகக் கேட்டார்.



'என்னைப் பற்றியே இருக்கட்டுமே' என்று கோபால னிடம், 'வெண்பாவா, விருத்தமா?' என்று கேட்ட ஆசிரியர், 'நீதான் கற்பூர வாசனை தெரியாதவ னுமிற்றே; வெண்பாவே பாடுகிறேன்' என்று தொடர்ந்தார்.

''கோபாலா! என்றும் குறித்துப் படியாமல்
மாபாவி போலாடி வந்தாயேல் - பூபாலர்
எல்லா துணைமதிப்பர் ஏதோ மதியற்றாய்
இல்லா ரெழுகேல் இனி''

பிறகு, கோபாலன் செயலுக்கு நானும் காரணம் எனத் தவறாக எண்ணிய ஆசிரியர், என்னை நோக்கி, 'அப்படி இது உனக்கு' எனச் செப்பியவாறு மற்றுமோர் வெண்பாப் பாடினார்

''நல்லபிள்ளை நீயென்று நானும் நினைத்திருக்கப்
பொல்லாத கள்ளனென்று காட்டிவிட்டாய் -
எல்லையிலாக்
குறும்புசெய்து வாலாட்டின் குட்டிடவே ஆலைவாய்க்
கரும்பாகச் செய்திடுவேன் காண்!''

மாணவர்கள் கைதட்டலுக்கு எல்லையே இல்லை. கவி மூலம் எங்களிருவர் தலையிலும் தமிழாசான் குட்டாமல் குட்டிய காட்சி பசுமரத்தாணியாய்ப் பதிந் துள்ளது.

- மைசூர் வி. நாச்சிமுத்து

## தேர்தல் தண்டனை !

பொதுத் தேர்தல் 1937ல் நடைபெற்ற நேரம். ஒரு வாரம் பள்ளிக்கு விடுமுறை விட் டார்கள். நானும் விசுவநாதன் என்ற என் வகுப்பு மாணவனும் காங்கிரஸ் அபேட்சகர் சார்பில் வோட்டு வேட்டையாடினோம். ஒரு வாரம் தேர்தல் பிரசார வேலையைக் கடுமை யாகச் செய்தோம்.

தேர்தல் முடிந்தது. காங்கிரஸ் அபேட்ச கர் எங்கள் ஆதரவாளர் திரு எஸ். ராம நாதன் அவர்கள் பெரும்பான்மையான வோட்டு வித்தியாசத்தில் வெற்றி பெற்றார். அமைச்சராயிருந்த, ஜஸ்டிஸ் கட்சியினரான திரு முத்தய்யா முதலியாரைத் தோல்வி யுறச் செய்த இவரே அப்போது அமைக்கப் பட்ட ராஜாஜி அவர்களின் மந்திரி சபையில் அமைச்சரானார். தேர்தல் வெற்றி கேட்டு நாங்கள் மகிழ்ச்சிக்கடலில் மிதந்தோம்.

விடுமுறைக்குப் பிறகு பள்ளி திறந்த முதல் நாள் ஆங்கில வகுப்பில், ஆசிரியர் குறிப்பாக என்னைக் கேள்விகள் கேட்டார். ஒரு வாரம் புத்தகத்தைக் கையில் எடுக்காமலிருந்ததால் என்னால் பதில் சொல்ல முடியவில்லை. அடுத்து விசுவநாதனைக் கேள்வி கேட்க அவனும் விழித் தான். ''படிப்புக்கு உங்களுக்கு நேரம் ஏதடா? எலெக்ஷன் வேலையா செய்கிறீர்கள்? ஊர் சுற்றிப் பயல்களா?'' என்று இட்டி விட்டு எனக்கும் அவனுக்கும் ஆறு பிரம்படி கொடுத்து இருவரையும் பெஞ்சின் மேல் நிற்க வைத்தார்.

தியாகிகளைப் புடைத்தெடுக்கும் போலீஸ் குண்டாந்தடியடிகளுக்குச் சமானமாக அந்த ஆறு பிரம்படிகளையும் ஏற்றோம். சிறையில் ஆறு மாதங்கள் தலைவர்களுக்குக் கிடைக்கும் சிறைத் தண்டனை போல் அந்த முக்கால் மணி நேரம் பெஞ்சின் மேல் நிற்கும் தண்டனையை ஏற்றோம். கொள்ளைப் பெருமை எங்களுக்கு !

— குத்தாலம் வி. சம்பந்தன்

## துயரத்தில் புன்னகை

ஒரு நாள் மாலை வகுப்பு நடந்துகொண்டிருந்த பொழுது ஓர் அறிக்கை வந்தது. அதில் பள்ளியின் முன்னாள் தலைவர் ஒருவர் தவறிவிட்டதால் அனுதா பக் கூட்டம் நடைபெறும் என்றும், அதற்காக மாணவர்களும் பள்ளி முடிந்தவுடன் ஹாலுக்கு வந்து கூட வேண்டும் என்றும் கூறியிருந்தது.

அதன்படி எல்லா மாணவர்களும் ஹாலுக்கு வந்து சேர்ந்தோம். கூட்டம் தொடங்குவதற்கு முன் உபாத்தியாயர்கள் எங்களிடம், இது அனுதாபக் கூட்டம் என்றும், அதனால் பேச்சாளர்கள் பேசி முடிந்ததும் கைதட்டிப் பாராட்டுதல் செய்யக்கூடாது என்றும் கண்டிப்பாகக் கூறியிருந்தார்கள்.

பல்வேறு உபாத்தியாயர்கள் இறந்துபோன பிரின்ஸிபாலின் திறமை, சேவை, பள்ளிக்கூடத்தை நடத்திய விதம் ஆகியவற்றைப் பலவாறாகப் புகழ்ந்து பேசி, அன்னாரின் ஆத்மா சாந்தியடைய வேண்டும் என்றும் பேசினார்கள்.

கடைசியில், புதிய பிரின்ஸிபால் எழுந்து நின்று, ''மாணவர்களே, இறந்துபோன பிரின்ஸிபால் ஞாபகார்த்த தினமாக நாளை பள்ளிக்கூடம் விடு முறை'' என்று கூறினார். அவ்வளவுதான், எங்களுக்கு உற்சாகம் கரைபுரண்டோடியது. என்ன செய்கிறோம் என்பது தெரியாமல் உற்சாகமாகக் கைதட்டி ஆர்ப்பாட்டம் செய்துவிட்டோம்.

இதைக்கண்டபொழுது உபாத்தியாயர்களுக்கு, ஏன், பிரின்ஸிபாலுக்குக்கூட எவ்வளவோ கட்டுப்படுத்தி யும் முகத்தில் புன்னகை வந்து விட்டது.

- எஸ். ஏ. பத்மநாபன், பெங்களூர்

## சரியான தண்டனை !

அன்று கணக்கு வகுப்பின்போது ஆசிரியர் என்னை ஒரு சூத்திரத்தை விளக்கச் சொன் னார். நான் கணக்கில் மந்தமாக இருந்ததால் எனக்கு விளக்கத் தெரியவில்லை. என்னை அடுத்து அமர்ந்திருந்த கிருஷ்ணமூர்த்தி என்பவனிடம் கேட்டார். அவன் சரியாகக் கூறினான். ஆசிரியர் என்னை நன்றாக வெளுத்து வாங்கி விட்டார். நான் ஆசிரியரிடம் கோபப் படவில்லை. என்னைக் காட்டிக் கொடுத்த அவனைப் பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்று துடித்தேன். இடைவேளையின் பொழுது ஒருவரும் அறியாமல் அவனுடைய மேஜையிலிருந்து புத்தகங்களை எடுத்து அருகி லிருக்கும் தண்ணீர்த் தொட்டியில் எறிந்து விட்டேன். அன்று மாலை எனது உயிர் நண்பனான பாலு என்னைத் தேடி வந்தான். அவன் முகம் வாடியிருந்தது. அழுது கொண்டே ''சௌம்யநாராயணா! நேற்று நான் உன்னிடமிருந்து இங்கிலீஷ் நோட்டை யும் தமிழ் நோட்டையும் வாங்கிப் போனே னல்லவா? இடைவேளையின் போது எல்லா வற்றையும் எழுதி முடித்துவிட்டுக் கிருஷ்ண மூர்த்தியின் மேஜையில் வைத்தேன். இடை வேளைக்குப் பிறகு அதை உன்னிடம் கொடுத்து விடுவதற்காக அவனுடைய மேஜை முழுதும் தேடினேன். ஆனால் அது அகப்படவில்லை'' என்றான். உடனே எனக்கு எல்லாம் புரிந்து விட்டது. நான் ஆத்திரத்தி னால் கிருஷ்ணமூர்த்தியின் மேஜையிலிருந்த என் நோட்டுப் புத்தகங்களையே நோட்டில் பெயரைப் பாராமல் தண்ணீர்த் தொட்டி யில் போட்டு விட்டிருந்தேன் !

— வி. பி. சௌம்யநாராயணன், பம்பாய்

---

பரிசுத் தொகை ஒன்பது கடிதங்களுக்கும் பிரித்து வழங்கப்பட்டது — ஆசிரியர்

## கவலை தீர... ...இருபது பைசா!



இங்கிலாந்தில் இருபது பைசா செலவு செய்தால் தொலை பேசி மூலம் உங்கள் மனக் கவலைகளைத் தீர்த்துக் கொள்ள வழிகளைக் கேட்டு அறியலாம். நீங்கள் எவ்விஷயமாகக் கேட்டாலும் பதில் கிடைக்கும். சிகரெட் பிடிப்பதை நிறுத்த என்ன யோசனைகள் என்று ஒரு நெம்பரில் கேட்டறியலாம். காதுக்கினிய கானம் கேட்க ஓர் எண். கதை கேட்க ஓர் எண். இப்படி நீங்கள் கேட்க வேண்டிய ஒவ்வொரு விஷயத்துக்கும் ஒரு டெலிபோன் எண் கொடுக்கப்பட்டிருக்கும். சுவையான உணவு சமைப்பது எப்படி என்பது பற்றித் தினமும் பல ஆயிரக்கணக்கான பெண்கள் கேட்டுத் தெரிந்து கொள்கின்றனர். எல்லாவற்றுக்கும் டெலிபோன் கட்டணமான இருபது பைசா தான் செலவு. கதையிலிருந்து அரசியல் வரை எல்லாம் அறியலாம். இன்னும் ஆச்சரியகரமான செய்தி என்னவெனில், இருபது பைசா செலவு செய்து தொலைபேசி மூலமாகவே சுருக்கெழுத்துப் பயிலலாம்!

ஆதாரம்: ஸண்டே ஸ்டாண்டர்ட்
தகவல்: சம்பத் குமார்

## பெயர்கள் பலவிதம்!



நமது நாட்டில் குழந்தை பிறந்த பத்தாம் நாள் பெற்றோர்கள் அந்தக் குழந்தைக்குப் பெயர் சூட்டுவர். இவ் விஷயத்தில் பல நாடுகள் விநோதமான பழக்கங்களைப் பின்பற்றுகின்றன.

மலேயாவிலும், ஆப்பிரிக்காவிலும் வாழும் மக்கள் குழந்தையின் முன்னால் பல பெயர்களைக் கொண்ட பட்டியலைப் படிப்பார்கள். ஏதாவது ஒரு பெயரைப் படித்ததும் குழந்தை கத்தினாலோ அல்லது சிரித்தாலோ அந்தப் பெயரை அக்குழந்தைக்கு வைத்து விடுவார்கள்.

மலேயாவில் உள்ள சில பூர்வீகக் குடிகள் மரத் துண்டுகளில் பெயர்களை எழுதி அவற்றில் ஏதாவது ஒன்றை எடுக்கும்படி குழந்தையின் முன்னால் வைத்து விடுவார்கள். குழந்தை எந்தப் பெயரை எடுக்கிறதோ, அதையே அதற்குச் சூடுவார்கள்.

எஸ்கிமோக்களின் முறை மிக விநோதமானது. சொந்தக்காரரோ, நண்பரோ யாராவது ஒருவர் கர்ப்பிணியின் வயிற்றின் மீது கையை வைத்து, ஒரு பெயரைச் சொல்வார். பிறகு பிறக்கும் குழந்தை ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் அந்தப் பெயரே இடப்படுகிறது.

செவ்விந்தியர்களில் 'ஓடும் தண்ணீர்', 'உட்கார்ந்திருக்கும் காளை' என்றெல்லாம் பெயரை உடையவர்கள் இருக்கிறார்கள். காரணம், குழந்தை பிறந்ததும் தந்தை எந்தப் பொருளை முதன் முதலில் பார்க்கிறாரோ, அதன் பெயரையே குழந்தைக்கு இடுவது இவர்களது பரம்பரை வழக்கம்.

ஆதாரம்: டிட் பிட்ஸ்
தகவல்: வி. சம்பத்குமார்

## இலட்சத்துக்குமேலே!

தமிழ் மொழியில் எத்தனை சொற்கள் உள்ளன என்று கடைசியாகக் கணக்கிடப்பட்டது 1939ம் வருஷத்தில் தான். 1,17,762 சொற்கள் வரை தொகுக்கப்பட்டன. அதன் பிறகு நாளதுவரை இன்னும் ஏராளமான சொற்கள் தமிழில் கலந்திருக்கலாம்.

தகவல்: கரும்பு.




---

சீட்டு சொன்ன பலன்-விடை:

அன்று காலையில்தான் அவர் தமது ஆயுள் இன்ஷ்யூர் செய்து முதல் தவணைப் பணத்தைக் கட்டியிருந்தார்!

❖❖❖ ❖❖❖ ❖❖❖ ❖❖❖

## 'அடடா ... போனேன்!'



பிரபல பாரசீகக் கவிஞரான சா அதிக்கு எதிரிகள் ஏராளம். எத்தனையோ முறை அவரை அவமானப்படுத்த முயன்று தோல்வியடைந்துள்ளனர். ஒரு சமயம் சா அதி மிகவும் நோய்வாய்ப்பட்டிருந்தார். நண்பர்களெல்லாம் அவர் படுத்த படுக்கையாய் ஆகிவிட்டதை எண்ணி மிகவும் வருந்தினராம். அவருடைய எதிர்ப்பாளர்களில் ஒருவர் அதுசமயம் அவரைப் பார்க்க வருவது போல் வந்து, அவர் நோயுற்றிருப்பது குறித்து வருத்தம் தெரிவிப்பது போல் பேசிவிட்டு இறுதியில், ''அப்படியே நீங்கள் மேலுலகம் போனாலும் அங்கே என் பாட்டியை நான் மிகவும் விசாரித்ததாகக் கூறுங்கள்'' என்று கிண்டலாகக் கூறினராம். உடனே சா அதி, ''அடடா, நீங்கள் கேட்ட உதவியை என்னால் செய்ய முடியாதே'' என்று வருத்தத்தோடு கூறினர். வந்தவர், ''ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?'' என்று கேட்டதற்குக் கவிஞர் சொன்னாராம்: ''அப்படியே நான் போனாலும் சொர்க்கத்துக்கு அல்லவா போவேன்!'' என்று. — செல்வன்

# இந்தியன் பாங்க் லிமிடெட், மதராஸ்

**59-வது வருடாந்தரக் கூட்டத்தில் இந்தியன் பாங்க் லிமிடெட்டின் டைரக்டர் குழுவின் தலைவர் டாக்டர் ராஜா ஸர் முத்தய்ய செட்டியாரின் தலைமை உரையிலிருந்து சில பகுதிகள்**

1965ம் ஆண்டில் இந்தியன் பாங்கியின் அலுவல்கள் எல்லாத் துறையிலும் முன்னேற்றம் கண்டிருக்கின்றன. டிபாஸிட்டுகள் ரூ. 54.80 கோடியிலிருந்து ரூ. 58.35 கோடிக்கு உயர்ந்தன. கடன் வழங்கப்பட்ட தொகையும் ரூ. 34.19 கோடியிலிருந்து ரூ. 37.19 கோடிக்குப் பெருகியது. முதலீட்டுத் தொகைகளும் ரூ. 15.19 கோடியிலிருந்து ரூ. 17.08 கோடியாக உயர்ந்தன. மொத்த வருமானம் ரூ. 3.59 கோடியிலிருந்து ரூ. 4.15 கோடிக்கு அதிகரித்தது. அத்துடன் செலவுகளும் 16 சத விகிதம் கூடுதலாயின. இது பெரும்பாலும் சேமிப்புக்களை ஈர்ப்பதற்காக அதிக வட்டி கொடுத்ததால் ஏற்பட்டவை. எனினும் நிகர லாபத்தில் உயர்வே கண்டிருக்கிறது. நிதானத்துடனேயே செயலாற்றும் பழக்கமுள்ளவர்களாகையால், கையிருப்புகளும் போதிய அளவுக்கு உயர்ந்த விகிதத்திலேயே ஆண்டு முழுவதிலும் வைத்துக் கொள்ளப்பட்டன.

கிளைகள் விஸ்தரிப்பதையும் ஜாக்கிரதையுடனேயே பாங்க் கவனித்து வந்திருக்கிறது. 1965ம் ஆண்டில் செங்கல்பட்டு, மசூலிப் பட்டணம், ஸியோன் (பம்பாய்) ஆகிய இடங்களில் கிளைகள் ஆரம்பிக்கப்பட்டன. 1965 டிசம்பர் 15ந் தேதியிலிருந்து மன்னார்குடி பாங்கி லிமிடெட்டின் ஆஸ்தி, கடன் எல்லாவற்றையும் இந்தியன் பாங்கி எடுத்துக் கொண்டுவிட்டது. இதனால் அந்தப் பாங்கியினுடைய மன்னார்குடி, கூத்தாநல்லூர், வடலூர், நீடாமங்கலம், மடுக்கூர், திருத்துறைப் பூண்டி, வேதாரண்யம், கிளைகள் எல்லாம் இந்தியன் பாங்கின் கிளைகளாகவே செயல்படத் தொடங்கி விட்டன. ஆண்டு இறுதியில் இந்தியன் பாங்கியின் கிளைகளின் எண்ணிக்கை மொத்தம் 168.

பாங்குத் தொழில் லாபத்தைப் பொறுத்தவரையில் 1965ம் ஆண்டு ஏமாற்றத்தை அளித்தது என்றே கருத வேண்டும். மொத்த வருமானம் உயர்ந்தாலும், டிபாசிட்டுகளுக்கு அதிக வட்டி கொடுபடுவதன் மூலம் செலவு ஏறிக் கொண்டே போயிற்று. இந்தப் போக்கு நல்லதல்ல. கடன் வழங்கப்படும் வட்டி விகிதம் 10 சத உச்ச கட்டத்தை அடைந்து விட்டது. இதை மேலும் உயர்த்த முடியாது. டிபாசிட்டுகளுக்குக் கொடுக்க வேண்டிய வட்டிமட்டும் உயர்ந்துகொண்டே போகிறது. மக்களிடமுள்ள சேமிப்புத் தொகைகளும், விலைவாசிகளின் உயர்வாலும், வரி உயர்வாலும், அன்னியுடிக் கட்டாய சேமிப்புகளாலும் குறைந்து கொண்டே போவதால் டிபாஸிட்டுகள் பெருகவும் வாய்ப்புக் குறைவு. இந்த நிலைமையில் கிராமப்புறங்களிலும் பாங்கி வசதிகள் இல்லாத அல்லது குறைவாக உள்ள இதர நகரப் பகுதிகளிலும் கிளைகள் நிறுவி சேமிப்புக்களைத் திரட்டுவதற்கு ரிசர்வ் பாங்க் உற்சாகம் அளிக்க வேண்டும். புதுக் கிளைகள் லாபகரமாக இயங்கச் சில காலம் பிடிக்கும். அதுவரையில் செலவுகளைச் சமாளிப்பது பாங்குகளுக்குக் கஷ்டமாகவே இருக்குமாகையால் கிராமப்புறங்களுக்காக ஆகும் செலவில் ஒரு பகுதியை ரிசர்வ் பாங்கி ஏற்றுக்கொள்ள முன்வந்தால் கிளைகள் வேகமாகப் பரவ வகை வகுத்ததாக ஆகும்.

வியாபாரம் சுறுசுறுப்படையும் காலங்களில் தேவைப்படும் அதிகப்படி கடன் வசதிகளுக்காக ரிசர்வ் பாங்கியிலிருந்து மற்ற பாங்கிகளால் வாங்கப்படும் தற்காலிக கடன்களுக்கு அந்தந்தப் பாங்கிகளின் ரொக்கக் கையிருப்பு விகிதத்தைப் பொறுத்து உபரி வட்டி வசூலிக்கப்படுகிறது. இதனால் தொழில்களில் உற்பத்தி தடைபெறுவதுடன் பல தொழில்களுக்கு வட்டிச் செலவுகள் அதிகமாகிறது. சலுகை பெற்ற தொழில்கள் சலுகை பெறாத தொழில்கள் என்ற பாகுபாடும் செய்யப் பட்டிருப்பதால், சலுகை பெறாத தொழில்களுக்குக் கடன் வசதிகள் கிடைப்பது தடைபடுகிறது. ஆகவே தாங்கள் வழங்கும் கடன்களுக்கு உபரி வட்டி வசூலிக்கும் முறையை ரிசர்வ் பாங்கி ரத்து செய்து விடுவது தொழில் உற்பத்திப் பெருக்குக்கு ஊக்கமூட்டும்.

இந்த ஆண்டில் சென்னை வடக்கு பீச் சாலையில் பாங்கின் புதிய கட்டிட வேலை வேகமாக நடந்து கொண்டு வருகிறது. 1967ம் ஆண்டு பாங்கியின் வைர விழா ஆண்டு. இந்த விழாவைக் கொண்டாட வேண்டிய காலத்துக்குள் புதுக் கட்டிடம் பூர்த்தியாகி விடும் என்று நம்பப்படுகிறது. பெங்களூரில் நமது பாங்கியின் சொந்தக் கட்டிடம் பூர்த்தியாகிவிட்டது. பெங்களூர் பிரதான கிளை ஆபீஸ் வெகு சீக்கிரத்திலேயே இப் புதுக் கட்டிடத்தில் செயலாற்றத் தொடங்கிவிடும்.

முடிவில், போர்டில் இருக்கும் என் சகாக்களுக்கு, அவர்களின் மனப்பூர்வமான ஒத்துழைப்புக்காக என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். மேலும் பாங்கின் தொடர்ந்த வெற்றிக்குக் காரணமாயிருந்த காரியதரிசி, உத்தியோகஸ்தர்கள், மற்றும் இதரர்களுக்கு அவர்களின் சிரத்தைக்கும் விசுவாசத்துக்கும், டைரக்டர்கள் போர்டு சார்பில் போர்டின் பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். பாங்கின் ஸ்தல ஆலோசனைக் குழுக்கள் அளித்த ஆலோசனைக்காக அவைகளின் உறுப்பினர் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

1966ம் ஆண்டு இந்தியன் பாங்கிக்கு வளம் பெருகும் ஆண்டாகத் திகழட்டும்.

---

(இது வருடாந்தரக் கூட்டத்தின் நடவடிக்கைக் குறிப்பு அல்ல.)



# சேவைக்கு ஒரு சகோதரி

மோனிகா ஃபெல்டன் - அநுத்தமா

## 5

இந்தியாவுக்கு வந்தது முதல் இது வரை யாருமே தம்மை இந்திய சம்பிரதாயப்படி வணங்குவதைக் காணாத கோமகன் ஒன்றும் புரியாதவராய், இரண்டடி பின்னுக்கு நகர்ந்தார். அந்தக் கூட்டத்தில் நிசப்தம் நிலவியது. எல்லோரும் சிலையாக மாறி வெறித்து நோக்கிக் கொண்டிருந்தனர்.

சுப்புலட்சுமி நிமிர்ந்து தன் இடத்துக்குத் திரும்ப விருந்தாள். அப்போது கோமகன், என்ன செய்ய வேண்டும் என்பது அவளுக்குப் புரியவில்லை போலும் என்று நினைத்தவர் போல, ஒரு வசீகரப் புன்னகையுடன், மறுபடியும் முன்னே வந்து கையை நீட்டினார்.

சுப்புலக்ஷ்மி மீண்டும் வணங்கினாள். மீண்டும் ஒரு முறை கையைக் குவித்து மெல்லிய குரலில் 'நமஸ்காரம்' என்றாள்.

கோமகன் திரும்பவும் பின்னுக்கு நகர்ந்தார். சுப்புலக்ஷ்மி நிமிர்ந்ததும் மூன்றாவது முறையாகக் கைகுலுக்க முன்வந்தார். அதே கணத்தில் சட்டென்று அவள் சிந்தனைப் போக்கைப் புரிந்து கொண்டவராக இரு கைகளையும் சேர்த்துத் தாமும் வணங்கினார். தமக்குக் கிடைத்த அந்த இந்திய சம்பிரதாய வணக்கத்துக்கு அதே போல மிகவும் சரியான முறையில் அவர் பதில் அளித்து விட்டார்.

எல்லாரும் மெய்ம்மறந்து போனார்கள். மறுநாள் காலை இந்தக் கதை வெளியே பரவியபோது சென்னை நகர் முழுவதும் சகோதரி சுப்புலக்ஷ்மியைப் பற்றின பேச்சாகவே இருந்தது. அவளுடைய சில நண்பர்களும் உறவினர்களும் இந்திய தேசியக் காங்கிரஸின் ஆதரவாளர்களாக இருந்தாலும், அவள் மட்டும் எப்போதும் அரசியல் விஷயங்களில் தலையிடுவதில்லை என்பதை எல்லோரும் அறிவார்கள். இருந்தும் கூட, அவள் மிகவும் உன்னதமான முறையில் தேசியப் பண்பைக் காட்டி விட்டாள். மிஸ் பிரேகர் தன்னுடைய ஒரு கடிதத்தில் எனக்கு விவரித்திருந்தபடி கோமகனின் பதில் வணக்கம் அவரை நிந்தித்தவர்களெல்லாம்கூட இதற்காக அவரைப் புகழும்படி செய்து விட்டது.

"உனக்கு எப்படித்தான் அவ்வாறு செய்யத் தோன்றியதோ?" என்று சகோதரியைப் பலர் கேட்டார்கள்.

அந்தக் கேள்விதான் அவளுக்குப் புதுமையாகப் பட்டது. மிகவும் சகஜமான குரலில் அவள் பதில் கூறினாள்: "அரச குடும்பத்தைச் சேர்ந்த ஒரு ராஜகுமாரனுக்கு மரியாதை காட்டும் முறை அதுதான். மேலும், ஓர் ஆடவனின் கையை ஒருகாலும் நான் தொட மாட்டேன்."

ஃ ஃ ஃ

"சுப்புலக்ஷ்மி! இதற்கென்ன அர்த்தம்?" என்ற கேள்வியைக் கேட்கும்போது மிஸஸ் ட்ரைஸ்டேலின் குரல் அதிகார தோரணையில் கடுமையாக இருந்தது. அவள் எதிரே ஒரு தினசரிப் பத்திரிகை பிரிக்கப்பட்டிருந்தது. அதை எதிர்ப்புறமாகத் தள்ளி, "பதில் சொல்வதற்குமுன் இதைப் படித்துப் பார்ப்பது நல்லது" என்றாள்.

சகோதரி தாளை வாங்கிப் பார்த்தாள். ஒரு பத்தி சிவப்புப் பென்சிலால் கோடிட்டிருந்தது. இந்திய தேசிய காங்கிரஸின் கீழ் நடந்த ஓர் அரசியல் கூட்டத்தின் விவரம் அதில் கண்டிருந்தது. பேசியவர்கள் எல்லோரும் பிரமுகர்கள். அவர்களில் அநேகம் பேர்கள் தன் தகப்பனாருக்கு அறிமுகமானவர்கள் என்பது சுப்புலக்ஷ்மிக்குத் தெரியும். கடைசி வாக்கியம், "ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியும் பேசினார்கள்" என்று இருந்தது.

மிஸஸ் ட்ரைஸ்டேலின் கடுமையான நோக்கை நிமிர்ந்து பார்க்கையில் சுப்பு லக்ஷ்மியின் உடலில் ஜீவம் ஊற்றெடுத்துப் பாய்ந்தது. "இந்த நகரத்தில் சுப்புலக்ஷ்மி என்று பெயர் கொண்டவள் நான் ஒருத்தி தானா...?"

"அது நீயல்லவா?"

"நிச்சயமாக இல்லை."

மிஸஸ் ட்ரைஸ்டேல் மன்னிப்புக் கோரினாள். இந்தியாவுக்கு வந்ததிலிருந்தே அவளுக்குச் சுதந்திர இயக்கத்தில் அநுதாபமிருந்தது. அரசாங்க உத்தியோகம் பார்ப்பதால் தன் நெருங்கிய நண்பர்களிடையே தவிர அரசியல் விஷயங்களைப் பற்றி வேறு யாரிடமும் அவள் பேசுவதில்லை. அதிலும் இப்போது, தேசிய இயக்கத்தை அமுக்கி விடுவதற்காக அரசாங்கம் தன்னால் இயன்றதையெல்லாம் செய்து கொண்டிருக்கும் இந்தச் சமயத்தில் மௌனமாக இருப்பது முன் எப்போதையும்விட மிகவும் அவசியமாகி விட்டது. சுப்புலக்ஷ்மியிடம் மிஸஸ் டிரைஸ்டேலும் தாங்கள் செய்யும் நற்பணிக்கு ஊறு நேரும் வகையில் நடந்து கொள்வது மடத்தனமாகும் என்று நம்பினர். அரசியல்வாதிகள் கோரும் அரசியல் சுதந்திரம், இந்தியாவின் மக்கள், அதிலும் முக்கியமாகப் பெண்கள், தங்கள் திறமைகளை உணர்ந்து, கல்வி அறிவு பெற்று, தங்கள் எதிர்கால வாழ்வை வகுத்துக் கொள்ளும் வலிமை பெற்றாலன்றிப் பயன்படாது என்பதை அவர்கள் இருவரும் தெளிவாக உணர்ந்திருந்தார்கள்.

இந்த வகையில் பார்க்கும்போது அவர்களும் சுதந்திரப் போராட்டத்தில்தான் முழு மனத்துடன் ஈடுபட்டிருந்தார்கள்.

இல்லத்தில் இருந்த பெண்கள் அவரவர்களுக்குப் பிடித்தமான வாழ்க்கை முறையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள். ஒரு சமயத்தில் முடிவில்லாத் துர்ப்பாக்கியத்துக்கே பிறந்தவள் போல் தோன்றிய சீதாவும் தன் வருங்காலத்தை நிர்ணயித்து விட்டாள். அவளுடைய தீர்மானம் அனைவரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

எஸ். எஸ். எல். ஸி. தேர்வின் முடிவுகள் வெளிவந்தவுடன் சகோதரி சீதாவைப் பார்த்து, "நீ ரொம்ப நன்றாகப் படித்துப் பாஸ் பண்ணியிருக்கிறாய் என்பதைக் கண்டு எங்கள் எல்லாருக்கும் சந்தோஷம் அம்மா" என்றாள். சீதா புத்திசாலிப் பெண் மட்டுமல்ல. கடந்த ஓராண்டு காலத்தில் அவள் நன்கு வளர்ந்து வசீகரிக்கும் அழகுடன் இன்று திகழ்ந்தாள். அவளது தங்கை இந்துவைப் போல் அவள் எப்போதும் சந்தோஷம் ததும்பும் சுபாவம் உடையவள் அல்ல. சீதா இன்னும் நிதானமானவள். ஆயினும், அவள் இப்போது சந்தோஷமாக இருந்தாள் என்பது தெளிவாகத் தெரிந்தது.

சகோதரி அவளுக்காக யோசித்திருந்த வருங்காலத்தைப் பற்றிப் பேசுகையில் அவள் அடக்கத்துடன் உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டாள்.

பிறகு திடமான குரலில், "நான் வெகு நாட்களுக்கு முன்பே தீர்மானித்து விட்டேன். நான் ஒரு டாக்டராக ஆக விரும்புகிறேன்" என்று கூறினாள்.

"டாக்டராகவா?"

"ஆமாம், அது என்னுடைய தந்தையின் விருப்பமுங்கூட. அவரை நான் ஆஸ்பத்திரியில் காணச் சென்ற போதெல்லாம் நாங்கள் என்னுடைய வருங்காலத்தைப் பற்றித்தான் ஆலோசிப்போம். நான் வைத்தியம் படிப்பதாக அவர் இறக்கும்முன் வாக்குத் தந்தேன்."

வளர்ந்து வரும் ஆச்சரியத்துடன் அப்பெண்ணையே பார்த்துக் கொண்டிருந்தாள். அங்கு வந்த எல்லா இளம் விதவைகளுக்கும் அவ்வப்போது தங்கள் மனத்தில் உள்ளதைக் கூறிக் கொள்ள ஒருவர் தேவையாக இருந்தது என்பதைச் சகோதரியின் அநுபவம் உணர்த்தியிருந்தது. அவர்களுடைய எந்த ரகசியமும் சித்தியிடமும் சகோதரியிடமும் பத்திரமாக இருக்கும் என்பதை அவர்கள் எல்லோரும் நன்கு உணர்ந்திருந்தார்கள். சீதா ஒரு தடவைகூட அவளுடைய இந்த ஆசையைப் பற்றித் தன்னிடம் பேசியதில்லை என்ற நினைப்பு சகோதரிக்கு மனத்தாங்கலையோ ஏமாற்றத்தையோ அளிக்கவில்லை. அதற்கு மாறாக, அப்பெண்ணின் தன்னடக்கத்தையும் விடாமுயற்சியையும் அவள் மிகவும் மெச்சினாள்.

சகோதரி சொன்னாள்: "உனக்கு உதவி செய்ய வேண்டுமென்று எனக்கு ஆசையாக இருக்கிறது. ஆனால் நீ விரும்புவது நடக்கக் கூடியதல்ல."

கல்லூரிக்குச் செலுத்த வேண்டிய கட்டணங்களையும் விடுதியில் தங்கியிருப்பதற்கான மற்றச் செலவுகளையும் சேர்த்துக் கொடுப்பது போன்ற உபகாரச் சம்பளம் அந்த வைத்தியக் கல்லூரியில் அளிக்கப்படவில்லை என்பது தெரியும். சீதாவிடம் அவள் இதைச் சொன்னாள். "தவிரவும், நீ வைத்தியத்துக்குப் படித்தால் பட்டம் பெறுவதற்கு ஆறு வருடங்கள் ஆகும். அதுவரை துணி மணி புஸ்தகம் மற்றும் பல சாமான்களுக்கு ஆகும் செலவை யார் ஏற்றுக் கொள்வார்கள்?"

"அதற்கு ஏற்கனவே ஏற்பாடாகி விட்டது" என்று சீதா நிதானமாகப் பதில் அளித்தாள்!

"என்ன சொல்கிறாய் நீ?"

"என்னுடைய தந்தை மரணப் படுக்கையில் இருக்கும்போது, என்னுடைய புக்ககத்தினர் என் வருங்காலத்துக்குப் பண வசதி அளிப்பதாக வாக்குக் கொடுத்திருப்பதாகக் கூறினார். பணம் எனக்குத் தேவைப்பட்டால், நான் அவர்களைக் கேட்க வேண்டியதுதான். உடனே அவர்கள் வாக்குத் தவறாமல் உதவி புரிவார்கள்" என்றாள் அவள்.

குழந்தைப் பிராயத்தில் விதவையான எந்தப் பெண்ணின் புக்ககத்தினரும் இவ்வளவு தாராள மனதுடன் நடந்து கொண்டதாகச் சகோதரி இது வரையில் கேள்விப்பட்டதே இல்லை.

சீதாவின் கல்யாணத்தின் போது அவள் புக்ககத்தினருக்குப் பெருந் தொகையை வரதட்சிணையாகக் கொடுத்திருந்தார் அவள் தந்தை. சம்பந்திகளுக்கும் — சீதாவை—

## நானும் ——————



## —— அமரலாமோ?

அன்று ஹௌரா ஸ்டேஷனிலிருந்து ராஷ்பிஹாரி அவென்யூவுக்குப் பஸ்ஸில் போய்க் கொண்டிருந்தேன். எதிர் ஸீட்டின் மத்தியில் ஒரு யுவதி அமர்ந்திருந்தாள். அவளுடைய இரு பக்கங்களிலும் ஸீட்டுகள் காலியாகவே இருந்தன. ஒரு முதியவர் அவளை அணுகிக் கேட்டார். (இங்கே பொது இடங்களில் யார் யாரோடு வேண்டுமானாலும் பேசலாம்) 'அம்மா, உன் பக்கத்தில் நான் அமர்ந்து கொள்ளட்டுமா? என்னை உன் தந்தை போலப் பாவித்துக் கொள்' என்றார்.

அதற்கு அவள் சம்மதித்தாள். அவரும் அமர்ந்து கொண்டார்.

இதைக் கவனித்துக் கொண்டிருந்தான் ஒரு கல்லூரி மாணவன். அவனும் அவளை அணுகிக் கேட்டான். 'என்னை உங்கள் சகோதரனாகப் பாவித்துக் கொண்டு நானும் உங்கள் அருகில் அமர அனுமதிப்பீர்களா ?' என்று கேட்டான்.

அவள் எழுந்து நின்றாள் சாவதானமாக. இருவரையும் பார்த்துக் கூறினாள். 'நீங்கள் என் தந்தை. நீங்கள் என் அண்ணன். ஆகையால் அப்பாவும் பிள்ளையும் நன்றாகச் சௌகரியமாக உட்கார்ந்து கொள்ளுங்கள். நடுவில் நான் எதற்கு?' என்று கூறி இறங்கி நடந்தாள். — எஸ். டி. ஆர்.

தங்கள் சின்னஞ்சிறு மருமகளை மிகவும் பிடித்திருந்தது. சீதாவின் கணவன் இறந்த பிறகு, அவள் தந்தை அவர்களைத் துக்கம் விசாரிக்கப் போனபோது, விதவையாகி விட்ட தன் சிறு பெண்ணுக்கு ஏதேனும் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று அவர் களைக் கேட்டுக் கொண்டிருந்தார். அவர்கள் அவ்வாறு கட்டாயம் செய்ய வேண்டிய ஒன்றும் இருக்க வில்லைதான். ஆனும் அவர்கள் தாராள மனமுடையவர்களாக இருந்தனர். சீதாவுக்கு எட்டாயிரம் ரூபாய் தருவதாக அவர்கள் ஒப்புக் கொண்டிருந் தார்கள். சீதாவுக்குத் தேவைப்பட்டபோது அத்தொகையை அவள் கேட்டுப் பெறலாம். இதை யெல்லாம் சீதா விவரித்ததும், "உன் மாமனாரின் பெயர் என்ன?" என்று சகோதரி கேட்டாள்.

"எனக்குத் தெரியாது!" என்றாள் சீதா.

கல்யாணத்தின் போது சீதா மிகவும் சிறியவளாகையால், அவளுக்குத் தெரி யாமல் இருப்பது சகஜம்தான். மரணத் தறுவாயிலிருந்ததால் அவள் தந்தை அவ ளிடம் அதைக் கூறத் தவறி விட்டதிலும் வியப்பில்லை. அவருடைய பிரிவு நெருங்கும் துக்கத்தில் கலக்கமுற்றிருந்த சீதா அவரிடம் அதைக் கேட்டுத் தெரிந்து கொள்ளாததும் இயல்பே.

"உன் கணவனின் பெயர் என்ன ?"

"எனக்கு அதுவும் நினைவில்லை."

"சரியாய்ப் போச்சு ! அப்படியானால் அவர்களை எப்படிக் கண்டுபிடித்துப் பணத் தைக் கேட்கப் போகிறாய்?" இந்தக் கேள்வி யைக் கேட்கும் போது சகோதரியின் குரலில் பொறுமையின்மையோ கோபமோ தொனிக்க வில்லை. "உன் புக்ககத்தினருக்குச் சம்பந்தப் பட்ட யாருடைய பெயராவது உனக்கு நினை விருக்கிறதா ?"

"நான்......." தயங்கினாள் சிறுமி.

"யோசித்துப் பாரம்மா."

அப்பெண் வெகு நேரம் மௌனமாக இருந்தாள். கடைசியில் ஒரு பெயர் நினைவு வந்தது. அது சர்வ சாதாரணமான ஒரு பெயர். அந்தப் பெயருடையவர்கள் ஆயிரக் கணக்கில் இருப்பார்கள். பெயருக்கு முன்னால் இருக்கும் 'இன்ஷியல்' எழுத்துக்கள்கூடச் சீதாவுக்கு நினைவு வரவில்லை. ஆயினும் அவர்கள் நம்பிக்கை இழக்கவில்லை. கப்பு லஷ்மியினுடைய ஒன்றுவிட்ட சகோதரன் கிருஷ்ணசாமி சீதாவின் தந்தை முன்புவசித்து வந்த அதே ஊரில்தான் இப்போதும் போலீஸ் சூப்பரின்டென்டெண்டாக இருந் தார். யாரேனும் உதவி செய்ய முடியுமானால் அது கிருஷ்ணஸ்வாமிதான்.

சகோதரி அவருக்கு எழுதினாள்.

தனக்கு அவரை நன்றாகத் தெரிந்திரா விட்டாலும், சகோதரி யாரைக் குறிப்பிடு கிறாள் என்று அடையாளம் புரிந்து கொள்ள முடிந்தது என்று கிருஷ்ணசாமி பதில் எழுதி னார். அவர் விசாரித்ததில், அந்த மனிதரும் அவருடைய எல்லா உறவினர்களும் இப் போது கோயம்புத்தூரில் வசிப்பதாகத் தெரிந் தது. துர்ப்பாக்கியவசமாக அவர்கள் முகவரியை அறிந்தவர்கள் யாரும் கிடைக்க வில்லை. சீதாவின் அதிர்ஷ்டத்தில் நம்பிக்கை வைத்து முன்பின் தெரியாத அந்த மனிதருக்கு எல்லா விவரங்களையும் சகோதரி எழுதினாள். உறையில் முகவரி எழுதுகையில் மீண்டும் அவ ளுக்கு யோசனையாகி விட்டது. கோயமுத் தூர் வர்த்தகத் துறையில் வளர்ந்து கொண்டே வரும் நகரம். கடந்த சில ஆண்டுகளில் அநேகம் புது மனிதர்கள் அங்கு குடியேறி யிருந்தனர். அவர்களில் ஒருவருக்கு எழுதிய கடிதம் தெருவின் பெயரோ, வீட்டின் இலக்கமோ தராமல் எழுதப்படும் கடிதம் — எப்படித்தான் அவருக்குப் போய்ச் சேர முடியும்? ஆயினும் எப்படியோ அது போய்ச் சேர்ந்தது ! அவர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது !

அந்தக் கடிதத்தைத் தபாலில் சேர்த்த இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் சீதாவின் மாமனாரிடமிருந்து தந்தி ஒன்று வந்தது. அவரும் அவர் மனைவியும் அன்று இரவே சென்னைக்குப் புறப்படுவதாக அதில் கண்டிருந்தது !

(தொடரும்)

**என் பாரி மிட்டாய் எல்லாத்தையும் கொடுன்னு அவன் வம்புக்கு வந்தாம்மா !**

சூப்பயல்! அவனுடைய பங்கை இன்னொருவன் கொண்டுபோக விடுவானா என்ன!... ருசி மிக்கதும் புஷ்டி சத்து நிறைந்ததுமான பாரி மிட்டாய்கள் என்றால் சிறுவர் முதல் பெரியவர்வரை யாருக்குமே அடக்கமுடியாத ஆவல் உண்டாகத்தான் செய்கிறது! எந்த சந்தர்ப்பத்திலும் பாரி மிட்டாய்களை நீங்கள் ருசித்துச் சுவைத்து அநுபவிப்பீர்கள். அவற்றைச் சில்லரையாகவோ அல்லது அழகுவண்ண டின்களிலோ வாங்கிப் பிறருடன் சேர்ந்து ருசித்து மகிழுங்கள். இனிப்பான பாரி மிட்டாய்கள் வாழ்க்கையை இன்பமயமாக ஆக்குகின்றன.




பாரிஸ்
-உயர்தர மிட்டாய்
தயாரிப்பாளர்கள்

சுவைத்திருக்கிறீர்களா? சூப்பர் பட்டர் ஸ்காட்ச் — ஹெல்த் ப்ருட்ஸ் — டேவன் க்ரீம் டாபிகள் — ஜிஞ்ஜர் கேப்ஸ்.
பாரீஸ் கன்பெக்ஷனரி லிமிடெட், மதராஸ்

JWT-PRS-345

# இது ரகசியம்...



## எஸ். தேவகி

சரித்திர நெடுங்கதைகளில் எந்த ராஜா எந்தப் பட்டணம் போனாலும் சரி; அவனைத் தேடிக் கொண்டு ஓர் ஆள் வந்து சேருவான். பெரும்பாலும் அவன் ஒற்றர்படைத் தலைவனாகவோ அல்லது அந்தத் தலைவனின் நம்பிக்கைக்குப் பெரிதும் பாத்திரமானவனாகவோ இருப்பான். அப்பேர்ப்பட்ட ஆசாமி, யாரும் பார்க்காதபோது தன் இடுப்புக் கச்சையை அவிழ்த்து அதிலிருந்து ஓர் ஓலைச் சுருளைப் பயபக்தியுடன் எடுத்து அரசனிடம் கொடுப்பான். அதைப் பிரித்துப் படிக்கும் மன்னனின் முகம் கோபத்தால் சிவக்கும்; அல்லது ஏமாற்றத்தால் வாடும்; அல்லது மகிழ்ச்சியால் மலரும். இப்படி ஏதாவதோர் அதிசயத்தை நிகழ்த்தக்கூடிய ரகசியச் செய்தி அந்த ஓலையிலே இருக்கும். சரித்திரக் கதைகளைப் படித்துப் படித்துப் பழக்கப்பட்ட நமக்கெல்லாம் இது சர்வ சாதாரண விஷயமாகத் தோன்றும். ஆனால், உண்மையில் பெரும் சாம்ராஜ்யங்கள் தோன்றவும், வீழ்ச்சியுறவும், அரசியல் அரங்கில் வியக்கத்தக்க மாற்றங்கள் நிகழவும் இத்தகைய ரகசியச் செய்திகள்தான் காரணமாக இருந்திருக்கின்றன என்பதை நினைவில் வைத்துக் கொண்டால், அத்தகைய செய்திகளின் அருமை நமக்கு நன்றாகப் புலப்படும்.

இம்மாதிரியான ரகசியச் செய்திகளை எப்படி அனுப்புகிறார்கள்? உள்ளதை உள்ளபடியே எழுதியனுப்பினால், வேறு யாரிடமாவது அல்லது எதிர்த்தரப்பிடமே அது சிக்கி விட்டால் என்ன செய்வது?.... இங்கேதான் 'கோட்' என்று சொல்லப்படும் குழூஉக் குறிகள் உபயோகப்படுகின்றன. அதாவது செய்தியை அனுப்புபவர்களுக்கும் அதைப் பெறுபவர்களுக்கும் மட்டுமே தெரிந்த—புரியக்கூடிய — சங்கேத பாஷையை உபயோகப்படுத்த வேண்டியிருக்கிறது.

பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது, ''கரா கம கன் கழு கட் கடா கள்!'' என்று எத்தனை பேர்கள் சங்கேத மொழியில் பேசியிருக்கிறோம்! ''எழுமீன் இனமீன் வன்மீன் சமுமீன் தைமீன்'' என்று எழுதச் சொல்லிவிட்டு, பிறகு, ''மீன் என்று எழுதியிருப்பதை மட்டும் அழித்து விட்டுப் படித்துப் பார்!'' என்று சொல்லிச் சிரித்திருக்கிறோம் அல்லவா?.... எத்தனை வயதானாலும் சிறு பிள்ளைத்தனமான சில ஆசைகள் மட்டும் மனிதனை விட்டுப் போவதில்லை என்பதற்கு மற்றுமோர் எடுத்துக்காட்டுப் போல், இந்தச் சங்கேத மொழி இன்றும் தனிச்சிறப்புப் பெற்று நிலவி வருகிறது.

'சங்கேத மொழிகளை உருவாக்குவது எப்படி?...அவற்றின் துணை கொண்டு ரகசியச் செய்திகளை அமைப்பது எப்படி?... எவ்வாறு அவற்றை இனம் புரிந்துகொள்ள வேண்டும்?' என்றெல்லாம் அறு அறுவாகப் படங்களின் உதவியுடன் விவரித்துச் சுவைபடக் கூறும் புத்தகம் ஒன்று 'க்ளோக் அண்ட் சைபர்' என்ற தலைப்பில் வெளிவந்திருக்கிறது. அதில் உள்ள இன்னும் பல ருசிகரமான அம்சங்களைப் பார்ப்போமா?....

இரண்டாம் உலகப் போரின்போது ஜெர்மன் படைகளைப் பற்றிய அதிமுக்கியமான சில தகவல்களை அமெரிக்காவுக்குக் கொடுத்து உதவி வந்தார் ஹாரி ஆர்ட்லே (உண்மைப் பெயர் இதுவல்ல) என்ற ஆசாமி. ஆனால் அவர் அமெரிக்கப் படை பலத்தைப் பற்றியும் ஜெர்மனிக்குத் தகவல் கொடுத்து இரட்டை நாடகம் ஆடுவதாக அமெரிக்க ஒற்றர் இலாக்காவுக்குத் தகவல் கிடைத்தது. இந்தப் பயங்கரமான ஆசாமியை என்ன செய்வது? அமெரிக்க ஒற்றர் இலாகா ஆர்ட்லேயை அழைத்து, ''நீங்கள் செய்து வரும் மகத்தான உதவிக்குத் தகுந்த கைம்மாறு செய்ய வேண்டும் என்பதுதான் எங்கள் விருப்பம்.... ஒரு கடிதம் தருகிறோம். அதைப் பிரிட்டிஷ் படைத் தளபதியான சர் வில்லியம்ஸிடம் கொண்டு போய்க் கொடுங்கள்..... அவரும் வேண்டிய சன்மானம் அளிப்பார்...'' என்றது. ஆர்ட்லே கடிதத்தை வாங்கிக் கொண்டு போய் வில்லியம்ஸிடம் கொடுத்தார். அதை நிதானமாகப் படித்த அந்த அதிகாரி, ராணுவ வீரர்களை அழைத்து ஆர்ட்லேயைச் சுட்டிக்காட்டி, ''இவனை உடனடியாகச் சுட்டுத் தள்ளுங்கள்!'' என்று உத்தரவு பிறப்பித்தார். ஆர்ட்லேக்கு விஷயம் புரியவில்லை. இத்தனைக்கும் அந்தக் கடிதத்தில் இருந்ததென்னவோ அவரைப் பற்றிய பாராட்டுரைதான்....ஆனால் அந்தக் கடிதத்தின் ஒவ்வொரு



வார்த்தையின் முதல் எழுத்தை மட்டும் அவர் படித்திருந்தாரானால், வில்லியம்ஸுக்குக் கொடுக்கப்பட்ட உத்தரவு இன்னதென்று புரிந்திருக்கும். அந்த முதல் எழுத்துக்கள் சொன்னது இதுதான்: ''இவனை உடனடியாகச் சுட்டுத் தள்ளவும்!''

* * *

மங்கோலிய வீரன் செங்கிஸ்கானைத் தேடி ஒரு ரகசியச் செய்தி வந்து சேர்ந்தது. அந்தச் செய்தி, ஒரு குதிரை



வின மீது சவாரி செய்து கொண்டு வந்தது. அதாவது, செங்கிஸ்கானைப் பார்க்க வந்த அடிமை யொருவன், மன்னனிடம் தன் தலையை மொட்டையடித்து விட்டுப் பார்க்கும் படி கேட்டுக்கொண்டானும். அப்படிச் செய்து பார்த்த போது அந்த மொட்டைத் தலையில் ரகசியச் செய்தி ஒன்று எழுதப்பட்டிருந்தது தெரிந்ததாம். அந்தச் செய்தியின் பலத்திலே தான் மத்தியக் கிழக்கிலும், கிழக்கு ஐரோப்பாவிலும் அடியெடுத்து வைத்து வெற்றி கண்டானும் செங்கிஸ்கான்!

ஃ ஃ ஃ

இதே மாதிரி கண்கட்டு வித்தை, முதல் உலக மகா யுத்தத்தின்போதும் நடத்தப்பட்டிருக்கிறது. நடத்தியவர்கள்: பிரெஞ்சுக்காரர்கள். கோழி முட்டையை நன்றாகச் சுத்தம் செய்து விட்டு அதன் மேற்புறத்தில் எழுதியவுடன் மறைந்து போகக் கூடிய ஒருவித மையினுல் செய்திகளை எழுதுவார்கள். இந்த முட்டைகள் மற்ற முட்டைகளுடன் சந்தைக்குப் போகும். அங்கிருந்து சேர வேண்டிய இடத்துக்குப் போய்ச் சேரும். செய்தியைப் படித்துவிட்டு, முட்டையைச் சாப்பிட்டு விடுவார்களாம். வேலைக்கு வேலையும் ஆயிற்று; வயிற்றுக்கு உணவும் ஆயிற்று! போதாதா?

ஃ ஃ ஃ

ரகசியச் செய்திகளை எழுதுவதற்கு விசேஷ மை வேண்டுமல்லவா?.... இந்த மை பிறர் கண்ணில் பட்டால் ஆபத்தாயிற்றே! ஒற்றர்கள் இவற்றை எங்கெங்கே மறைத்து வைப்பார்கள்? 'நல்ல வாசனையாக இருக்கிறதே. இது என்ன சென்ட்?' என்று பார்க்கப் போனோமானுல் அது ரகசிய



மையாக இருக்கும். குளியலறையில் 'வாஷ் பேஸின்' அருகில் கிடக்கும் பற்பசையை எடுத்துப் 'பிரஷ்'ஷில் அழுத்தினுல், இந்த மை வெளியே வருவதுமுண்டு.... இவற்றையெல்லாம் தோல்வியடையச் செய்யக்கூடிய தந்திர வழிகளும் உண்டு. கைக்குட்டையையோ, காலுறையையோ, கழுத்துச் சுருக்கையோ தண்ணீரில் நனைத்தால், இந்த மை கரைந்து வரும்....அல்லது பருமனுன கோட்டுப் பொத்தானை எடுத்துத் தண்ணீரில் ஊறப் போட்டால் பொத்தான் கரையும்! மை கிடைக்கும்!

ஃ ஃ ஃ

பெரிய பெரிய இயந்திரங்களை — அதாவது வார்த்தைகளால் வர்ணிக்க முடியாதபடி பற்பல காரியங்களை அதிசயிக்கத்தக்க விதத்தில் செய்து முடித்துவிட்டு, 'அக்கடா' என்று இருக்கும் இயந்திரங்களை — 'ராட்சத இயந்திரங்கள்' என்று செல்லப் பெயரிட்டு அழைக்



கிறோம் அல்லவா?... எத்தனை பெரிய விஷயத்தையும் சின்னதாகச் செய்துவிடும் இயந்திரத்தை என்னவென்று அழைப்பது?... மைக்ரோ - மைக்ரோ - காமெரா என்று ஒரு சாதனம். அறுநூறு பக்கங்கள் கொண்ட புத்தகத்தைப் பைசா அளவுக்குள் அடங்கும் படி சுருக்கிப் படமெடுத்துவிடும் சாமர்த்தியம் படைத்த சாதனம் இது. இப்படிப்பட்ட ஒரு காமெராவை வைத்துக் கொண்டு குரோகர் என்பவர் ஒரு காரியம் செய்தார். பிரிட்டனில். பிறப்பால் அமெரிக்கராஞலும் உண்மையில் அவர் ரஷ்ய ஒற்றர். இங்கிலாந்தின் பாதுகாப்பு இலாகாவில் வேலை பார்த்து வந்த மிஸ் ஜி இவரது சிநேகிதி. ஜி சில ரகசிய தஸ்தாவேஜுக்களைக் கொண்டு வருவாள். அவற்றை இந்தக் குட்டிப் பிசாசு' காமெராவினுல் சுருக்கிப் படமெடுத்து விடுவார் குரோகர். ஆனுல் ரஷ்யாவுக்கு இதை எப்படி அனுப்புவது?

பழங்காலத்து ஆங்கிலப் புத்தகங்களில் எல்லாம் ஒவ்வோர் அத்தியாயத்தின் ஆரம்பத்திலும், அந்த அத்தியாயத்தின் முதலெழுத்து சித்திர வேலைப்பாடுகளுடன் பெரிதாக அமைந்திருக்கும். இந்தப் பெரிய எழுத்துக்குள் அந்தச் சின்னஞ்சிறு 'மைக்ரோ' புள்ளியை அடக்கம் செய்து, புத்தகத்தை ஐரோப்பாவில் உள்ள 'புத்தகப் பிரியர்'களான 'நண்பர்'களுக்கு விற்று விடுவார் குரோகர்! அதற்குப் பிறகு அந்தப் புத்தகம் பல கைகள் மாறி, கடைசியில் இரும்புத் திரைக்குப் பின்னலும் போய்ச் சேர்ந்து விடும். இம்மாதிரி புத்தக வியாபாரம்

செய்வதற்கென்று அடிக்கடி ஐரோப்பாவுக்கு உல்லாசமாகப் போய் வருவாராம் குரோகர்!

ஃ ஃ ஃ

முதல் உலகப் போரின்போது நடந்தது இது. இங்கிலாந்துவாசி ஒருவர் ஹாலந்திலிருந்த ஒருவருக்கு, ''தந்தை இறந்து விட்டார்'' என்று தந்தி கொடுத்தார். அந்த ஆசாமியின்மீது பிரிட்டிஷ் ரகசியப் போலீசுக்கு எப்போதுமே ஒரு கண். 'அவர் ஜெர்மன் ஒற்றராக இருப்பாரோ' என்று. எனவே, இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு வேண்டுமென்றே அர்த்தத்தை மாற்றாமல், ''தந்தை காலமானார்'' என்று வார்த்தைகளை மட்டும் மாற்றித் தந்தியை அனுப்பி வைத்தார்கள். அலறிப் புடைத்துக் கொண்டு பதில் தந்தி வந்தது, ஹாலந்திலிருந்து: ''தந்தை இறந்தாரா? அல்லது காலமானாரா?'' என்று கேட்டு! இது போதாதா அந்த ஜெர்மன் ஒற்றரை உள்ளே பிடித்துப் போட!











ஃ ஃ ஃ

ரஷ்யப் புரட்சியின் விளைவாக ரஷ்யாவிலிருந்து பல குடும்பங்கள் வெளியேறின. அப்படி வெளியேறியவர்களை யெல்லாம் ரஷ்யாவில் பூலோக சொர்க்கத்தைப் படைத்து விட்டிருப்பதாகக் கதையளந்து, ரஷ்யாவுக்குத் திரும்பி வரும்படி கம்யூனிஸ்ட்கள் வருந்தி வருந்தி அழைத்தார்கள். 'சொர்க்கம் என்று நினைத்துப் போய் அது நரகத்தைவிட மோசமானதாக இருந்து விட்டால் என்ன செய்வது?' என்று பல குடும்பத்தினர்கள் கவலைப்பட்டார்கள். ஒரு குடும்பத்தைச் சேர்ந்த மூன்று சகோதரர்கள் கடைசியில் ரஷ்யாவுக்குப் போவதாக ஒப்புக் கொண்டார்கள். ''அங்கே போய்க் கொஞ்ச நாட்கள் கழித்துக் கடிதம் போடுகிறோம். அத்துடன் ஒரு புகைப்படமும் அனுப்பி வைக்கிறோம். அந்தப் படத்தில் நாங்கள் மூன்று பேரும் நின்று கொண்டிருந்தால், நிச்சயம் ரஷ்யா ஒரு சொர்க்கம்தான் என்று அர்த்தம் செய்து கொள்ளுங்கள். மூன்று பேரும் உட்கார்ந்து கொண்டிருந்தால், நிலைமை மோசம் என்று புரிந்து கொள்ளுங்கள். நீங்களும் வந்து அவதிப்பட வேண்டாம்....'' என்று தங்கள் உறவினர்களிடம் ரகசியமாகச் சொல்லிவிட்டுப் போனார்கள்.

கொஞ்ச நாட்களுக்கெல்லாம் அவர்களிடமிருந்து ஒரு கடிதம் வந்து சேர்ந்தது. அந்தக் கடிதத்தில் ரஷ்யாவைப் பற்றியும், கம்யூனிஸ வாழ்க்கை முறையைப் பற்றியும், ''ஓகோ'' என்று புகழ்ந்திருந்தார்கள். உறவினர்கள் கடிதத்துடன் வந்திருந்த புகைப்படத்தை ஆவலுடன் பார்த்தார்கள். அதிலே மூன்று சகோதரர்களும் தரையிலே உட்கார்ந்திருக்கவில்லை, படுத்தே விட்டிருந்தார்கள்! இதைப் பார்த்த பிறகும் ரஷ்யாவுக்குப் போக யாருக்காவது துணிவு வருமா என்ன?....

ஃ ஃ ஃ

ஒட்டுக் கேட்பது என்பது ஒரு நுண்கலை. இந்தக் கலையின் துணையினால் எத்தனை அரிய ராஜாங்க ரகசியங்கள் வெளியாகி யிருக்கின்றன என்பதற்குக் கணக்கு ஏதும் இல்லை. எல்லாத் துறைகளிலும் மனிதனை அப்புறப்படுத்திவிட்டு வந்து உட்கார்ந்திருக்கும் இயந்திரங்கள், இந்தத் துறையிலும் விட்டுக் கொடுத்துவிட வில்லை. ரஷ்யா, சீனா போன்ற கம்யூனிஸ்ட் நாடுகளிலெல்லாம், அயல்நாட்டுத் தூதரகங்களின் சுவர்களிலோ, தரை விரிப்புகளுக்கு அடியிலோ, ஜன்னல் திரைகளின் பின்னாலேயோ சில 'மூட்டைப் பூச்சிகள்' ஒளிந்து கொண்டிருக்கும். 'பக்ஸ்' என்று பெயரிட்டு அழைக்கப்படும் சின்னஞ் சிறிய டிரான்ஸிஸ்டர் மைக்குகள்தான் இவை. இவற்றைக் கண்டுபிடித்து அப்புறப்படுத்துவது என்பது மிகக் கடினம். தூதரகக் கட்டடத்தின் எந்த மூலையில் எந்தப் பேச்சு நடந்தாலும் இந்த 'மூட்டைப் பூச்சி'களின் செவிக்கு எட்டும். அந்தப் பேச்சுக்கள் எங்கேயோ

தொலைதூரத்தில் அப்படியப்படியே பதிவாகிக் கொண்டிருக்கும். ரேடியோவை அலற விட்டு விட்டு அந்த ஓசைக்கு மத்தியில் ரகசியமாகப் பேசுவது, குழாய்த் தண்ணீரைக் கொட்ட விட்டு விட்டுக் கிசுகிசுப்பது, மேஜைக் கண்ணாடி மீது தம்ளர்களாலோ, சாவிக் கொத்தினாலோ ஓசையெழுப்பிக் கொண்டே பேசுவது - இப்படி எந்தப் 'பாச்சா'வும் பலிக்காது இனிமேல். ஏனென்றால், பின்னணி ஓசைகளை அப்படியப்படியே அமுக்கி விட்டுப் பேச்சை மட்டும் பிரித்துக் கொடுக்கக் கூடிய ஒலிபரப்புச் சாதனம் ஒன்றும் கண்டுபிடித்திருக்கிறார்களாம்!

இந்தத் தொல்லைகளுக்கெல்லாம் சுடு கொடுப்பதற்கென்றே சில நாட்டுத் தூதராலயங்கள் சில வழிகளைக் கடைப்பிடித்திருக்கின்றனவாம். அதன்படி, பேச்சுவார்த்தை நடத்துவதற்கென்று கூடுபவர்கள் பேசுவதே இல்லை. சொல்ல வேண்டியதையெல்லாம் துண்டுத் துண்டுக் காகிதங்களில் ஒருவருக்கொருவர் எழுதிக் கொடுத்து, படித்த பிறகு உடனடியாக அவற்றைக் கருக்கிச் சாம்பலாக்கி 'வாஷ்பேஸினி'ல் கொட்டி விடுகிறார்களாம்!

ஆண்டவன் கொடுத்த அறிவு எப்படி எப்படியெல்லாம் குறுக்குவழியில் புகுந்து புறப்பட்டு வருகிறது என்று இன்னும் நிறையத் தெரிந்து கொள்ள வேண்டுமானால் 'க்ளோக் அண்ட் சைபர்' புத்தகத்தை **துப்பிடித் துங்பாள்க!**

**நூலின் பெயர் :** க்ளோக் அண்ட் சைபர். (Cloak and Cipher.

**ஆசிரியர்கள் :** டான் டைலர் மூர். (Dan Tyler Moore) மார்த்தா வாலர். (Martha Waller)

**வெளியிட்டவர்கள் :** ஜார்ஜ் ஜி. ஹாரப் அண்ட் கம்பெனி, லண்டன்.

# கணவன் பெயரைச் சொல்லு!

இன்றைக்கு இரண்டாயிரத்தைந்நூறு வருஷங்களுக்கு முன்பு புகழ்பெற்ற சம்ஸ்கிருத இலக்கண நூலாசிரியரான பாணினி முனிவர் வாழ்ந்திருந்தார். அவர்தாம் எழுதியுள்ள நூல்களில் கோடை காலத்தில் முதல் பண்டிகை 'நவலவ' எனக் குறிப்பிட்டிருக்கிறார். தற்கால நவராத்திரி போல் ஒன்பது நாட்களுக்கு முக்கியமாகப் பெண்கள் பண்டிகையாக இது கொண்டாடப்பட்டு வந்தது.

இப்பண்டிகையின் முதல் நாள் மணமான சுமங்கலிப் பெண்கள் ஒருவருக்கொருவர் ''உங்கள் கணவர் பெயரென்ன?'' என வினவுவார்கள். சொல்லாது போனால் மற்றப் பெண்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து கொண்டு சொல்லாத பெண்ணைத் தாக்க ஆரம்பித்து விடுவார்கள். எதனால் தெரியுமா? மலர்களால்! அந்தப் பெண் தன் கணவன் பெயரைச் சொல்லாதவரை இந்த மலர்த் தாக்குதலை அவர்கள் நிறுத்த மாட்டார்கள். கடைசியில் திக்குமுக்காடிப் போய்த் தன் கணவன் பெயரை எவ்விதமும் சொல்லியே விடுவாள். உடனே பெண்கள் எல்லோரும் கைதட்டி 'ஓ' எனச் சிரித்து ஆரவாரம் செய்வார்கள்.

இதன் பிறகு கணவன் பெயரைச் சொன்ன தங்கள் தோழிகளை அழைத்துப் போய்ப் பாலும் அன்னமும் தருவார்கள். எல்லாருமாகக் கூடிக் காதல் தேவதையான ரதி தேவிக்குப் பூஜைகள் நடத்துவார்கள். சித்திரை மாதம் சுக்கில பஞ்சமியன்று இவ்விழா தொடங்கும். மறுநாள் ஷஷ்டியன்று ஸ்கந்தோத்சவம் நடத்துவார்கள். அன்று பெண்கள் ஸ்கந்த மாதா (பார்வதி)வுக்குப் பூஜை நடத்துவார்கள்.

அடுத்த நாள் சப்தமியன்று ஆனந்த சப்தமி கொண்டாட்டம் நடக்கும். அன்று பெண்கள் நல்ல புத்தாடை அணிந்து ஆபரணங்களால் தங்களை அழகுபடுத்திக் கொண்டு தங்கள் தங்கள் கணவன்மாரைக் காணச் செல்வார்கள். அன்று கணவனும் மனைவியும் ஆனந்தமாகப் பொழுது போக்குவார்கள். கணவன்மார்கள் தங்கள் தங்கள் மனைவிமாருக்குப் பரிசுகள் அளித்து சந்தோஷப் படுத்துவார்கள்.

அன்று தொடங்கிச் சித்திரா பௌர்ணமி தினம்வரை இரவில் நிலவொளியில் கணவனும் மனைவியும் வெளியில் காடுகளுக்குச் சென்று உல்லாசமாக இரவைக் கழிப்பார்கள். இதுபற்றிக் காவிய பிரகாசம் என்ற நூல் இலக்கிய நயத்துடன் இப்படிக் கூறுகிறது:

''வெண்மையான ஆடை அணிந்த யுவதி இரவின் நிலவொளியில் தன் காதலனைத் தேடிச் செல்லுவாள். பால்போன்ற நில வொளியில் பால் போன்ற ஆடை அணிந்த அவளை அடையாளம் கண்டுகொள்வது சுலபமல்ல!'' —அ. ரா.



கண்களை இடுக்கிக் கொண்டு தெருவின் இரண்டு பக்கங்களிலும் பார்த்தேன். பிறகு பையிலிருந்த சில்லறையைப் பார்த்துக் கொண்டேன். 'ம்.... பணம் போதும். வாடகை மோட்டார் ஏதேனும் கிடைத்தால் ஏறிச் சென்றுவிட வேண்டியதுதான்' என்று தீர்மானித்துக் கொண்டேன். ஏனெனில், என்னால் நடக்க முடியவில்லை. பஸ்ஸிலும் அவதியுறத் தெம்பில்லை. வயது அறுபத்திரண்டு ஆகிறதென்பது ஒருபுறம் இருக்கட்டும். மனச்சோர்வும், உற்சாகமற்ற உள் நினைவுகளும், சென்றதிலேயே ஆழும் ஏக்கமும், எனக்கு உடல் முதுமையையும் மீறிய ஒரு மெலிவைத் தந்து விட்டிருந்தன.

''அட, எவன்யா அது! நடுத்தெருவிலே நின்னுக்கிட்டு! இன்னு பெரியவரே, வூட்டுலே சொல்லிக்கிட்டு





காருக்குப் பேசத் தெரியாதுதான், ஆனால் அவரது வாழ்விலே திருப்பத்தை ஏற்படுத்தி விட்டது. உள்ளத்தைத் தொடும் இந்தக் கதை புதிய கோணத்தில் செல்கிறது.

சிறப்புச் சிறுகதை

# டாக்ஸி

## ஆர். சூடாமணி

வந்துட்டியா?'' என்ற ஏளனக் குரலின் பக்க ஒலியோல் மோட்டாரொன்று விர்ரென்று நாட்டியப் பெண் போம் நளினச் சத்தம் எழுப்பியவாறு என்னைத் தொட்டுத் தொடாமலும் தாண்டி ஏகிய பின்னர் தெருவின் ஓரமாய்ச் சென்று நின்றேன். உள்ளே குமுறியெழுந்த துக்கம் உதட்டளவில் துடித்தது.

இப்படி ஒரு காலமா எனக்கு? கண்டவனும் ஏசிப் போகிறான். வீட்டில்தான் இழிநிலை என்றால் சமூகத்தின் பிரதிபலிப்பாக எங்கும் எப்போதும் இந்த அலட்சியம் தான். என் சட்டை இப்போது கிழிந்திருப்பதால்தானே ? அதில் போட்டுள்ள ஒட்டு கார்க்காரனின் கண்களுக்குத் தெரிந்திருக்குமோ? அதனால்தானே அந்த 'அட எவன்யா?'

சரிதான் போய்யா! உலகத்தில் இல்லாத அதிசயமாகக் கார் படைத்துவிட்டாயாக்கும்! உன்னைப் போலவே நானும் ஒரு மோட்டாருக்குச் சொந்தக்காரனாய் இருந்தேன் என்று உனக்குத் தெரியுமா? உன்னுடையதுகூட 'ஸ்டாண்டர்ட் டென்'தான். (அதை ஒரு நொடியில் கவனித்து விட்டேனாக்கும்!) என்னுடையதோ அம்பாஸடர்! கண்ணாடி மாளிகை போன்ற சொகுசான வாகனம். அதில் நான் மிடுக்காய் ஏறி அமர்ந்ததும் என்னிடம் ஊதியம் பெறும் சாரதி, மரியாதையுடன், ''எங்கே சார், போகணும்?'' என்று கேட்டுக் கதவை மூடி விட்டு வண்டியைவெகு நாசூக்காய் ஓட்டத் தலைப்படுவான். கண்மூடித்தனமான வேகத்தில் வண்டியை விரட்டுவதோ, 'நியூட்ர'லுக்குக் கொண்டுவராமல் கிய'ரை ஒன்றிலிருந்து இன்னொன்றுக்குத் தடாலென்று மாற்றி உடல் குலுக்கல் விளைப்பதோ எனக்குப் பிடிக்காதென்பது அவனுக்குத் தெரியும். நைலானும் டெக்ரானும் டெரிலினுமாய் வேளைக்கொரு வகை உடுப்பேன். கால்மேல் கால் போட்டுக்கொண்டு தங்கப் பூண் நடைக் கொம்பின் கரிய மழுமழுப்பை ஒரு கையால் தடவியவாறே, இன்னொரு கையால் மீசை மேல் விரல் போட்டு அதன் முறுக்கிய விறைப்பின் அதிகார முத்திரையைச் சரி செய்வேன். இப்போது அசட்டுச் சிரிப்புடன் கூழைக் கும்பிடு போடுகிறேனே, இப்படியா அப்போது? இல்லவே யில்லை! எளிதில் ஒரு புன்சிரிப்பைத் தந்து விடுவேனா என்ன, அதை எதிர்பார்த்து என் காலடியில் காத்திருப்போ

ருக்கு? எங்கள் வாணிபச் சரக்கைப் போல் அந்தச் சிரிப்பையும் அவர்கள் தவம் கிடந்தல்லவா பெற வேண்டும் ? இன்று ஏன்ப தாகத் தெரிகிற என் அறுபதுக்கு அப்போது – இந்தே ஆண்டுகளுக்குமுன்–நாற்பது வயதுதானடா ! உனக்குத் தெரியுமா அது ? என் கார்.......

''தாத்தா! நம்ம கார் எங்கே? இப்போல்லாம் நாம் ஏன் நடந்தோ, பஸ்ஸிலேயோ போறோம் ?''

குழந்தை ராதாவுக்கு ஒன்பது வயதாகிறது. அவள் கேள்விக்கு நான் என்ன பதில் சொல்வேன் ? இதயத்தை மார்புக்குள்ளேயே அமுக்கி வைத்திருப்பதே ஒரு பிரயாசையாகி அசைவற்று நிற்கத்தான் முடியும் என்னால்.

அவளுக்கே உண்மையின் சம்சயம் தட்டுகிற பருவந்தான் என்று உணர்த்துவது போல் ராதா தயங்கியவாறு, ''கார் வந்து.... வந்து... 'ஸர்விஸிங்'குக்குப் போயிருக்கா?'' என்று கேட்பாள் தொடர்ந்து.

என்னிடம் மௌனம்தான். குழந்தை தன் பேச்சைத் தானே நம்பாத போது அந்த அவமானம் என் நெஞ்சுகள் தகித்தது. என் மௌனத்தின் பொய்யே ஒரு வேளை அவள் என்னை இகழ்ச்சியுடன் நினைக்க ஏதுவாக அமைகிறதோ ?

''சொல்லேன், தாத்தா....''

''அது வந்தும்மா....!''

என் தயக்கத்தை மீறிக் கொண்டு வேறொரு குரல் இடையில் பாயும். ''என்னடி தொண தொணன்னு கேள்வி? உங்கள் தாத்தா அழகு சொட்ட வியாபாரம் செய்தாரோன்னோ? எல்லாத்தையும் தொலைச்சுப்பிட்டு நிற்கிறார். காரையும் முழுங்கியாச்சு...''

என் மருமகள் மைதிலியின் குரல்தான். நாளுக்கு நாள் கருமை மிகுந்து வரும் காப்பியை என் எதிரே கொட்டாத குறையாய் வைத்து விட்டு ராதாவிடம் பேசும் சாக்கில் என்னைப் புண்படுத்திப் போவாள்.

''காரை எப்படி முழுங்க முடியும்? கார் எத்தனை பெரிசு! வாய் சின்னதாச்சே!'' என்பாள் குழந்தை.

இம்மாதிரி ஏதாவது அன்றாடம் நடக்கும்.

என்னுள்ளே கொந்தளிக்கும் துன்பத்திலிருந்து என் முகம் எப்படி விகாரம் அடை இருக்கிறது என்பது எனக்குப் புரி யு





தொண்டைக் குண்டு வேகமாய் ஏறி இறங்கும். மருமகள் பேசுவதில் தவறென்ன? இப்போது எனக்குச் சோறிடுபவனின் மனைவி அவள். ஒரு காலத்தில் நான் லட்சக் கணக்கில் சம்பாதித்தபோது மகனையும் மருமகளையும் அவர்கள் குழந்தைகளையும் சம்ரட்சிக்கும் பெருமை எனக்கு இருந்தது. ''மாமாவுக்குச் சரியாய் மூணு மணிக்கெல்லாம் காப்பி கொண்டு போகணும்'' என ஆட்களுக்கு உத்தரவிடுவதோடு அவளே கொண்டு வந்து கொடுப்பாள். ''சூடு சரியா இருக்கா, மாமா? இன்னும் ஆற்றித் தரட்டுமா?'', ''நுரைதான் மாமா! அளவு ஒண்ணும் அதிகமில்லே. குடிச்சுடுங்கோ. உடம்புக்கும் பலம் வேணுமா?'', ''அடடா, பால் கொஞ்சம் குறைவா யிருக்கும் போலிருக்கே. கொஞ்சம் இருங்கோ, இதோ போய்க் கொண்டு வரேன்...''

இப்போதும் அந்தக் குரலும் உபசரிப்பும் என் காதுகளில் ஒலிக்கின்றன. அந்த முந்தைய அக்கறையைப் போலி எனச் சொல்ல முடியுமா? இன்று காட்டும் வெறுப்பைக் குற்றமென்று கொள்ளலாமா? இல்லை. இது தான் மனித சுபாவம். அன்று நான் கொடுத்தேன், எனக்கு மரியாதை கிடைத்தது. இன்று நான் கை நீட்டுகிறேன். பிச்சையோடு திட்டும் கிடைக்கிறது. மைதிலிக்கு நான்கு குழந்தைகள். வளர்ந்தவர்கள் இருவரைத் தவிர ராதாவும் இளைய பையனும் இருக்

கிறார்கள். என் காப்பியில் ஊற்றக் கூடிய பாலே, உழைக்கும் கணவனுக்கோ தன் வயிற்றுச் செல்வங்களுக்கோ தரலாமே என்று அவள் எண்ணினால் அதில் வியப்பென்ன? பயனையும் நிலையையும் கருதாது, ஆண்டவனைப் போல் தனித்து நிற்கும் அன்பைச் செலுத்துவதற்குரிய மனப் பக்குவம் எல்லோருக்குமே வந்து



விடுவதில்லை. அது இல்லாததற்காக மைதிலியிடம் நான் வருத்தப்படுவது அறிவீனம். அருகில் அவசரமாக ஆபீசுக்குக் கிளம்பிக் கொண்டிருப்பானே என் மகன், அவன் என்னை எதுவும் ஏசமாட்டான். அவன் மௌனிதான் அப்போது. அந்த மௌனம்தான் என்னை அடித்து விடும். அவன் மௌனத்தை விடவா என்னை வருத்த முடியும் அவள் பேச்சு?

நெஞ்சுக் குழியில் ஏதோ சுருளாகப் புறப்பட்ட உணர்வில் கண்ணீர் வெளிப்பட்டு விடுமோ என்ற பயம் தோன்றும்.

''தாத்தா, அழறியா? அழாதே தாத்தா! நம்ம கார்... நம்ம கார் வந்துடும் பாரேன்!''

என் கண்களின் மீது பரிவாக ராதாவின் இளம் ஸ்பரிசம். என்ன இருந்தாலும் என் ரத்தமல்லவா? மருமகளுக்கு இரக்கம் இல்லாது போனாலென்ன? என் பேத்தியின் இரக்கத்தில் எனக்குப் பங்குண்டு...

''அழாதே தாத்தா!''

உள்ளேயிருந்து மைதிலியின் முணுமுணுப்பு ஒலிக்கும்.

இந்த ஏச்செல்லாம் இருக்கட்டும். என்னால் பொறுக்க முடியாத துன்பம் அதுவல்ல. என் நிலையில் ஏற்பட்ட இழிவு, என் வளம் மறைந்து நான் வறியனாய் நிற்பது, முந்தைய செழிப்பின் பொன்னொளி இன்றைய அவலத்தினால் பின்னும் ஒளி மிக்கதாகி என் உள்ளத்தையும் உயிரையும் இடையறாது துன்பத்திலாழ்த்தும் கொடுமை - இவற்றைத் தான் என்னால் தாங்க முடியவில்லை.

உத்தியோகத்திலிருந்த நான் இன்னும் காலம் இருக்கும்போதே ஓய்வு பெற்று வேறொருவன் பேச்சை நம்பிப் பெரியதொரு வணிகத் தொழிலில் ஈடுபட்டதும் அது சில ஆண்டுகள் சுபிட்சமளித்த பின் கூட்டாளியின் கடன் மோசடியால் முழுவதுமே நஷ்டமாகி நான் வறியவனாய் மிஞ்சியதும் என்னிடம் தொழிலில் ஈடுபட்டிருந்த என் மகன் பிறகு வேலை ஒன்று தேடிக் கொண்டதும் அவன் ஒருவனின் ஊதியத்தில் குடும்பம் அனைத்தும் தழைக்க முடியாமல் ஒவ்வொன்றாய் உடைமைகளைப் பணமாக்கியதும் ஒவ்வொரு பணியாளாகத் துறந்ததும், காரோட்டியை வேலையினின்று அனுப்பிய சிறிது காலத்துக்குள் காரையே விற்றுவிட்டதும் உடல் அலுங்காமல் வாழ்ந்திருந்த நிலை மாறி இப்போது தெருத் தெருவாய் நடப்பதும், பஸ்ஸுக்குக் காத்துக் கால் நோவதும்...! இவற்றையெல்லாம் எண்ணி எண்ணி ஆற்ற மாட்டாமல் மனம் புழுங்கிப் புரட்சி மிக்க நெஞ்சில் தன்னிரக்கம் நிறைந்து வாட்ட நான் துன்பமே வடிவாக இப்படி ஏன் ஆகியிருக்க வேண்டும்? என்னால் நிகழ்காலத்தை ஏற்றுக்கொள்ள முடியவில்லையே, என்ன செய்வேன்! நினைவுகளிலேயே ஆழ்ந்து அவற்றின் இன்ப மயக்கில் இன்றைய குறைகளை மறக்கிறேன். அந்த நினைவுகள் இல்லையேல் என் கதி என்னவாகியிருக்குமோ! நிகழ் வாழ்வின் இந்த நரகத்தை என்னால் தாங்க இயலவில்லையே...

கட்டுமீறி ஓடும் எண்ணங்களை இழுத்துப்பிடிப்பதாக எதிரே ஒரு மோட்டார் வந்து கொண்டிருந்தது. பாதி கறுப்பு, பாதி மஞ்சள். சிவப்புக் குறி நேராயிருந்தது. நல்லவேளை, சமயத்தில் கவனித்தேன். இன்னும் சிறிது நேரம் என் எண்ணங்களிலேயே மூழ்கியிருந்தால் வண்டியைத் தவற விட்டு விட்டு இன்னும் எத்தனை நேரம் கால் கடுக்கக் காத்திருந்திருப்பேனோ! கணேசன் நான் வரவில்லையாக்கும் என்று எண்ணியிருப்பார்...

கைகளை உயர்த்தித் தட்டினேன்.

''டாக்ஸி! டாக்ஸி!''

# சக்திக்கும், வலிமைக்கும்!







ஊட்டப்பொருள்கள் அனைத்தும் ஒருங்கே தேவையா? ஒரு கப் போர்ன்விடா அருந்துங்கள். தசைகள் வளர புரதங்களும், சக்திக்கும் வலிமைக்கும் புஷ்டியான மாவுச்சத்தும், எலும்புகளை வலுவாக்க தாது உப்புக்களும், பூரண ஆரோக்கியத்திற்கு மிக்க அவசியமான வைட்டமின்களும் இதிலே உள்ளன. மிகச்சுலபமாக தயாரிக்கலாம். காலையில் உற்சாகத்துடன் எழுந்திருக்க வேண்டுமா? இரவில் அமைதியாக உறங்க வேண்டுமா? போர்ன்விடா அருந்துங்கள்.

**காட்பரீஸ் போர்ன்-விடா**

வேகமாய்ப் பாய்ந்த வண்டி திடீரென்று 'பிரேக்' பிடிப்பில் கத்தியால் வெட்டுண்டது போல் நின்றது. காக்கியுடை அணிந்த சாரதி அமர்த்தலாய்த் தன் ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தான்.

வண்டியின் பின் பக்கக் கதவைத் திறக்க ஓரடி முன்னால் சென்றேன். ஒரு தரம் வண்டியின் நம்பரின் மேல் கருத்தின்றி விழுந்து மீண்ட என் கண்கள் திடீரென்று விரிந்தன. ஏதோ பனிமூட்டம் விலகியதுபோன்ற திடீர்த் தெளிவில் உள்ளத் துடிப்பு வேகமாயிற்று. வெள்ளைத் தகட்டின் மீது இருந்த கறுப்பு எண்களையும், எழுத்துக்களையும் மீண்டும் விறைத்துப் பார்த்தேன். என்ன விந்தை இது! கனவு காண்கிறேனா? வண்டி கண்ணாடி மாளிகையாய் வெயிலில் பொலிந்த காட்சியும் இப்போதுதான் உணர்வாகியது. நிறம்தான் கறுப்பும் மஞ்சளுமாகி யிருந்தது, அந்தப் பழைய சிவப்புக்குப் பதிலாக.

அதே சமயம்.... இது என்ன, அதிசயத்தின் தொடர்ச்சியா? என் முகத்தைக் கவனித்துவிட்டு முன் ஆசனத்திலிருந்து துள்ளிக் கீழே குதித்துத் தலைக் குல்லாயை மரியாதைப் பாங்குடன் கழற்றி விந்தை படிந்த முகத்தில் வினயத்தை நிறைத்துப் பேசுபவன் உண்மையிலேயே என்னுடைய மாஜி டிரைவர் மாணிக்கம்தானா?

''ஸார், நீங்களா!''

சிறிது நேரம் ஒருவரை யொருவர் வெறித்த படி நின்றிருந்தோம். என் நெஞ்சு உணர்ச்சியில் நிறைந்து பொங்கி விம்மியது.

அவன் முகத்தில் ஆச்சரியம், கரிசனம், மரியாதை. ''நீங்கன்னு முதல்லே நான் கவனிக்கவே யில்லே ஸார்!'' சட்டென்று அவன் எனக்காகக் கதவைத் திறந்து பிடித்துக்கொண்டு ஒதுங்கி நின்றான். ''ஏறுங்க, ஸார்! நம்ம வண்டிதான். ஐயா வச்சிருந்த வண்டியேதான். இப்போ டாக்ஸியா ஓடுது. முதல்லே இந்த டாக்ஸிக்கே நான் டிரைவரா வந்தப்போ ஆச்சரியப்பட்டுட்டேன் ஸார்! ஆனா, நம்ப வண்டியில்லே! குழந்தையைத் தடவிக் கொடுக்கிற மாதிரி சும்மா கையை வச்சதுமே ஸர்ர்ர்னு பாயுது சார்!''

என் உடத் படபடப்பு மிதமிஞ்சி விட்டது. கண்கள் இருண்டன. விழுந்து விடுவோமோ என்ற அச்சத்துடன் காரின் கதவைப் பிடித்துக்கொண்டேன். என்ன கொடுமை இது! விதியின் எத்தகைய கோர பரிகாசம்! ஒரு காலத்தில் இந்த வண்டி எனக்குச் சொந்தம். இந்த ஆள் என் ஊழியன். இன்றோ சம்பந்த மற்றவனாக இதையே வாடகை வண்டியாய்க் கொண்டு அதிலேறிச் செல்லும் சந்தர்ப்பம்! இறங்கியதும் பணம் கொடுப்பேன். இந்த டிரைவருக்கு இனாம் தருவேன். என் சொந்தம் இதில் இல்லை. இது இரவல்! என் உடைமையாய் இருந்த ஒன்று இன்று எனக்கு இரவல்.

எப்படியோ ஒருவாறு வண்டியில் ஏறி அமர்ந்தேன். பழகிய அந்த அமைப்பிலே என்னை அறியாமலேயே ஒரு கால் மிடுக்காக இன்னொன்றின் மீது ஏற இருந்த செயலை நிறுத்திக் கொண்டேன். இப்போது என்

## கள்ளனைப் பிடித்த கழுதை!

பாலைவனங்களில் ஒட்டகங்களுடன் திரியும் நாடோடிக் கும்பலுக்கு ஒரு தலைவன் இருந்தான். அவனுடன் நண்பனான ஒரு வைர வியாபாரியும் பயணம் செய்ய நேரிட்டது.

நாடோடித் தலைவன் ஒரு வெள்ளைக் கழுதையும் வைத்திருந்தான். அது மிகவும் புனிதமானது என்றும், அற்புதமான சக்தி வாய்ந்தது என்றும், தன் கும்பலை அவன் நம்ப வைத்திருந்தான். அந்த வெள்ளைக் கழுதைக்கென்று எப்போதும் தனிக் கூடாரம் உண்டு. அதுமட்டுமா? தினமும் இரவு வேளையில் வெள்ளைக் கழுதையின் வாலை நறுமணம் மிக்க வாசனைத் தைலத்தில் தோய்த்தெடுப்பான். தீய சக்திகள், தோஷங்கள் புனிதக் கழுதையைத் தாக்காமல் இருக்கவே அவன் இந்த மாதிரி செய்து வருவதாக நாடோடிகளிடம் நம்பிக்கை.

ஒரு நாள் விடியற்காலையில் கூட வந்த வைர வியாபாரி ஓவென்று அலறினான். அவனுடைய வைரங்கள் கொள்ளை போய் விட்டன! நிச்சயமாக நாடோடிக் கும்பலில் யாரோ தான் வைரங்களைத் திருடிக்கொண்டிருக்கிறார்கள் என்று அவன் கூறினான்.

''கவலைப்படாதீர்கள். என்னுடைய மந்திரக் கழுதை திருடனைப் பிடித்துத் தந்துவிடும்'' என்று ஆறுதல் சொன்ன தலைவன், தன் நாடோடித் தோழர்களை வரிசையாக நிறுத்தி வைத்தான். ''புனித வெள்ளைக் கழுதையின் கூடாரத்துக்குள் நீங்கள் ஒவ்வொருவராகச் செல்ல வேண்டும். ஒருத்தர் கூடாரத்தில் இருக்கும்போது இன்னொருத்தர் புகக் கூடாது. நுழைகிற ஒவ்வொருவரும் கழுதையின் வாலை மூன்று தரம் தொட்டு நீவ வேண்டும். வைரத்தைத் திருடியவன் தொட்டால் கழுதை கத்தும்!'' என்று கூறினான் நாடோடித் தலைவன்.

இதன்படியே ஒவ்வொருவனும் கூடாரத்துக்குள் நுழைந்து திரும்பினார்கள். கழுதை கத்தவேயில்லை. வைர வியாபாரிக்கு வெகு ஏமாற்றம்.

''நல்ல புனிதக் கழுதை! மடக் கழுதை!'' என்று நொந்தான் வியாபாரி. ஆனால் நாடோடித் தலைவன் திருடனைக் கண்டுபிடித்து விட்டான். எப்படி? சொல்லுங்கள் பார்க்கலாம்?



விடை : அடுத்த பக்கம்

கைத்தடி வெறும் கொம்புதான். அதில் தங்கப் பூண் கிடையாது.

என் நிலையை நான் மறப்பது எங்ஙனம்?

''எங்கே ஸார் போகணும்?''

பழைய கேள்வி. எனக்கு உடம்பு குலுங்கி விட்டது. கனவு மீண்டும் கண் முன்னே பிரத்தியட்ச உரு எடுக்கிறதா?

''மயிலாப்பூர், கச்சேரி ரோடு.''

''ரைட் ஸார். வீட்டைச் சொல்லுங்க. வண்டியைக் கூட அங்கேயே வச்சிருக்கேன். ஐயா வேறே டாக்ஸிக்கு அலைய வேண்டாம். இதிலேயே திரும்பி விடலாம். இது ஐயா வண்டிதானுங்களே!''

என் வண்டியா! மரியாதைக்குத்தான் அவன் சொன்னாலும் அந்தச் சொற்களில் என்னுள் புதியதோர் உற்சாகமும் பெருமிதமும் கிளர்ந்தன. மாணிக்கம் கதவை மெதுவாக மூடிவிட்டு முன் ஆசனத்தில் அமர்ந்து 'வாடகைக்கு' என்ற அடையாளச் சின்னத்தைக் கீழே அமுக்கிவிட்டு மீட்டரைப் போட்டுக் கொண்டு வண்டியைக் கிளப்பினான். வண்டி இழைந்து செல்லலாயிற்று. அவன் சற்று நேரம் முன்பு ஓட்டி வந்த வேகம் எங்கே, இப்போதைய மெது எங்கே! எனக்கு வேகம் பிடிக்காதென்று இப்படிப் பக்குவமாய் ஓட்டுகிறான். 'மாணிக்கம்! உனக்குத்தான் இன்னும் என்னிடம் எத்தனை விசுவாசமப்பா!' என் நெஞ்சு அவனை வாழ்த்தியது. கண்கள் அன்புக் கசிவில் ஈரம் கண்டன.

''நீங்க என்னை அனுப்பிச்ச பிறகு ஒரு பிரைவேட் வீட்டிலேதான் முதல்லே வேலைக்குப் போனேன், ஸார்! அப்புறம்தான் டாக்ஸி டிரைவராயிட்டேன்.''

''ஓகோ, அப்படியா?'' இத்தனை நேரம் அவனை விசாரிக்கவே யில்லையே என்ற உணர்வு தைக்கவும் குரலில் அக்கறை காட்டினேன்.

''அதுக்கப்புறம்தான் ஐயா காரை வித்துட்டாப்பலே இருக்குது.''

''ஆமாம்ப்பா.... நிலைமை....''

என்னை முடிக்க விடவில்லை அவன். என் இழிந்த கால நிலைமை அறிந்தவனாதலால் முழு விளக்கத்தின் சிறுமையை எனக்கு அளிக்காமல் உற்சாகமாய், ''ஐயாவுடைய வண்டியை வாங்கினவங்க அதை டாக்ஸியாய் விட்டு, அதுக்கு நானே டிரைவராய் வந்து, ஐயாவுக்குச் சௌகரியமாய் இன்னிக்கு ஏத்திட்டுப் போக முடிஞ்சது ரொம்ப ஆச்சரியமாய் இருக்குது ஸார், இல்லே?'' என்று கேட்டான்.

''ஆமாம்ப்பா. ரொம்ப ஆச்சரியம்தான்!'' என்றேன். குரல் தழுதழுத்தது. அவனைக் கும்பிட வேணும் போல் இருந்தது. மருமகளுக்கு மாமனார் பாரமாகி விட்ட பிறகுகூட முன்னாள் வேலையாள் அன்பு குன்றாமல் இருக்கிறான். பாசத்துக்கு விலை நிலமென்று தனியாய் ஒன்றேது?

போக வேண்டிய வீட்டு இலக்கத்தையும் நான் சொன்ன பிறகு அவன் ''இந்த இடம் நீங்க முந்திப் போய்க்கிட்டிருந்த எந்த இடமும் இல்லே போலிருக்குதே ஸார்? புது நண்பருங்களா?'' என்றான்.

''ஆமாம்.'' மேலே நான் விளக்கவில்லை. தெரிந்த ஒருவரின் சிபாரிசுக் கடிதத்தோடு மயிலைவாசி கணேசன் என்பாரிடம் அவரது சொந்தக் கம்பெனியில் எனக்கு ஒரு வேலை யாசிக்கச் சென்று கொண்டிருக்கிறேன் என்பதை இவனிடம் வெளியிட என்ன இருந்தாலும் மனம் இடம் தரவில்லை. என்னைச் செல்வாக்கின் உச்சத்தில் அறிந்தவன் இந்த மாணிக்கம். பணக்கார நண்பர்களின் வீடுகளுக்கு என்னைக் காரோட்டிச் சென்றவன். ஒரு நூறு ரூபாய் வேலை என் குடும்பத்தின் தற்போதைய நிலைக்கு மகனின் வருமானத்தோடு நல்லதொரு துணையாக அமையும் என்பதை இந்த அன்புடையானிடம் வெளியிடக் கூட நாக்கூசியது. இழிநிலையின் மிகப் பெரிய கொடுமை இத்தகைய மறைப்புக்கள் தாம் என்பதை உணர்ந்து உள்ளே மறுகுவதைத் தவிர வேறென்ன செய்வேன்? எனக்கு ஏன் இத்தகைய கதி வரவேண்டும்? சென்ற காலத்தின் இனிமையே நீடித்திருக்கலாகாதா? கடந்ததன் ஏக்கம் என்னை இரவு பகல் நோகச் செய்யும் வேதனையை யாரிடம் முறையிடுவேன்?

ஆனால் இப்போதைய இந்தச் சவாரி! என் கார், என் டிரைவர். என்னையறியாமல் மீண்டும் கால் மேல் கால் போடும் வாகவும் நிகழ்ந்து விட்டதை இரண்டாம் முறை நான் தடை செய்யவில்லை. வலது கை வெறுங் கோலைத் தடவ, இடக்கை லேசாக மீசையை வருடியது. புற உண்மையின் மாற்றங்களினின்று விடுபட்டுச் சிறிது நேரம் இதயம் பழைய வாழ்வில் சுருங்கிக் கொண்டது. சென்ற காலம் திரும்பி விட்டது. கிழிசல் சட்டைப் பையில் சில்லறையும் சிபாரிசுக் கடிதமும் மட்டும் கொண்டு செல்லும் வெறுங்கை வறியவனில்லை இப்போது நான். என் அருகில் நாகரிகமான 'ஜிப்' தோல் பை இருக்கிறது. என் உடலில் டெர்லினின் சுருக்கமற்ற ஒளி பளிச்சிடுகிறது. மயக்கம் நீண்டது. கண் மூடி எனக்குள் அந்தரங்கமாய் விளைந்த சுகத்தில் ஆழ்ந்திருந்தேன். நெஞ்சப் படபடப்பும் தாழ்வு நிலையை ஏற்க மறுக்கும் புரட்சியின் துடிப்பும் சிறிது சிறிதாய்ச் சமனமுற்று மறைந்தன. நான் மீண்டும் லட்சாதிகாரி. நான் வாழ்வது பொற்பீடத்தில். அதை என்னால் மறக்க

**விடை :** நாடோடித் தலைவன் தன் தோழர்களை மறுபடியும் வரிசையாக நிறுத்தி வைத்து ஒவ்வொருவர் கையையும் முகர்ந்து பார்த்தான். எல்லோர் கையிலும் வாசனைத் தைலத்தின் நறுமணம் வீசியது. ஒரே ஒருத்தன் கையில் மட்டும் அது இல்லை. அவன் தான் திருடன்! புனிதக் கழுதைக்குப் பயந்து கொண்டு அதன் வாலையே அவன் தொடவில்லை. அதுவே அவனைக் காட்டிக் கொடுத்து விட்டது! **— காழி வ. மாணிக்கம்**



''எங்க வீட்டிலே, அப்பா - பிள்ளை ரெண்டு பேருக்குமே வண்டிதான் உயிர்! என் கணவருக்கு ரேஸ் பைத்தியம். குழந்தை, வண்டி இல்லேன்னு பால் சாப்பிட மாட்டான்!''

முடியுமோ? இறந்தது உயிருற்று வந்தாற் போல் சிறு பொழுது எனக்காகக் காலம் பின் நடந்து சென்று, முந்தைய நாளை என்முன் கொணர்ந்து காட்டும் இந்த அதிசயத்தையே, அதன் இனிமையின் லயத்தையே நான் இடையுறாது அநுபவித்துக் கொண்டிருக்க வேண்டும்...

இழைந்து நெளிந்து ஓடிய வண்டியின் தாலாட்டு நின்றது.

''ஸார்!''

திடுக்கிட்டுப் பார்த்தேன். மாணிக்கம் எனக்காகக் கதவைத் திறந்து பிடித்தபடி நின்றிருந்தான். சிறிது நேரம் எனக்கு எதுவுமே புரியவில்லை. கனவோடு இழைந்து விட்ட போதையில் நான் உண்மை உலகுக்கு இறங்கி வரவில்லை. அர்த்தம் புரியாமல் விழித்துப் பார்த்தேன்.

''இறங்கறீங்களா ஸார்?''

''ம்?'' நான் ஏன் வண்டியை விட்டு இறங்க வேண்டும் என்பதே புரியவில்லை.

''நீங்க சொன்ன வீடு வந்துட்டுது ஸார்! இறங்கிப் போய்ப் பேசிட்டு வாங்க. நான் காத்திருக்கிறேன்.''

எனக்கு இன்னும் முழுத் தெளிவு ஏற்படவில்லை. கனவும் நினைவும் ஒன்றிவிட்ட மயக்கம் இன்னும் இழை பிரியவில்லை.

பக்கத்திலிருந்து மெதுவாய்ச் சிரிப்புச் சத்தம் வந்தது. தலையைத் திருப்பினேன். வண்டி நின்றிருந்த இடத்தின் அருகிலே வீட்டின் தோட்டத்து வேலி. அதை அடுத்து வீதி தெரிந்தது. அங்குதான் இரண்டு பேர் என் பக்கம் பார்த்துச் சிரித்தவாறு சென்று கொண்டிருந்தனர். ஒருவனின் பேச்சு என் காதில் விழுந்தது.

''நல்ல ஆளுதான்! டாக்ஸியிலிருந்து இறங்க மனசு வரல்லையாக்கும்!''

அந்த ஏளனத் தொனி நீக்கமற்றதாய்க் காதில் விழவும் துடித்துக் கொண்டு கீழே இறங்கி நின்றேன். முழு விழிப்பு வந்து விட்டாற்போல் என் கண்கள் விரிந்தன.

எனக்கு டாக்ஸியிலிருந்து இறங்க மனம் வரவில்லை! என்ன பேச்சு! ஐயோ, எத்தனை உண்மை! முன்காலச் சொந்தத்தை எண்ணி ஏக்க மயக்கத்தில் வண்டி என்னுடையதெனக் கற்பனை செய்துகொண்டே உள்ளே அமர்ந்திருந்தேனே, எத்தகைய கேலிக்கிடமான பைத்தியக்காரத்தனம்! அது வாடகை வண்டி. இரவல் பொருள். அதனின்று இறங்காமலேயே இருக்க முடியுமா?

சட்டென்று என் நெஞ்சம் ஸ்தம்பித்தது.

இறங்க எனக்கு மனமில்லை! இந்த டாக்ஸியிலிருந்து மட்டும்தானா?

ஏதேதோ எண்ணங்கள் என்னுள் குழம்பின. சென்றதிலேயே ஆழ்ந்திருப்பது மட்டும் அறிவீனமல்லவா, இப்போது இந்த டாக்ஸியிலிருந்து இறங்காமல் இருந்தது போல்? அடைந்ததில் திருப்திகொண்டு இன்று உள்ளதை உண்மையென ஏற்று அடுத்து வருவதை உற்சாகமாய் எதிர் கொள்வதல்லவா தெளிவுற்ற வாழ்க்கை? வாழ்வின் இன்ப துன்பங்கள் அனைத்தும் கடந்து செல்கின்ற இரவல் பொருள்கள்தாமே! அவை ஒவ்வொன்றிறேடும் ஒட்டிக் கொண்டு, 'இதை விட்டுப் பிரிந்து வரமாட்டேன்' என்று அழுதது...! உண்மையாகத்தான் நான் கடந்த ஐந்தாண்டு காலமும் டாக்ஸியினின்று இறங்க மனமில்லாமலே இருந்திருக்கிறேனா?

தெளிவு முழுவதுமாய்ப் பிடிபடவில்லை. ஆனால் உள்ளத்தில் ஆழத்தில் புது விதக் குழப்பங்கள். இந்தக் குழப்பங்களினூடே நன்மை பிறக்கும் என்பதொரு வாக்குறுதி அவற்றில் இருப்பது போல, ஏதையோ புரிந்து கொள்ளத் தொடங்கும் கிளர்ச்சியை இதயத்துள் உணர்ந்து நெடுமூச்செறிந்தேன்.

பையிலிருந்து பர்சை எடுத்தவாறு ''மீட்டரைப் பார்த்துச் சொல்லப்பா, என்ன சார்ஜ்?'' என்றேன் சுருக்கமாக.

''திரும்பி உங்களை வீட்டிலே கொண்டு விட்டுட்டு ஒண்ணு வாங்கிக்கறேன், ஸார்! நீங்க உள்ளே போய் வரவரைக்கும் இங்கேயே காத்திருக்கேன். வெயிட்டிங் சார்ஜ் கூட நீங்க தரவாணாம்.''

''அதெல்லாம் வேணும் மாணிக்கம். அது நியாயமில்லை. நீ என்னைப் பத்திக் கவலையில்லாம கிளம்பிப் போ. நான் வேற டாக்ஸி புடிச்சுக்கிட்டுத் திரும்பிடறேன். நீ இருக்கேன்னு சொன்னதுக்கு ரொம்ப நன்றியப்பா! நீ பிள்ளை குட்டிகளோட நல்லாயிருக்கணும்.''

பணத்தை அவனிடம் கொடுத்து விட்டுப் புது வாழ்வின் வாயிலென அந்த வீட்டினுள் நுழைந்தேன்.

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

## *உங்கள் அழகுக்கு புதுப் பொலிவை அளியுங்கள்!*

# பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகித்தால் முகம் சோபையுடன் வழவழப்பாகத் தோற்றமளிக்கும்

உங்கள் முகத்திற்கு வசீகரிக்கும் பொலிவை அளியுங்கள். நல்ல அழகியாகத் தோற்றமளிக்க விரும்பும் எந்தப் பெண்மணியும் முதலில் செய்ய வேண்டியது அதுதான். எண்ணெய்ப் பசையில்லாத சௌம்யமான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகித்தால் உங்கள் சருமத்திற்கு மிருதுத் தன்மையும் பாதுகாப்பும் கிடைக்கும். அது சருமத்திலுள்ள பெரிய துவாரங்களை மூடி முகத்தில் 'எண்ணெய் வடியும் தோற்றம்' உண்டாகாமல் தடுக்கிறது... முகத்தில் கருப்புப் புள்ளிகள் உண்டாவதிலிருந்து பாதுகாப்பளிக்கிறது. பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமைத் தனியாக உபயோகித்தால் உங்கள் வதனம் இயற்கைப் பொலிவுடன் விளங்கும். இந்தக் க்ரீமைத் தடவி அதன்மீது பவுடர் போட்டுக்கொண்டால் பவுடர் ஒரேசீராகப் படிந்து மணிக்கணக்கில் கலையாமல் இருக்கும்.




**பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகித்து**

**உங்கள் அழகுக்கு மெருகூட்டுங்கள்**

*சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்*
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. வில் இணைக்கப்பட்டது)

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon